# கல்கி

KALKI 14.2.99
ரூ. 4.50

கொலையாளி யார்?
– ஒரிஸ்ஸா முதல்வர் பேட்டி!



# அன்பே மதமானால் அச்சம் ஏது?

– ஒரிஸ்ஸாவிலிருந்து உருக்கமான ரிப்போர்ட்!



# ஸ்ரீ டிராவல்ஸ்


12/A ரெட்ஹில்ஸ் ரோடு, கொளத்தூர், சென்னை - 99.

Ph: 5376620/5584866 Fax: 5584866

E-மெயில் : Sritrave@ md3.vsnl.net.in


## கோடை விடுமுறையை உங்கள் குடும்பத்துடன் களித்து மகிழ

## ஸ்ரீ டிராவல்ஸ் மூலம் இப்பொழுதே திட்டமிடுங்கள்

---

அனல் பறக்கும் கோடையில் குளு குளு மலைப் பிரதேசங்கள்!

**ST 4** புறப்படும் தேதி 21.04.1999

சென்னை - கல்கத்தா - டார்ஜிலிங் - கேங்டாக் (சிக்கிம்) - காத்மாண்டு (நேபாளம்) - வாரணாசி - அலகாபாத் - சென்னை.

பயணத் தொகை ரூபாய் 6,600/- 12 நாட்கள்

---

**ST 5** புறப்படும் தேதி 7.05.1999

சென்னை - ஆக்ரா - டில்லி - சிம்லா - குலு - மணாலி - சண்டிகார் - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - டில்லி - சென்னை.

பயணத் தொகை ரூபாய் 5,600/- 12 நாட்கள்

---

**ST 6** பக்தி மணம் பரப்பும் பரவச இறை உலா!

புறப்படும் தேதி 24.05.1999

சென்னை - காசி - சாரநாத் - அலகாபாத் - ஜம்மு வைஷ்ணவி தேவி - அமிர்தசரஸ் - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - கர்ணபிரயாக் - ருத்ரபிரயாக் - பத்ரிநாத் - கேதாரிநாத் - டில்லி - ஆக்ரா - சென்னை.

பயணத் தொகை ரூபாய் 6,600/- 15 நாட்கள்

---

- அனைத்து இடங்களிலும் தரமான ஹோட்டல்களில் பிரத்தியேக ரூம்கள்
- மூன்று வேளையும் நேர் முழுவதும் தரமான சைவ உணவு
- எல்லா இடங்களிலும் நுழைவுக் கட்டணம் உட்பட
- நட்சத்திர ஹோட்டலில் பிரத்தியேக விருந்து
- ஊர் சுற்றி பார்க்க தரமான பஸ் வசதி

கோடையில் கடுமையான நெரிசல் இருக்கும் எனபதால் பயணத் தேதிக்கு இரண்டு மாதங்களுக்கு முன்பே முன் பணம் ரூபாய் 3,000/- செலுத்துபவர்களுக்கு மட்டுமே கண்டிப்பாக இடங்கள் கிடைக்கும்

| அனைத்து கிரெடிட் கார்டுகளும் ஏற்றுக் கொள்ளப்படும். | L.T.C. வசதி உண்டு |
|---|---|

(இரயிலில் II tier A/C வேண்டுபவர்களுக்கு பிரத்யேக வசதி செய்து கொடுக்கப்படும்)

ஒருமுறை ஸ்ரீ டிராவல்ஸ் மூலம் பயணம் செய்திடுங்கள்

சுகமான அனுபவம் உங்களுக்கு காத்திருக்கிறது

ஏமாற்றத்தைத் தவிர்க்க! உடனே முந்துங்கள்!

மகள் எஸ்தருடன் கிளாடிஸ்




# “அவர் மக்களுக்குச் சேவை செய்தார்! நான் அவருக்குச் சேவை செய்தேன்!”

**பா**ரிபடா பஸ் நிலையத்தை ஒட்டியிருக்கிறது. அண்மையில் தமது இரண்டு பச்சிளம் பாலகர்களோடு எரித்துக் கொல்லப்பட்ட சமூக சேவகரான கிரஹாம் ஸ்டூவர்ட் ஸ்டெயின்ஸின் வீடு. (நமது பத்திரிகைகளும் டீவிக்களும் குறிப்பிடுவதுபோல் அவர் பாதிரியாரும் அல்ல; டாக்டரும் அல்ல. சமூக-சேவகர் மட்டுமே!)

வீடு அமைந்திருக்கும் பரந்த மைதானத்தின் நுழைவுப் பகுதியில் எளிமையான (பிராட்டஸ்டண்ட்) சர்ச். தள்ளி வீடு. ஸ்டெயின்ஸின் கொலைக்குப் பிறகு வீட்டு வாசலில் துப்பாக்கி ஏந்திய ஆண், பெண் காவலர்கள். திருமதி கிளாடிஸ் ஸ்டெயின்ஸிடம் துக்கம் விசாரிக்க வந்து போய்க் கொண்டேயிருக்கும் மக்கள். சில்லென்ற தட்ப வெப்பநிலை. காற்று வீசாததால் அசையாமல் நிற்கும் மரங்கள். இந்தச் சூழ்நிலையே திருமதி ஸ்டெயின்ஸின் துக்கத்தில் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறதோ என்று தோன்றியது.

நாம் அங்கு சென்றிருந்தது ஸ்டெயின்ஸ் கொலை செய்யப்பட்ட ஆறாவது தினம். இந்த நிலையில் நாம் திருமதி கிளாடிஸிடம் என்ன கேட்பது? எப்படிப் பேசுவது என்று தயங்கியபடியே உள்ளே நுழைந்தோம்.

வரவேற்பறையில் தம்மோடு கொல்லப்பட்ட இரு பாலகர்களோடும் நின்று கொண்டிருக்கிற ஸ்டெயின்ஸின் புகைப்படம் ஒரு மேஜையில் வைக்கப்பட்டு பூக்கள் தூவப்பட்டிருந்தன. படத்துக்குப் பின்னாலிருக்கும் சுவரில் 'Long live Graham Stuart Staines with his

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ✉ மெயில் : kalkiweekly@vsnl.com

# சொர்க்கத்தின் பக்கத்தில்...

ஸ்டெயின்ஸ் தம்பதியின் இரண்டாவது குழந்தை பிலிப் (வயது 10) அக்கா எஸ்தரோடு ஊட்டியில் படித்தவன். ஆறரை வயதான கடைக்குட்டி மகன் திமோத்தி அம்மாவிடம் வீட்டிலேயே படித்து வந்தான்.

விடுமுறைக்காக பாரிபடா வந்திருந்த பிலிப், அப்பாவோடு மனோகர்பூர் செல்ல ஆசைப் பட்டிருக்கிறான். அவனுக்குத் துணையாக இருக் கட்டுமே என்று, வரமாட்டேன் என்று சொன்ன திமோத்தியையும் வற்புறுத்தி அழைத்துச் சென்றிருக்கிறார் ஸ்டெயின்ஸ்.

மலைப் பகுதிகளில் உள்ள வித்தியாசமான கற்களைச் சேகரிப்பதில் ஆர்வமுள்ளவன் பிலிப். அப்பாவோடு மனோகர்பூர் சென்ற பிலிப், அங்கும் கற்களைத் தேடி மலைகளில் அலைந் திருக்கிறான்.

அவனுடன் துணைக்குச் சென்ற உள்ளூர் வாசியொருவர் 'இருட்டி விட்டது.. போதும் வா. மீதியை நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்!' என்று அழைத்தபோது ஒரு சிறு குன்றின் உச்சி மீதிருந்த பிலிப், 'சொர்க்கத்துக்குப் பக்கத்தில் வந்து விட்டதுபோல் இருக்கிறது!' என்றானாம்.

கடைக்குட்டி திமோத்திக்கு ரோஜாப் பூ என்றால் கொள்ளைப் பிரியம். விதவிதமான ரோஜாக்



• ஸ்டெயின்ஸ் - குடும்பத்துடன்

'two sons' என்று எழுதப் பட்ட பேனர்.

அமைதியாக உட்கார்ந்திருந்தார் திருமதி கிளாடிஸ். நம்மைப் பார்த்ததும் கை கூப்பி "நமஸ்கார்" என்றார். பக்கத்தில் பதின்மூன்று வயது மகள் எஸ்தர்.

"தம்மைச் சிலுவையில் அறைந்தவர் களை மன்னிக்கச் சொன்னார் இயேசு. மகாத்மா காந்தியும் அப்படியே சொன்னார். நீங்களும் அப்படியே சொல்லியிருக்கிறீர்கள். உங்களின் இந்த வாசகம்தான் எங்களைச் சென்னையிலிருந்து இத்தனை தூரம் வந்து உங்களைப் பார்க்கச் செய்து, உங்கள் துக்கத் திலும் பங்கெடுத்துக்கொள்ளச் செய்தது. வெறும் பத்திரிகையாளர்களாக் மட்டுமல்ல; சக மனிதர்கள் என்கிற அடிப் படையிலும் இங்கே வந்திருக் கிறோம்!" என்று நாம் பேச் சைத் துவங்கியபோது, திருமதி கிளா டிஸ் நெகிழ்ந்துபோய்விட்டது தெரிந்தது.

"அவர் (அந்தக் காலத்து இந்தியப் பெண் களைப் போல கணவரை "அவர், அவர்' என்றுதான் சொல்கிறார் திருமதி கிளாடிஸ். மகள் எஸ்தர் அருகிலிருக்கும்போது 'இவ ளது அப்பா' என்று குறிப்பிடுகிறார். மறந்தும் பெயரைச் சொல்லவில்லை. 'ஆஸ்திரேலியப் பெண்மணியாக இருந்தாலும் இங்கே வந்த பிறகு முழுக்க முழுக்க இந்தியப் பெண் ணாகவே மாறி விட்டார். சேலை தவிர வேறொரு ஆடையை அவர் உடுத்தி நாங்கள் பார்த்ததேயில்லை' என்றார்கள் உள்ளூர்க் காரர்கள்) இதுவரை எங்களோடு இருந்தார்.

64-ம் பக்கத்தில் ஓர் அறிவிப்பு உள்ளது. அதைப் பார்த்துவிட்டு 74ம் பக்கத்துக்குப் போகவும்!

களைக் கண் டால் வீட்டுக்குப் பறித்துக் கொண்டு வந்து விடுவானாம். அவன் கடைசியாகப் பறித்து வந்த ரோஜாவை அவ ளது நினைவாகப் பாதுகாத்து வருகிறார் திருமதி கிளாடிஸ்.

"ஜனவரி பதினெட்டாம் தேதியன்று ஸ்டெயின் ஸின் பிறந்த நாள். அன்று அவர் குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு என் வீட்டுக்கு வந்திருந்தார். என் குழந்தைகளோடு அவர்களும் சாப்பிட்டுக் கொண்டு, விளையாடிக் கொண்டிருந்தது இன்னும் என் கண் களை விட்டு அகலவேயில்லை!" என்றார், மயூர்பஞ்ச் (தலைநகரம்தான் பாரிபடா) மாவட்டக் கலெக்டர் ஆர். பாலகிருஷ் ணன்.



• கிளாடிஸ் வசிக்கும் வீடு



• கார்த்திகேயன்

இப்போது இறைவனோடு இருக்கிறார். எங்களை விட்டுப் பிரிந்திருக்கிறார். அவ்வளவே. மற்றபடி அவர் மறைந்து போய் விட்டார் என்று நான் நினைக்கவேயில்லை. நடப்பதெல்லாம் இறைவனின் சித்தப்படியே நடக்கிறது. அவரைத் தம்முடன் அழைத்துக் கொள்வதற்கு அவர்களைக் (கொலை காரர்களை) கருவிகளாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார் இறைவன். எல்லாம் இறைவனின் விருப்பப்படியே நடக்கிற போது, அதைத் தவறென்று நாம் எப்படி விமர்சிக்க முடியும்? யார் மீது கோபப்பட முடியும்?"

திருமதி கிளாடிஸ் இதை மெல்லிய குர லில்தான் சொன்னார். ஆனால் அதில் அழுத்தமும் அசைக்க முடியாத இறை நம்பிக்கையும் தென்பட்டதே தவிர, போலித் தனம் தெரியவில்லை.

"இதோ நீங்கள் உட்கார்ந்திருக்கிறீர்களே, இதே இடத்தில்தான் 1981-ல் நான் அவரை முதன்முதலில் சந்தித்தேன்..." என்று சிறிது இடைவெளி விட்ட அவரின் மனத்தில் பழைய நினைவுகள் வந்திருக்க வேண்டும்.

"நான் முதன்முதலில் இந்தியாவுக்கு வந்தபோது, மனிதக் கழிவுகளை மனிதனே அள்ளுகிற நிலையைப் பார்த்தேன். எனக்கு அது அதிர்ச்சியாக இருந்தது. அச்சமயத் தில்தான் ஆஸ்திரேலியாவிலிருந்து வந்த அவர், இங்குள்ள தொழுநோயாளி களுக்குச் சேவை செய்கிறார் என்று கேள்விப்பட்டுச் சந்தித்தேன். பிறகு 1983-ல் எங்கள் திருமணம் ஆஸ்திரேலி யாவில் நடந்தது. அப்புறம் நானும் அவருடன் இங்கேயே வந்து தங்கி விட்டேன். அவர் முழுக்க முழுக்க சமூக சேவையில் ஈடுபட் டிருந்தார். நான் அவரது அலுவலகப் பணிகளில் உதவினேன். வீட்டுப் பொறுப்புகள், சமையல், குழந்தைகளின் படிப்பு என்று கவனித்துக் கொண்டு ஒரு முழுமையான இல்லத் தரசியாகவே வாழ்ந்து கொண்டிருந்தேன்."

"ஸ்டெயின்ஸின் சமூகசேவை பற்றிச் சொல்லவே தேவையில்லை. கூடவே அவர் மனோகர்பூர் பகுதியிலுள்ள மலைவாழ் மக் களை மதமாற்றம் செய்து கொண்டிருந்தார் என்றும் சிலர் குற்றம் சாட்டுகிறார்களே?"

"யாரையும் அவர் மதம் மாறச் சொன்ன தேயில்லை. அதற்காக அவர் பாடுபடவும் இல்லை. அவரது முழு கவனமும் மிக மிகப் பின்தங்கிய மக்களுக்கும் தொழுநோயாளி களுக்கும் சேவை செய்வதில்தான் இருந்தது."

"கொடூரமான இந்தச் சம்பவத்துக்குப் பிறகும் நீங்கள் தொடர்ந்து இங்கேயேதான் இருக்கப் போகிறீர்களா, அல்லது வேறு ஏதேனும் திட்டம் வைத்திருக்கிறீர்களா?"

"இந்திய நாட்டையும் இந்திய மக்களையும் நான் மிகவும் நேசிக்கிறேன். இது என்னுடைய பூமி. என்னுடைய மக்கள் இங்கேதான் இருக்கிறார்கள். என்னுடைய உடம்பில் எத்தனை காலத்துக்குச் சக்தி இருக்கிறதோ, அவ்வளவு காலத்துக்கும் அவர் விட்டுச் சென்ற சேவையை இங்கேயேதான் தொடருவேன். அவரது மறைவுக்குப் பிறகு, தொழுநோயாளிகள் மறுவாழ்வு இல்லத்துக்கு நான் சென்றிருந்தேன். அப்போது அவர்கள் என்னைக் கட்டிப் பிடித்துக் கொண்டு கதற ஆரம்பித்து விட்டார்கள். என்னுடைய கணவர் மறைந்து விட்டதாக அவர்கள் நினைக்கவில்லை. தங்களது சொந்த சகோதரர் மறைந்து விட்டதாகவே அழுதார்கள். அவர்களை விட்டு விட்டு நான் எங்கே போய் விட முடியும்? அவர்கள்தான் எனது உற்றார்; உறவினர்!"

"உங்கள் குடும்பப் பின்னணி பற்றி ஏதும் சொல்ல முடியுமா?"

"இவள் (அருகிலிருக்கும் மகள் எஸ்தரைச் சுட்டிக்காட்டி) அப்பாவை மணந்து கொண்ட பிறகு எனக்கு எல்லாமே அவர்தாமே! அதனால் என் குடும்பப் பின்னணியைப் பற்றிச் சொல்லுவதைவிட அவர் குடும்பப் பின்னணியைப் பற்றிச் சொல்வதுதான் சரியாக இருக்கும் இல்லையா..." என்று சிறிது மௌனம் காத்துத் தொடர்கிறார்.

"அவர் மிகவும் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். ஓர் அண்ணன்; ஒரு தங்கை. அபாரமான புத்திசாலி. பிரமாதமாகப் படிப்பார். வீட்டு வேலைகளில் அம்மாவுக்கு ஒத்தாசையாக இருப்பார். படிக்கும் போதே வேலைக்குப் போய் சம்பாதிக்கவும் செய்தார். பிறருக்கு உதவியாகவும் இருந்தார். புள்ளிப் படிப்புக்குப் பிறகு அக்கவுண்டன்ஸி படித்தார். தமது 24-வது வயதிலேயே பம்பாய்க்கு வந்திருக்கிறார். பிறகு 1965-ல் இங்கு வந்து செட்டில் ஆகி விட்டார். பிறகு அவருக்கு உறுதுணையாக நானும்!"

# ஸ்டெயின்ஸின் சேவைக்கு நூறாண்டுப் பின்னணி

**பா**ரிபடாவில் உள்ள, ஸ்டெயின்ஸ் பணியாற்றிய தொழுநோய் மிஷனரிக்கு நூறாண்டு காலச் சரித்திரம் இருக்கிறது. ஆஸ்திரேலியா குயின்ஸ் மிஷனரியைச் சேர்ந்த கட்டே ஆலன்பி என்பவர் 1895-ல் பாரி படாவுக்கு வந்து 'இவாஞ்சலிகல் மிஷனரி'யை ஆரம்பித்திருக்கிறார்.

பாரிபடா சமஸ்தானத்தின் ராஜாவான ஸ்ரீ பூர்ண சந்திர மஹாராஜா 1897-ல் பிச்சைக்காரர்களுக்காக ஒரு மறுவாழ்வு இல்லத்தைத் துவங்கியிருக்கிறார். தொழுநோயாளிகளுக்கும் அங்கே இடமளித்திருக்கிறார்கள்.

தொழுநோயாளிகளுக்குப் பரிவோடு சேவை செய்து வந்த கட்டே ஆலன்பியிடம் தாம் ஆரம்பித்த மறுவாழ்வு இல்லத்தை ஒப்படைத்த மகாராஜா, தேவையான எல்லா உதவிகளையும் செய்து வந்திருக்கிறார்.

பிறகு தொழுநோயாளிகள் மட்டுமல்ல; அவர்களின் குழந்தைகளும் சமூகத்தால் ஒதுக்கப்படுவதை உணர்ந்த மகாராஜா அந்தக் குழந்தைகளுக்கென்று தனியாக ஓர் இல்லத்தை ஆரம்பித்து, அவர்களுக்குப் படிப்பும் கைத்தொழிலும் கற்றுத் தர ஏற்பாடு செய்திருக்கிறார். அப்படிப்பட்ட பெண் குழந்தைகளுக்குக் கல்யாண வயது வந்ததும் மகாராஜாவே கன்னிகாதானம் செய்து, கல்யாணம் செய்து வைத்து சீர் சௌந்திகளையும் செய்திருக்கிறார். (இப்போதும் அது அனாதை இல்லமாகப் பாரிபடாவில் செயல்பட்டு வருகிறது. மாவட்டக் கலெக்டர் கன்னிகாதானம் செய்கிறார். மாவட்ட நிர்வாகம் நல்ல மாப்பிள்ளை களைத் தேடி சீர், சௌந்திகளோடு கல்யாணம் செய்து வைக்கிறது!)

கட்டே ஆலன்பியும் அவரது கணவர் ஒ. லெஹி என்பவரும் தொழுநோயாளிகள் சேவையில் ஈடுபட்டிருந்தபோது, உடல்நிலை பாதிக்கப்பட்ட லெஹி, ஆஸ்திரேலியா சென்றுவிட்டார். கட்டே ஆலன்பி தமது இறுதிக்காலம்வரை இங்கேயே தங்கியிருந்து சேவை செய்தார்.

அடுத்து வந்த மிஸ் ஆலின் அம்லார்ன் என்பவர் 1984 வரை சேவை செய்தார். 1965-ல் ஸ்டெயின்ஸ் இங்கே வந்தார். புற்று



• ஸ்டெயின்ஸ் பணியாற்றிய தொழுநோயாளிகள் இல்லம்



• குத்லுடு



• பத்மாமுண்டா



• கோவர்தன்

நோய் பாதிப்பு காரணமாக ஆலின் ஆஸ்திரேலியாவுக்குச் சென்றுவிட, ஸ்டெயின்ஸ் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

தொழுநோயாளிகளுக்கும் சிகிச்சையளிப்பதோடு இவர்கள் நின்று விடுவதில்லை. அவர்களின் மறு வாழ்வுக்கும் ஏற்பாடு செய்கிறார்கள். பாய் முடைதல், விவசாயம் செய்தல் போன்றவற்றையும் மிஷனரிக்குச் சொந்தமான இடத்தில் செய்ய வைத்து, அவர்களைச் சுய உழைப்பில் சாப்பிடுபவர்களாகவும் ஆக்குகிறார்கள்.

இதன் அடிப்படையில், ஸ்டெயின்ஸ் பால் பண்ணை ஒன்றைத் துவங்கியபோது, தொழுநோயாளிகள் பராமரித்துக் கறக்கும் பாலை நாம் வாங்கி உபயோகிப்பதா என்று உள்ளூர்வாசிகள் அருவருப்படைந்திருக்கிறார்கள்.

"தொழுநோய் தொற்றுநோய் அல்ல!" என்பதை மக்களிடம் எடுத்துச் சொல்லி அவர்களின் மனத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக மாற்றி, இந்தப் பண்ணையிலிருந்து வரும் பாலை வாங்கி உபயோகிக்கச் செய்திருக்கிறார் ஸ்டெயின்ஸ்.

தொழுநோயாளர்கள் மறுவாழ்வு இல்லத்துக்கு நாம் சென்றபோது, அங்கே சிகிச்சையும் மறுவாழ்வும் பெற்று வரும் குத்லுடு, பத்மா முண்டா, கோவர்தன் பெஹ்ரா ஆகியோர், "இனி நாங்கள் அந்த அம்மாவைத்தான் (திருமதி கிளாடிஸ்) நம்பியிருக்கிறோம்!" என்று சொன்னார்கள்.

ஸ்டெயின்ஸின் எளிமை பற்றி வியக்காதவர்களே இல்லை. ஷூ பிய்ந்து போனால்கூட உடனே தூக்கி எறிந்து விட மாட்டாராம். தைத்து உபயோகிப்பாராம். ஒருமுறையல்ல; இனி மேல் தைக்கவே முடியாது என்கிற நிலை வரும் வரை மீண்டும் மீண்டும் தைத்துத் தைத்து உபயோகிப்பாராம்!

இவர் ஆஸ்திரேலியன் ஆயிற்றே என்று யாராவது 'குட்மார்னிங்' என்று சொன்னால்கூட இவர், இரு கைகளையும் கூப்பி 'நமஸ்கார்' என்றுதான் பதிலுக்குச் சொல்லுவாராம். உள்ளூர் மொழியில் மட்டுமல்ல; இவர் கொலையுண்ட பக்கத்து மாவட்டமான கியோஞ்ஜர் பகுதியிலுள்ள மனோகர்பூர் மலைவாசிகளின் மொழியையும் மிகச் சரளமாகப் பேசுவாராம். அம்மொழியில் அம்மக்களோடு சேர்ந்து பாடி ஆடுவாராம்.

அந்த மலைவாசிகளுக்கு ஸ்டெயின்ஸ் படிப்பறிவு கொடுத்து உதவியதால்தான் அவர்களின் வாழ்க்கை ஓரளவாவது மேம்பட்டதாகச் சொல்கிறார்கள். தங்களுக்கு அடிமைகளாக இருந்த மலைவாசிகள் ஸ்டெயின்ஸின் வரவால் சமூக அளவில் தலை நிமிர ஆரம்பித்தது மற்ற ஜாதியினருக்கு எரிச்சலை உண்டாக்கியதாகவும் சொல்கிறார்கள்!

அம்மாவுக்குப் பக்கத்தில், அப்பாவின் நினைவுகளோடு அம்மா பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த சிறுமி எஸ்தரிடம் (ஊட்டியில் எட்டாவது படிக்கிறாள்) "நீ என்னவாக ஆசைப்படுகிறாய்?" என்றோம்.

"டாக்டராகி மக்களுக்குச் சேவை செய்ய ஆசை. நான் இப்படி நினைத்தாலும் இறைவன் எப்படி நினைத்துக் கொண்டிருக்கிறானோ தெரியாது. இறைவனின் விருப்பமும் இருந்தால் நான் நிச்சயம் டாக்டராவேன்!" என்றாள் அந்தச் சிறுமி.

"She is an amazing lady" என்று திருமதி கிளாடிஸைப் பற்றி நம்மிடம் குறிப்பிட்டார் மனித உரிமைக் கமிஷனின் தலைவர் டி.ஆர். கார்த்திகேயன். கிளாடிஸ் மட்டும் தானா? அந்தச் சிறுமியும்தான்!

**கொலையின் பின்னணி என்ன? – பக்.7**

# கொடூரக் கொலையின் பின்னணி என்ன?

• மனோகர்பூரில் ஸ்டெயின்ஸ் எரித்துக் கொல்லப்பட்ட இடம் (படம் நன்றி : டெலிகிராஃப்)



• தாராசிங்

“நடக்கக் கூடாதது நடந்து விட்டது; அனைவரும் வெட்கித் தலைகுனிய வேண்டிய சம்பவம் இது!” – திருமதி கிளாடிஸ் ஸ்டெயின்ஸை அவரது இல்லத்தில் சந்தித்துப் பேசி விட்டு வெளியில் வந்தவுடன் டி.ஆர். கார்த்திகேயன் நம்மிடம் சொன்ன வார்த்தைகள்தான் இவை. மனித உரிமைக் கமிஷனின் தலைவரான கார்த்திகேயன் குரலில் துக்கம் இழையோடியதை வெளிப்படையாகவே உணர முடிந்தது.

“பாரிபடா (பாரிபடா என்றால் தண்ணீர் நிறைந்த இடம் என்று அர்த்தம்) வில் உள்ள ரோட்டரி சங்கத்தின் பொருளாளர் நான். செயலாளராக ஸ்டெயின்ஸ் இருந்தார். அவர் பொறுப்பேற்றதும் மூன்றாண்டுகளாக முடிக்கப்படாமலிருந்த ஆடிட்டை மூன்றே நாட்களில் முடித்துக் கொடுத்தார். மிகச் சிறந்த உழைப்பாளி. அவர் மறைந்ததும் ஒரு கவரை எடுத்து என்னிடம் கொடுத்தார் அவரது மனைவி. ரோட்டரி சங்கத்தின் கணக்கு வழக்குகளெல்லாம் அத்தனை துல்லியமாக அதில் எழுதப்பட்டிருந்தன. சில்லறைக் காசுகள் உள்பட அத்தனையும் சரியாக அந்தக் கவரில் இருந்தன. அத்தனை சுத்த மானவர் அவர்!” என்றார், பாரிபடா நகரின் பிரபல டாக்டரும் தொழுநோய் மையத்தில் மருத்துவம் பார்ப்பவருமான பினோத் கிஷோர் தாஸ்.

“அவர் ஒரு ஜெண்டில்மேன். அவரிடமிருந்து நாமெல்லாம் கற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்கள் ஏராளமாக இருக்கின்றன.



• தீனா கிருஷ்ணா



• ஜீபன் குமார் ஷாஹு



• பினோத் கிஷோர் தாஸ்



• அபனி மொகந்தா

அவர் கடவுளின் மகன்தான் என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். அப்படிப் பட்ட ஒருவர் இப்படியொரு கொடூரமான முறையில் கொலை செய்யப்பட்டார் என்பது – அதுவும் மதச்சார்பில்லாத நமது நாட்டில் இப்படி நடந்ததென்பது நமக்கு மட்டுமல்ல; எதிர்காலச் சந்ததிக்கும் சேர்த்தே அவமானம்!" என்றார் பாரிபடா நகரம் அமைந்துள்ள மயூர் பஞ்ச் மாவட்ட பி.ஜே.பி. பொதுச் செயலாளரான ஜீபன் குமார் ஷாஹு.

"எங்கள் பாரிபடாவின் மகாராஜா ஸ்ரீ பூர்ணச்சந்திர மகாராஜாவின் மறைவுக்கு அடுத்தபடியாக ஸ்டெயின்ஸின் இறுதி ஊர்வலத்தில்தான் அத்தனை கூட்டம் கூடியது!" என்று சொன்னார் பாரிபடா மாவட்ட பஞ்சாயத்துத் துணைத் தலைவர் பீரோ பாலா.

இப்படிப்பட்டதொரு அப்பழுக்கில்லாத சமூக சேவ

— ஒரிஸ்ஸா முதல்வர் பேட்டி

ஒரிஸ்ஸாவின் வடக்கு எல்லையில் – மே. வங்கம், பீகார் எல்லைகள் சந்தித்துக் கொள்கிற இடத்துக்குப் பக்கத்தில் இருக்கிறது பாரிபடா. 30.1.99 காலை பத்தரை மணி வரையில் நாம் இங்கேதான் இருக்கிறோம். அன்று மாலை 4.15 மணிக்கு ஒரிஸ்ஸா முதல்வர் ஜே.பி. பட்நாயக் நமக்கு பேட்டியளிக்க நேரம் ஒதுக்கியிருந்தார். பாரிபடாவிலிருந்து 272 கி.மீ. பயணம் செய்து மாநிலத் தலைநகரான புபனேஸ்வரிலுள்ள முதல்வரின் இல்லத்துக்கு வர வேண்டும். அவசர அவசரமாகப் புறப்பட்டு வந்தோம். அப்படியும் மாலை 4.25க்குத்தான் முதல்வரின் இல்லத்தை அடைய முடிந்தது. எங்களை எதிர்பார்த்துக் காத்திருந்த முதல்வர், இனி நாங்கள் வரப் போவதில்லை என்று தீர்மானித்து, வேறொரு நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்காக வெளியில் வந்து காரேறப் போகும் சமயம், பரபரப்போடு முதல்வரின் இல்லத்துக்குள் நுழைந்தோம். நம்மைக் கண்டதும் தாமதத்துக்கான நியாயத்தைப் புரிந்து கொண்டு தமது அறைக்குள் அழைத்துச் சென்று, ஐந்து நிமிடங்கள் மட்டுமே ஒதுக்க முடியும் என்று நம்மிடம் பேசினார்.

"கொலையாளி என்று கருதப்படுகிற தாராசிங், பஜ்ரங் தளத்துடன் தொடர்புடையவன் என்று ஒருபுறமும் இ. காங்கிரஸுடன் தொடர்புடையவன் என்று மறுபுறமும் சொல்லப்படுகிறது. எது உண்மை?"

"அவன் பஜ்ரங்தளத்தோடு தொடர்புடையவன் என்பது உறுதியாகி விட்டது. அவனுக்கும் காங்கிரஸுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது."

"கொலை நடந்த மனோகர்பூர் பகுதியில் மதமாற்றம் நடைபெறுவதாகச் சொல்கிறார்களே?"

"இருபது ஆண்டுகளுக்கு முன்புதான்



• பட்நாயக்

# "கொலையாளி பஜ்ரங் தளத்தைச் சேர்ந்தவன்தான்!"

கரான ஸ்டெயின்ஸ், தமது இரு மகன்களுடன் உயிரோடு எரித்துக் கொல்லப் பட்டதற்கு என்னதான் காரணம்? இதுதான் மிகப் பெரிய கேள்விக் குறி.

"ஸ்டெயின்ஸைக் கொல்வதற்கு இப்படியொரு கொடூரமான வழியைத் தேர்ந்தெடுத்திருக்க வேண்டிய அவசியமே இல்லை. ஒரு சாக்லேட்டில் விஷம் தடவிக் கொடுத்திருந்தாலே போதும்! யார் எதைக் கொடுத்தாலும் சந்தோஷமாக வாங்கிச் சாப்



• டாடா சுமோவின் சாவியை கிளாடிஸிடம் தருகிறார் கலெக்டர்; அருகில் மாவட்ட எஸ்.பி.

நடந்ததே தவிர, இப்போது நடப்பதாக எங்கள் கவனத்துக்கு வரவில்லை."

"கொலை நடந்த பகுதியில் சட்டம் - ஒழுங்கைப் பராமரிக்க என்ன நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கிறீர்கள்?"

"அங்கு மட்டுமல்ல; அதைச் சுற்றியுள்ள சென்சிடிவ் ஏரியாக்கள் எல்லாவற்றிலும் தீவிரமான கண்காணிப்புக்கு ஏற்பாடு செய்திருக்கிறோம்."

"தாராசிங் இன்னும் பிடிபடவில்லையே?"

"இதுவரை ஐம்பத்து மூன்று பேரைக் கைது செய்திருக்கிறோம். அவன் தலைக்கு ஒரு லட்சம் ரூபாயை அறிவித்திருக்கிறோம். அரசு எல்லா முயற்சிகளையும் எடுத்துக் கொண்டுதான் இருக்கிறது."

"கொலையுண்ட ஸ்டெயின்ஸின் குடும்பத்துக்கு என்ன செய்யப் போகிறீர்கள்?"

"ஸ்டெயின்ஸ் செய்த சமூகப் பணிகளை அவரது மனைவி தொடர்ந்து செய்வதற்கான எல்லா உதவிகளையும் அரசு செய்யும். அதன் முதல் கட்டமாகத்தான் திருமதி கிளாடிஸுக்கு டாடா சுமோ ஒன்று அரசு அளித்திருக்கிறது. இன்று காலையில் பாரிபடாவில் நடந்த இந்த நிகழ்ச்சியை நீங்களே பார்த்திருப்பீர்களே!" என்றார் முதல்வர்.

நம்மூரில் ஒருவருக்கு டாடா சுமோ ஒன்றை அரசு அளிக்கிறது என்றால், குறைந்தபட்சம் ஓர் அமைச்சராவது சென்றுதான் சம்பந்தப்பட்டவரிடம் கார் சாவியை வழங்குவார். இந்த நிகழ்ச்சி ஏகப்பட்ட விளம்பரங்களோடு ஒரு விழாவாகத்தான் நடக்கும்!

ஆனால் அங்கே? மாவட்ட கலெக்டர் ஆர். பாலகிருஷ்ணன் (அட, நம்ம மதுரைக்காரருங்க!) போலீஸ் எஸ்.பியுடன் கிளாடிஸின் வீட்டுக்குச் சென்று, சர்வ சாதாரணமாகச் சாவியை வழங்கினார். அரசியல்வாதிகள் யாரும் மருந்துக்குக்கூட வரவில்லை. அதற்கு நாம் மட்டும்தான் சாட்சி!

பிடக் கூடியவர் அவர். இது எல்லோருக்குமே தெரியும்!" என்று நம்மிடம் ஒரு சஸ்பென்ஸ் வைத்தார், பாரிபடா நகரின் வழக்குரைஞரான பிபு பிரசாத்.

அவரே சஸ்பென்ஸை உடைக்கட்டும் என்று நாம் மௌனமாகக் காத்திருந்தோம்.

"ஆஸ்திரேலிய நாட்டைச் சேர்ந்த ஒருவர் - அதுவும் அவரது இரு பாலகர்களோடு சேர்த்துக் கொல்லப்பட்டால்தான் உலகளாவிய கவனத்தைப் பெற முடியும். அதன் மூலம் இந்த அரசுக்கு ஒரு நெருக்கடியை உருவாக்க முடியும் என்று நினைத்தவர்கள்தான் இப்படிச் செய்திருக்கிறார்கள். அதுவும் அவர்கள் வேனுக்குள் தூங்கிக் கொண்டிருந்தபோது நெருப்பு வைத்துக் கொன்றிருக்க முடியாது. அடித்துக் கொன்றுவிட்டுப் பிறகுதான் தீ வைத்திருக்க வேண்டும்!" என்றார் பிபு பிரசாத்.

"சரி, இதை யார் செய்திருப்பார்கள் என்று நீங்கள் கருதுகிறீர்கள்?"

"அது எப்படி எனக்குத் தெரியும்? நடந்தவற்றை வைத்து எனது ஊகத்தைச் சொன்னேன். அவ்வளவுதான்!" என்றார் அவர்.

பிபு பிரசாத் இப்படிச் சொன்னாலும் அனைவருமே கை நீட்டிக் கொலைக்குற்றம் சாட்டுவது தாராசிங் என்கிற கிரிமினலைத்தான். இவனது நிஜப் பெயர் ரபீந்திர குமார் பால்.

உத்தரப் பிரதேசத்திலுள்ள இட்டாவா நகரைச் சேர்ந்த இவன், முன்பு ஒரு ஷூ கம்பெனியில் வேலை பார்த்தவன். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, இப்போது கொலை நடந்த மனோகர்பூருக்கு அருகிலிருக்கும் தாகூர் முண்டா என்கிற பகுதிக்குக் குடி பெயர்ந்தான்.

முப்பத்திரண்டு வயதாகும் இவன், முன்பு சிறு சிறு திருட்டுகளில்தான் ஈடுபட்டு வந்தான். பிறகு அரசியல்வாதிகளின் தொடர்பும் மஹந்த் என்கிற அப்பகுதியிலுள்ள ஒரு ஜாதியாரின் ஆதரவும் கிடைக்கவே, கொஞ்சம் கொஞ்சமாகத் தனது கிரிமினல் நடவடிக்கைகளை விஸ்தரித்துக் கொண்டே வந்தானாம்.

அவன் வசிக்கும் பகுதிகளிலுள்ள வயதான மாடுகளை அடிமாடுகளாக மேற்கு வங்கத்துக்கு வாங்கி அனுப்பிக் கொண்டிருந்தார்கள் முஸ்லிம் வியாபாரிகள். இந்தப் பசுவதையைத் தடுக்க நினைத்த பஜ்ரங்தள்காரர்கள் இவனைப் பயன்படுத்த ஆரம்பித்தார்களாம்.

அதாவது, லாரிகளில் ஏற்றி அனுப்பப்படும் அடிமாடுகளைக் காப்பாற்றுவது எப்படி? அடிமாடுகளை ஏற்றிச் செல்லும் லாரிகளை நிறுத்தி, டிரைவர்களை உதைத்து, மாடுகளை விடுவிப்பது!

இப்படி, சென்ற ஆண்டு ஒருமுறை ஒரு லாரியை மடக்கி மாடுகளை விடுவித்து, அதன் டிரைவரையும் லாரியோடு சேர்த்துக் கொளுத்தினானாம்.

இந்த வழக்கும் இன்னும் சில கிரிமினல் வழக்குகளும் இவன் மேல் பதிவாகியிருப்பதாகத் தகவல்கள் சொல்லுகின்றன. ஆனாலும் இவனைப் போலீஸாரால் கைது செய்ய முடியவில்லை. காரணம் மகந்த் ஜாதியினரும் மற்றும் சில அரசியல்வாதிகளும் இவனுக்குத் தரும் அடைக்கலம்தான் என்றும் சொல்கிறார்கள்.

தாரா சிங் பற்றிய மேற்சொன்ன எல்லாத் தகவல்களையும் ஒப்புக் கொண்டாலும் அவன் பஜ்ரங்தளத்தோடு தொடர்புடையவன் இல்லை என்பதை மட்டும் அழுத்தமாகச் சொல்கிறார்கள் உள்ளூர் பி.ஜே.பியினர்.

இவர்கள் மறுத்தாலும், "அவன் பஜ்ரங்தளத்தைச் சேர்ந்தவன் என்பதுதான் உண்மை. அவன் வசிக்கும் பகுதியில் எனக்குத் தூரத்துச் சொந்தக்காரர்கள் இருக்கிறார்கள். பஜ்ரங்தளத்துக்காரர்களான அவர்கள் தாரா சிங்கைத் தங்களது தலைவன் என்று என்னிடமே சொல்லியிருக்கிறார்கள்!" என்று அடித்துச் சொல்கிறார், மயூர்பஞ்ச் மாவட்டத்தின் ஜனதாதளத் தலைவரான அபனி மொகந்தா.

"97-ல் நடந்த ஒரு வழக்கில், தான் பஜ்ரங்தளத்தைச் சேர்ந்தவன்தான் என்று அவனே சொல்லியிருக்கிறான்!" என்கிறார் அபனி மொகந்தா.

சரி, நல்ல மனிதர் என்று எல்லோராலும் போற்றப்படுகிற ஸ்டெயின்ஸ் கொல்லப்படுவதற்கு என்னதான் காரணம்?

"மத மாற்றத்தைத் தடுப்பதற்குக் கொலை ஒரு தீர்வாகாது என்றாலும் மனோகர்பூர் பகுதியில் மதமாற்றம் நடந்து கொண்டிருப்பது உண்மைதான்!" என்கிறார் பி.ஜே.பி.காரரான ஜீபன் குமார் ஷாஹூ.

"மலைவாழ் மக்களின் பெண் தெய்வம் ஜகிரா. அதற்கு ஒவ்வொரு சங்கராந்திக்கு முன்பும் பூஜை நடக்கும். அப்போது அங்குள்ள இந்துக்களுக்கும் கிறிஸ்துவர்களுக்கும் (எல்லோருமே மலைவாழ் மக்கள்தான்) தகராறு நடக்கும். இது அரசுக்கும் தெரியும்!" என்கிறார் ஜீபன் குமார் ஷாஹூ.

"மதம் மாறியவர்களுக்கும் மற்றவர்களுக்கும் இடையில் தகராறு நடப்பது உண்மைதான். மூன்றாண்டுகளுக்கு முன்பே இது பற்றி ஸ்டெயின்ஸிடம் எச்சரிக்கை செய்துள்ளதாகவும் சொல்லப்படுகிறது!" என்கிறார் பாரிபடா நகராட்சித் தலைவரும் இ. காங்கிரஸ்காரருமான தீனா கிருஷ்ணா.

இந்தக் கொலையில் பஜ்ரங் தள் சம்பந்தப்பட்டிருக்கிறதா இல்லையா என்பதில் இரண்டு கருத்துகள் இருந்தாலும், இதில் தாரா சிங் சம்பந்தப்பட்டிருக்கிறான் என்பதில் மட்டும் அனைவரும் ஒத்துப் போகிறார்கள்.

**— இளங்கோவன், மு. சிவலிங்கம்**

அட்டை வண்ணப்படமும்
படங்களும் : **ராஜ்குமார்**

# உங்கள் குழந்தைக்கு புதிய ஃபாரெக்ஸ் நியூட்ரி-பௌல் பரிசாகக் கொடுங்கள். அவன் அதைக் கண்டு மகிழ்வதைப் பாருங்கள்.




புதிய ஃபாரெக்ஸ் நியூட்ரி-பௌல் பாதுகாப்பானது. நீடித்து உழைக்கக் கூடியது. ஆரோக்கியமானது. ஃபாரெக்ஸ் உணவைக் கலந்து உங்கள் குழந்தைக்கு ஊட்ட முற்றிலும் சரியானது.

ஃபாரெக்ஸ் வீட் அல்லது ஃபாரெக்ஸ் ரைஸ் பேக்குடன் மட்டுமே இலவசம்.

**Farex®**
GROWING UP RIGHT

CONTRACT.FRX.25269.TA

ஆஃபர் 28.2.99 அல்லது சரக்கு உள்ள வரை மட்டுமே.
இந்த ஆஃபர் இல்லாமலும் பேக்குகள் குறிப்பிட்ட மார்க்கெட்களில் கிடைக்கின்றன.

சொல்கிறார் விளம்பரப்பட இயக்குநர் ஜெயேந்திரா

**வெ**ற்றியைப் பற்றிச் சிந்திக்காமல், செயலில் மட்டுமே கவனம் செலுத்துவதுதான் வெற்றிக்கான வழி என்பது என் கருத்து.

இதுவே கூட நாற்பது வயதான பிறகு, கடந்து வந்த பாதையைத் திரும்பிப் பார்க்கும்போது தற்செயலாக உதிக்கிற விஷயம்தான். மற்றபடி, வாழ்க்கையில் வெற்றி பெற வேண்டும் என்றோ, ஏதாவது சாதிக்க வேண்டுமென்றோ எந்தச் சமயத்திலும் எண்ணாமலேதான் நான் செயலாற்றி வந்திருக்கிறேன். சொல்லப் போனால், மனிதனுக்குக் குறிக்கோள் என ஒன்று இருக்க வேண்டும் என்பதே கூட பள்ளி நாட்கள் வரை எனக்குத் தெரியாத விஷயமாக இருந்திருக்கிறது!

வாழ்க்கை என்பது என்ன? அனுபவிப்பதற்கானது. பள்ளிக்கூடம்? Just for fun! இப்படித்தான் என் இளம் வயதில் எண்ணியிருந்தேன்.

பிலிப்ஸில் வேலை பார்த்து வந்த என் தந்தைக்குக் கலைகளில் ஆர்வம் இருந்தது. நடனம், இசை, நாடகம் எனப் பல கலைகளின் மேல் அபார மோகம் கொண்டிருந்த அவர், மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸின் இணைச் செயலாளராகவும் இருந்தவர். என் தாத்தா ஒரு பெரிய தத்துவப் பேராசிரியர். நடுத்தரக் குடும்பம்தான் எனினும் நல்ல கல்வியை எனக்குத் தரும் பொருட்டு வித்யாமந்திரில் சேர்த்திருந்தார்கள்.

தேர்வுகளில் சராசரியாக எழுபது மதிப்பெண்கள் வாங்கி விடுவேன். என்றாலும் உயர் கல்வி பற்றியோ, எதிர்காலம் பற்றியோ நான் யோசித்ததே கிடையாது.

பிளஸ் டூ முடித்ததும் என்ன படிப்பது என்பது பற்றி இப்போதெல்லாம் மாணவர்கள் எத்தனை தீவிரமாக யோசிக்கிறார்கள் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால், என் உறவுக்காரப் பெண் ஒருத்தி பி.எஸ்ஸி., கெமிஸ்ட்ரி படித்தவள் என்ற காரணத்தாலேயே நானும் பி.எஸ்ஸி., கெமிஸ்ட்ரி சேர்ந்தேன்.

சேர்ந்த பிறகு பாலிமர் அண்ட் பிளாஸ்டிக்ஸில் மேற்படிப்புப் படிக்கலாம் என்று ஒரு எண்ணம் உருவாயிற்று. அதற்குத் தோதாக, கெமிஸ்ட்ரியையும் ஓரளவு நன்றாகவே படித்து வந்தேன்.

ஆனால், முதலாண்டுத் தேர்வில், ஆர்கானிக் கெமிஸ்ட்ரியில் பெயில் ஆனேன். வெறும் 38 மதிப்பெண்கள்! தேர்வுத்தாளை மறுபரிசீலனை செய்ய விண்ணப்பித்தபோது 80 சதவீத மதிப்பெண்களுடன் தேர்ச்சி பெற்றேன்.

இரண்டாவது வருடப் பரீட்சையிலும் ஒரு பாடத்தில் பெயில் ஆனேன். மறுபடியும் மறுபரிசீலனைக்கு விண்ணப்பிக்க, 69 சதவீதத்துடன் தேர்ச்சி பெற்றேன்.



இறுதி வருடமும் ஒரு பாடத்தில் பெயில் ஆனதுதான் வேடிக்கை. இந்த முறையும் மறு பரிசீலனைக்கு விண்ணப்பித்தேன். ஆனால் விதி வேறு மாதிரியாக இருந்தது. பெயில் ஆனது ஆனதுதான்; வெறும் இருபத்தைந்து மதிப்பெண்கள் மட்டுமே என்று சொல்லி விட்டார்கள்.

வாழ்வில் முதல் முறையாக அதிர்ச்சி என்பது அப்போது எனக்கு ஏற்பட்டது. காரணம், அந்தத் தேர்வில் - கேள்வித்தாளில் கேட்கப் பட்டிருந்த முதல் கேள்விக்கு மட்டுமே இருபத்தைந்து மதிப்பெண்கள். அது கணிதம் தொடர்புடைய சமன்பாட்டுக் கேள்வி. 'தியரி' அல்ல. சரியான விடை - தீர்வு வந்து விட்டால் முழு மதிப்பெண் தந்தாக வேண்டும்.

என் விடைத்தாளில்

# கதை!

தெளிவாக, தீர்மானமாகச் சரியான விடையை எழுதியிருந்தேன். கட்டாயம் அந்த முதல் கேள்வியிலேயே எனக்கு 25 மதிப்பெண் வந்திருக்க வேண்டும். அடுத்து விடை எழுதிய ஒவ்வொரு கேள்விக்கும் குறைந்தபட்ச மதிப்பெண்கள் மட்டுமே பெற்றிருந்தாலும் ஓரளவு கணிசமான மதிப்பெண் வந்திருக்கும். ஆனால் ஃபெயில் 'ஆக்கி'யிருந்தார்கள்.

அற்புதமான தோல்வியுடன் என் கல்லூரி வாழ்க்கை முடிந்தது.

**வா**கனங்கள் விரையும் சாலை. பிளாட்பார ஓரத்தில் அமர்ந்திருந்தேன். என்னுடன், என் நெருங்கிய தோழன் ஒருவனும் இருந்தான். இருவருக்கும் பேசவும் சிந்திக்கவும் கவலைப்படவும் பல விஷயங்கள் இருந்தன. அவனும் என்னைப் போலவே தேர்வில் தோற்றிருந்தான்.

பட்டப் படிப்பு அவசியமில்லாமல் செய்யக்கூடிய வேலைகள் என்னென்ன என்பதே எங்கள் பேச்சின் சாரமாக இருந்தது. ஒரு பிரிண்டிங் பிரஸ் வைக்கலாம் என்பது வரை விதவிதமாக யோசித்தோம். ஆனால் உறுதியான தீர்மானம் ஒன்றை மேற்கொள்ள வயதும் மனமும் பக்குவப்பட்டிருக்கவில்லை.

பாரதிய வித்யாபவனில் அட்வர்டைஸ்மென்ட் மற்றும் மார்க்கெட்டிங் சம்பந்தமாக ஒரு வருட டிப்ளமோ கோர்ஸ் நடப்பதாகத் தெரியவந்தது. அந்தப் படிப்பு எதற்கு உதவும்? பிற்பாடு என்ன செய்யலாம்? என்று கூட யோசிக்கவில்லை. உடனே ஓடிப் போய் அங்கே சேர்ந்தேன். அந்த நெருக்கடியான நேரத்தில் நான் ஒதுங்க ஒரு கூடாரம் தேவைப் பட்டது ஒன்றே அதற்குக் காரணமாக இருக்க முடியும்.

நியாயமாக அந்த கோர்ஸில் சேர எனக்குத் தகுதி கிடையாது. ஏனெனில், டிகிரி பாஸ் பண்ணியிருந்தால்தான் அங்கே அட்மிஷன் கிடைக்கும். ஆனால் நானோ, "நீங்கள் என்னைச் சேர்த்துக் கொள்ளுங்கள். இந்த ஒரு வருடப் படிப்பு முடிந்து, தேர்வு எழுதுவதற்கு முன்னால் நான் டிகிரி முடித்து விடுவேன். அல்லாதபட்சத்தில் என்னைத் தேர்வு எழுத அனுமதிக்க வேண்டாம்'' என்று முதல்வரிடம் சொன்னேன்.

என் மீது நம்பிக்கை வைத்து, அவர் அதற்கு ஒப்புக் கொண்டார். சொன்னபடி நானும் அடுத்த செப்டம்பரில் தேர்வெழுதி 79 சதவீதம் மதிப்பெண்களுடன் பாஸ் ஆனேன்.

அந்த ஒரு வருட விளம்பரத் துறைப் படிப்பு எனக்கு எந்த வகையில் உதவும்? நான் என்னவாகப் போகிறேன் என்று அப்போதும் நான் எண்ணிப் பார்க்கவில்லை. விடுமுறையில், 'ராஜ்கமல் மோட்டார்ஸ்' என்னும் நிறுவனத்தில் மார்க்கெட்டிங் பிரிவில் பயிற்சியாளனாகச் சேர்ந்தேன். என்னுடன் என் நண்பனும் சேர்ந்திருந்தான்.

அங்கு சேர்ந்த முதல் நாள் எங்களுக்குத் தரப்பட்ட பணி - போட்டியாளர்களை, அவர்களது வியாபார நுட்பங்களை 'ஸ்டடி' செய்வது.

நாங்கள் பணியில் சேர்ந்திருந்த ராஜ்கமல் மோட்டார்ஸின் தயாரிப்பாக அப்போது வெளிவந்திருந்த வாகனம் 'லூனா'. நான் 'ஸ்டடி' செய்யப் போன இடம், 'சுவேதா' மொப்பெட் ஷோரூம் ஒன்று.

அங்கே மொப்பெட் வாங்க வந்திருந்த ஒருவரிடம் சாதாரணமாகப் பேச்சுக் கொடுத்தேன். உண்மையில் எனக்கு மொப்பெட் பற்றிப் பிரமாதமான ஞானம் ஒன்றும் கிடையாது. ஒருசில டெக்னிகல் சொற்பிரயோகங்களுடன் பரிச்சயம் உண்டு. அவற்றை மட்டும் வைத்துக் கொண்டு 'சுவேதா' வாங்க வந்திருந்தவரைத் தயங்கச் செய்து, அப்படியே இழுத்து வந்து 'லூனா' வாங்க வைத்து விட்

டேன்.

இந்த மாதிரியான விஷயங்கள், மார்க்கெட்டிங் துறையில் அங்கீகரிக்கப்பட்ட விற்பனை உத்தி. தவறு என்று சொல்ல மாட்டார்கள். தவிர, நான் சேர்ந்திருந்த நிறுவனத்தில் நல்ல பெயர் வாங்கவும் இது காரணமாயிற்று.

நியாயமாக இச்சம்பவம், நான் மார்க்கெட்டிங் துறையில் நன்கு காலூன்ற ஒரு வலுவான தொடக்கமாக இருந்திருக்கக்கூடும். ஆனால் என்னால் சில மாதங்களுக்கு மேல் அந்நிறுவனத்தில் இருக்க முடியவில்லை. பாரதிய வித்யா பவனில் படித்த விளம்பரத் துறை படிப்பு என் மனத்தில் வேறுவிதமான ஈடுபாட்டை உண்டாக்கியிருந்தது – விளம்பர வாசகங்கள்!

'Exide' பேட்டரி நிறுவனம் அப்போது தனது தயாரிப்புக்கு ஒரு கூடுதல் பாதுகாப்பு உறை (100% Tamper Proof) சேர்த்து அதைப் பிரமாதமாக விளம்பரப்படுத்திக் கொண்டிருந்தார்கள். சென்னையில் கிரிக்கெட் மாட்ச் நடந்து கொண்டிருந்த சமயம் அது. நான் இரண்டையும் இணைத்து, 'Take a glance at extra cover' என்றொரு விளம்பர வாசகம் உருவாக்கினேன். அந்த வயதில், 'இதற்கு மிஞ்சி இன்னொரு வாசகம் உருவாக முடியாது' என்று எனக்குள் ஒரு தீர்மானமே உண்டாகி விட்டது. சிறப்பாகவும் சுருக்கமாகவும் எழுதப்படும் விளம்பர வாசகங்கள் மட்டுமே விளம்பரத் துறையின் ஆதாரம் என்று நினைத்தேன். பின்னாளில் நான் விளம்பரத் துறையில் முழு மூச்சாக இறங்கி, 'ஞானம்' சேகரித்த போது 'Smart writing'ஐ விடவும் பல சங்கதிகள் இதில் உள்ளதைப் புரிந்து கொண்டேன். அதற்குள் என்னென்ன விதமான அனுபவங்களை எதிர்கொள்ள வேண்டியதாகி விட்டது!

ராஜ்கமல் மோட்டார்ஸில் வேலையை விட்டபின், விளம்பர நிறுவனங்களில் இன்டர்வியூவுக்குப் போவதே என் முழு நேரத் தொழிலானது.

ஒவ்வொரு நிறுவனத்துக்கும் நேரில் போவேன். 'காப்பி ரைட்டிங்' டெஸ்ட் வைப்பார்கள். எழுதுவேன். தேர்வானால் சுமார் இருநூறு, இருநூற்றைம்பது சம்பளத்தில் வேலையில் அமரலாம்.

1978-ல் இந்த 'வேட்டை'யில் நான் இறங்கியபோது குறுகிய காலத்தில் பல விளம்பர நிறுவனங்களில் பணியாற்றிச் 'சாதனை' புரிந்தேன்! ஒரு நிறுவனத்தில் என்னால் ஏழெட்டு மாதங்களுக்கு மேல் தாக்குப்பிடிக்க முடியாது!

அன்றைக்குச் சென்னையில் இயங்கி வந்த விளம்பர நிறுவனங்களின் நிலை அத்தகையது.

**''உங்க மாப்பிள்ளை என்ன பண்றார்?''**

**''நகை விற்பனை செய்யறார்!''**

**''பரவாயில்லையே! நகைக் கடை வச்சிட்டாரா?''**

**''இல்லையில்லை! என் பெண்ணோட நகையை எல்லாம் ஒவ்வொண்ணா விற்பனை செய்துக்கிட்டு இருக்கார்!''**

**– உடுமலை. பொன்னுசாமி**

---

பெரும்பாலான நிறுவனங்களில் திறமைக்கு வாய்ப்பு இருக்காது. அதாவது, நிறைய 'கிளையன்ட்ஸ்' இருந்தால்தானே விளம்பர நிறுவனங்களுக்குத் தொடர்ந்து வேலை இருக்கும்? ஆனால், சிறு நிறுவனங்களுக்கு வாடிக்கையாளர்கள் அதிகம் வர மாட்டார்கள். பெரிய நிறுவனங்களிலோ, வேலை கிடைப்பது சிரமம். அதுவும் என் போன்ற அனுபவமில்லாத சின்னப் பையனுக்கு யார் வேலை தருவார்கள்?

தவிர, வாழ்வில் ஒருபோதும் என்னால் போலித்தனமாக நடந்து கொள்ள முடிந்ததில்லை. நமது சிறந்த யோசனைகள் நிர்வாகிகளால் ஏற்றுக் கொள்ளப்படாத போது சலிப்பும் வெறுப்பும் ஏற்படுவது இயல்பு. எனக்கோ, பயங்கரமாகக் கோபம் வரும். கத்துவேன்; சண்டை போடுவேன்.

அந்நாளில் எனக்கிருந்தவை இரண்டே சாய்ஸ்கள். ஒன்று, நிறுவனத்தில் இருந்து கொண்டே சண்டை போட்டுக் காலம் தள்ளுவது. இரண்டாவது, சண்டை போட்டு உடம்பைக் கெடுத்துக் கொள்ளாமல், பேசாமல் வேறு வேலை பார்த்துக் கொண்டு போய் விடுவது.

நான் இரண்டாவதையே பெரும்பாலும் தேர்ந்தெடுத்தேன். 1978-லிருந்து 86 வரை, மொத்தம் பதினான்கு விளம்பர நிறுவனங்களில் காப்பிரைட்டராக வேலை பார்த்தேன்! ஒரு நிறுவனத்தில் தொடர்ந்து பணியாற்றியது, அதிகபட்சம் இரண்டு வருடங்கள். குறைந்த பட்சம் நான்கு நாட்கள்!

சென்னை விளம்பர உலகம் எனக்கு மிகவும் அவநம்பிக்கை தருவதாகவே இருந்தது. முன்னேறுவதற்கான ஒரு வாய்ப்பும் தெரியாத சூழ்நிலையில், மும்பை சென்று விடுவது என்று முடிவு செய்தேன். எனக்குத் துணையாக என் நண்பன் சக்கரவர்த்தி என்பவனும் உடன் வரத் தயாராக இருந்தான்.

ஆனால் மும்பையில் எனக்கோ, என் நண்பனுக்கோ யாரையும் தெரியாது. அங்கே சென்றால், விளம்பர உலகில் நல்லதொரு இடம் கிடைக்கக்கூடும் என்கிற கற்பனை மட்டும்தான் எங்களுக்குத் துணை. மும்பையில் இயங்கும் சில விளம்பர நிறுவனங்களின்



முகவரிகளை மட்டும் சேகரித்துக் கொண்டு கிளம்பி விட்டோம்.

ரயில் நிலையத்தில் எங்கள் குடும்ப நண்பர் ஒருவர் வந்து 'வரவேற்பதாக' ஏற்பாடு. அந்த நண்பருக்கு விளம்பர உலகுடனோ, அத் துறை சார்ந்த நபர்களுடனோ அறிமுகம் கூடக் கிடையாது. அவர் எங்களுக்குச் செய்த ஒரே உதவி - அல்ல; இரண்டு உதவிகள் - மாதுங்காவில் ஒரு லாட்ஜில் மாதம் பத்து ரூபாய் வாடகைக்கு ஒரு 'பெட்' ஏற்பாடு செய்து தந்தார். தவிர, மாதுங்காவிலிருந்து விக்டோரியா டெர்மினஸ் வரை ரயிலில் சென்று வர ஆளுக்கொரு சீசன் டிக்கெட் வாங்கித் தந்தார்; அவ்வளவுதான்.

இது போதாதா? மும்பையில் எங்கள் வேட்டையைத் தொடங்கினோம்.

தினசரி காலை கிளம்பி வி.டி. செல்வது. அங்கிருந்து ஒவ்வொரு விளம்பர நிறுவனத்துக்கும் வழி விசாரித்துக் கொண்டு போய் வாய்ப்புக் கேட்பது. நாளெல்லாம் அலைந்து விட்டு இரவு லாட்ஜுக்கு வந்து படுத்து விட்டு மறுநாள் காலை மறுபடி பயணத்தைத் தொடர்வது.

சுமார் ஒன்றரை மாதங்கள் முயற்சி செய்த பிறகு என் நண்பனுக்கு அங்கே ஒரு விளம்பர நிறுவனத்தில் வேலை கிடைத்து விட்டது. எனக்கும் ஓரிடத்தில் கிடைத்ததுதான். ஆனால், அந்நிறுவனத்தின் சென்னைக் கிளையில்தான் பணியாற்ற வேண்டும் என்றார்கள்.

வேறு வழி? மறுபடியும் சென்னை வந்து சில காலம் அந்நிறுவனத்தில் பணியாற்றி விட்டு, சரிப்பட்டு வராமல் மீண்டும் மும்பை சென்று வேலை தேடத் தொடங்கினேன்.

இம்முறை எனக்கு வேலை கிடைப்பதில் சிரமம் இருக்கவில்லை. சுமார் நான்காண்டு காலம் மும்பையில் பல பெரிய விளம்பர நிறுவனங்களில் காப்பி ரைட்டராகப் பணியாற்றினேன். என் வாழ்வின் குறிப்பிடும்படியான முதல் அத்தியாயம் தொடங்கியது அப்போதுதான்.

விளம்பரத் துறையில் பணியாற்ற அவசியத் தேவை என்ன? மக்களைப் புரிந்து கொள்கிற மனோபாவம். இத்துறையில் சாதித்து விட்டவர்களைப் பற்றிக் குறிப்பிடும் போது, 'People who understand People' என்பார்கள். மக்களின் வாழ்க்கை முறை, சிந்தனைப் போக்கு இவற்றை ஒட்டித் தயாரிக்கப்படும் விளம்பரங்களே எடுபடும். மக்களை மறந்து விட்டு, மேதாவித்தனத்துடன் விளம்பரங்களைத் தயாரித்தால், துறையில் நிலைக்க முடியாது. விளம்பரத் துறையில் இருப்பவர்களுக்கு, 'சேல்ஸ் மென்' மனோபாவம் இருக்க வேண்டியது அவசியம்.

எனக்கு இந்த சவால் பிடித்திருந்தது. சிறப்பாக ஒரு காரியத்தைச் செய்து முடிப்பதை உளமார விரும்புபவன் நான்.

அதிக முன்னனுபவம் இல்லாத எனக்கும் என் நண்பன் சக்கரவர்த்திக்கும் 'க்ளாரியன்' நிறுவனத்தில் (இந்தியாவின் இரண்டாவது பெரிய விளம்பர நிறுவனம் இது) காப்பிரைட்டராக வேலை கிடைத்தபோது, எங்களுக்கான சவால் இன்னும் அதிகமானது.

நாங்கள் உள்ளே நுழைந்த போது, அங்கே பல பெரிய தலைகள் வெளியேறிக் கொண்டிருந்தன. புதியவர்களான நாங்கள், கோல்டரின், ஃபோர்ஹாண்ட்ஸ், மற்றும் ஃபாரெக்ஸ் உள்ளிட்ட அனைத்து க்ளாக்ஸோ தயாரிப்புகள் எனப் பல முன்னணி நிறுவனங்களின் சரக்குகளுக்கு விளம்பர வாசகங்கள் எழுத வேண்டியிருந்தது.

காலை ஒன்பதரைக்கு அலுவலகத்துக்குள் நுழைந்தால், மாலை ஆறரை வரை இடத்தை விட்டு நகர முடியாதபடி கிளையன்ட்ஸ் வந்து மொய்ப்பார்கள். மீட்டிங், மீட்டிங் என்று நாளெல்லாம் பேசிக் கொண்டே இருக்க வேண்டும்.

லட்சக்கணக்கில் முதலீடு செய்து தமது பொருளை விளம்பரம் செய்ய வருகிற ஒரு நிறுவனம், சுலபத்தில் நம்மை விட்டு விடுமா? நேர்த்தி, நேர்த்தி, மேலும் நேர்த்தி என்பதாகக் கவர்ச்சிகரமான விளம்பர உத்திகளைத் தேடி சிந்தனை பறக்கும்.

மாலை கிளையன்ட்ஸ் சென்றதும் சற்று நேரம் 'ரிலாக்ஸ்' செய்து விட்டு மறுபடி உட்கார்ந்தால் நள்ளிரவு இரண்டு மணி வரை கூட யோசிப்பதும் எழுதுவதுமாகப் பொழுது கழியும்!

ஒருநாளைக்குச் சுமார் பதினாறிலிருந்து பதினெட்டு மணி நேரம் உழைப்பதென்பது எனக்குப் பெருமகிழ்ச்சி தருவதாகவும் புத்துணர்ச்சி அளிப்பதாகவும்தான் இருந்தது.

'If you love the job you do, you don't need to work even a day in your life' என்பார்கள்.

உண்மையில் நான் என் பணியைக் காதலித்தேன். காதல் என்றால் சாதாரணமான

காதல் அல்ல. ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது.

சில நண்பர்கள் ஒன்று சேர்ந்து ஒரு ஃபிளாட்டில் வாடகைக்குக் குடியிருந்தோம். அப்போது. திடீரென்று ஒருநாள் காலை அலுவலகம் கிளம்பும் போது ஃபிளாட் சொந்தக்காரர் வந்து, "நாளை காலை காலி பண்ணி விட வேண்டும்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டார்.

உண்மையில் மிகுந்த பதற்றமும் கவலையும் கொள்ள வேண்டிய விஷயம் அது. மும்பையில் தங்க ஒரு இடம் பிடிப்பது என்பது மிகப் பெரிய சவால்.

ஆனால் நான் துளியும் கலங்கவில்லை. அன்று அலுவலகம் சென்றேன். மாலை ஃபினாட் திரும்பி என் உடைமைகளை ஒரு பெட்டியில் திணித்துக் கொண்டு நேரே பன்னாட்டு விமான நிலையம் போனேன். உள்ளே போக ஒரு டிக்கெட் மட்டும் வாங்கிக் கொண்டு இரவு விமான நிலையத்திலேயே நிம்மதியாகப் படுத்துத் தூங்கி விட்டு, மறுநாள் நேரே அலுவலகம் சென்று விட்டேன். 'நமக்குத் தங்க ஒரு இடம் இல்லையே' என்பது கவலைப்படுவதற்கான ஒரு விஷயமாகவே எனக்குத் தோன்றவில்லை. 'சந்தோஷமாகப் பணியாற்ற ஓரிடம் போதும்! வேறொன்றும் முக்கியமில்லை' என்பதுதான் என் சித்தாந்தமாக இருந்தது.

வேலை, வேலை, வேலை என்று வாழ்க்கை அசுர வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தது. க்ளாரியன் தவிர ஓ அண்ட் எம், ஆர்.கே. சுவாமி எனப் பல முன்னணி நிறுவனங்களிலும் பணியாற்றி அனுபவங்களைச் சேகரித்துக் கொண்டேன்.

ஓரிடத்தில் நான் வேலைக்குச் சேர்ந்த புதிது. ஒருநாள் என் இருக்கையில் அமர்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்தேன். சட்டென்று கேபின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த ஒரு நபர், "நீதான் புதிதாகச் சேர்ந்தவனா?" என்று கேட்டார்.

விரித்த பேப்பரை மடக்காமலேயே நான் "யெஸ்" என்றேன். அவர் போய் விட்டார்.

சில விநாடிகளில் உள்ளே நுழைந்த ஓர் ஊழியை, "மிஸ்டர் ஜெயேந்திரா! இப்போது வந்து போனவர் யார் என்று தெரியுமா?" என்று கேட்டார்.

"தெரியாது!"

"அவர்தான் இந்த நிறுவனத்தின் மேனேஜிங் டைரக்டர். அவர் வரும்போது நீங்கள் பேப்பர் படித்துக் கொண்டிருக்கிறீர்கள்! வேலை இல்லாவிட்டாலும் அதை காண்பித்துக் கொள்ளக் கூடாது என்பது தெரியாதா?" என்று கேட்டார்.

எத்தனை முயன்றாலும் என்னால் போலித்தனமாக இருக்க முடியாது என்பதை எப்படி நான் விளங்க வைப்பேன்? காப்பிரைட்டர் பணி என்பது முழுக்க முழுக்க 'யோசனை' சம்பந்தப்பட்டது. அலுவலக நேரத்தில் மட்டும்தான் யோசிக்க வேண்டும் என்பதில்லையே? கிளம்பி வருகிற வழியில் ஒரு யோசனை உதயமாகி விட்டால், தீர்ந்தது விஷயம். 'நைன் டு ஃபைவ்தான்' என்று யோசிப்பதற்குக் கூடவா நேரம் வரையறுக்க முடியும்? அந்த விநாடியே அந்த நிறுவனத்தை விட்டு விலகி விட்டேன்.

அப்போதெல்லாம் நான் நிறைய சிகரெட் பிடிப்பேன். ஒரு நாளைக்குக் குறைந்தது ஐம்பதாவது. ஆனால், புகை பிடிப்பதால் நீண்ட நேரம் பணியாற்றும் போது களைப்பு அதிகம் உண்டாகிறதோ என்று ஒரு சந்தேகம் வந்தது. என் சிந்தனையை அது மட்டுப்படுத்துகிறதோ என்று தோன்றியது. அவ்வளவுதான். அந்த விநாடியே புகைப்பதை நிறுத்தி விட்டேன்! என் படுக்கையில், அலுவலக மேசையில், ஸ்கூட்டரில் எப்போதும் ஒவ்வொரு பாக்கெட் சிகரெட் வைத்திருப்பேன். நான் புகை பிடிப்பதை நிறுத்திப் பல மாதங்கள் வரை அந்தப் பாக்கெட்டுகள் அந்தந்த இடங்களிலேயே இருந்தன. ஆனால் ஒரு முறை கூட சபலம் உண்டாகவில்லை. சிகரெட்டைப் பிறகு தொடவே இல்லை!

என் பணியை நான் அத்தனை காதலித்தேன். அதற்காக எவ்வளவு வேண்டுமானாலும் உழைக்கத் தயாராக இருந்தேன்.

சில வருடங்களுக்குப் பிறகு மறுபடி சென்னை வந்து சேர்ந்தேன். இரண்டு வருடங்கள் ஹிந்துஸ்தான் தாம்ஸனில் பணியாற்றி விட்டு என் நண்பர் பி.சி. ஸ்ரீராமுடன் இணைந்து சொந்தமாக ஒரு விளம்பரப் பட நிறுவனம் அமைக்கத் திட்டமிட்டேன்.

ஸ்ரீராமை எனக்குக் கல்லூரி நாட்களிலேயே பழக்கம். நான் மும்பையில் இருந்த போது அவர் மழைக்காலங்களில் அங்கு வருவார், மழையைப் படம்பிடிக்க! என்னுடன்தான் தங்குவார்.

எனது விளம்பரத் துறை அனுபவம், ஸ்ரீராமின் ஒளிப்பதிவுத் திறமை இரண்டும் இணைந்தால் சிறப்பான ஒரு விளம்பரப் பட நிறுவனத்தைத் தோற்றுவிக்க முடியும் என்கிற எண்ணம் தற்செயலாகத்தான் தோன்றியது. பல நிறுவனங்களில் பணியாற்றியபின், என்னால் எங்கும் 'பொருந்தி' இருந்து வேலை பார்ப்பது சிரமம் என்கிற எண்ணம் வலுவாக எழுந்ததும் ஒரு காரணம். நமது சிந்தனை.

உழைக்கும் வேகம், வெறி இவற்றுக்கு அடுத்தவரின் அனுமதியை எதிர்பார்த்திருப்பது கஷ்டம் என்பது எனக்குப் பல சமயங்களில் நிரூபணமான விஷயம்.

ஸ்ரீராம் உடனே சம்மதிக்க, 'JS' என்கிற எங்களது விளம்பரப் படத் தயாரிப்பு நிறுவனம் பிறந்தது.

'இப்படியொரு நிறுவனத்தைத் தொடங்குகிறோம்' என்பதையே மிக வித்தியாசமான முறையில் விளம்பரப்படுத்த நினைத்தேன். 'Flash Back' என்றொரு கண்காட்சியை ஏற்பாடு செய்தோம்.

இந்தியாவில் இதற்கு முன் தயாரிக்கப்பட்ட விளம்பரப் படங்களின் கண்காட்சி அது. மிகவும் சிரமப்பட்டு, நாடெங்கிலுமிருந்து படங்களைத் தருவித்தோம். அந்தக் கண்காட்சிக்காக நாங்கள் எடுத்த விளம்பரப்



''நீங்க ஏன் சார் ஃபோன் வச்சுக்கலை?''

''அக்கம் பக்கத்துல உள்ளவங்க ஓசி ஃபோனுக்கு வந்துடுவாங்க.''

''நீங்க ஃபோன் பேசணும்னா என்ன பண்ணுவீங்க?''

''பக்கத்து வீட்டுல ஃபோன் இருக்கே!''

– சீர்காழி வி. ரேவதி

படம்தான் எங்கள் நிறுவனத்துக்கான விளம்பரமும் ஆயிற்று!

கண்காட்சி மிகப் பெரிய வெற்றி கண்டது. ஒரே இரவில் 'JS' தொடங்கப்பட்ட விஷயம் தமிழ்நாடு முழுவதும் பரவ, மறுநாள் காலையே எங்களுக்கான முதல் படப்பிடிப்பு வாய்ப்பை 'முத்ரா' விளம்பர ஏஜென்ஸி வழங்கியது. 'யுனைடெட் இந்தியா இன்ஷூரன்ஸ்' நிறுவனத்தின் விளம்பரம் அது!

எங்கள் நிறுவனத்தை நாங்கள் 'முதலே' இல்லாமல்தான் தொடங்கினோம். எங்களிடமிருந்தது வெறும் நம்பிக்கை! ஆளுக்கு ஐயாயிரம் வீதம் எப்படியோ பத்தாயிரம் புரட்டி, பிலிம் வாங்கித்தான் முதல் விளம்பரப் படத்தைத் தயாரித்தோம். ஆனால், எங்கள் 'நிறுவனம் தொடங்கிய முதல் ஆண்டே முப்பது விளம்பரங்கள் தயாரிக்க வாய்ப்புக் கிடைத்தது.

எப்படி?

சென்னையில் பல விளம்பர நிறுவனங்கள் இருந்தாலும், அப்போது ஒரு விளம்பரப் படம் எடுக்க வேண்டுமென்றால் மும்பைக்குத்தான் ஓட வேண்டும்! வெறும் உர விளம்பரங்கள் மட்டும்தான் இங்கே தயாராகிக் கொண்டிருந்தன.

முப்பது விநாடியில் பார்வையாளரைக் கட்டிப் போடும் சாமர்த்தியத்துடன் விஷயத்தை எளிமையாகவும் கவித்துவமாகவும், ஒரு சின்ன சிறுகதை போன்ற பூச்சுடனும் மேலான அழகுணர்ச்சியுடனும் ஒரு விளம்பரப் படத்தை இங்கேயே தயாரிக்க முடியும் என்பதை நாங்கள் நிரூபித்துக் காட்டினோம்.

இரண்டே விளம்பரப் படங்கள் எடுத்திருந்த நிலையில் 'முத்ரா'வின் சேர்மன் எங்கள் அலுவலகத்துக்கு ஒருநாள் வந்திருந்தார். நாங்கள் தயாரித்திருந்த படத்தைப் போட்டுக் காட்டியதும், மிகவும் ரசித்து, உடனே 'ரஸ்னா' விளம்பரப் படம் எடுக்கும் வாய்ப்பை எங்களுக்குத் தந்து விட்டார்.

சின்ன, சாதாரணமான ஒரு வசனம்தான் – 'ஐ லவ் யூ ரஸ்னா...' அது தேசமெங்கும் பேசும்படியானது. அதன் எளிமையே அதன் சிறப்பானது!

'ரீகல்' சொட்டு நீலத்துக்கென ஒரு படம் எடுத்துத் தரக் கேட்டார்கள். ரீகல் அப்போது அத்தனை பிரபலமில்லாத நிறுவனம். தவிர, 'சொட்டு நீலங்'களுக்கான மார்க்கெட்டே மிகவும் 'டல்'லாக இருந்த நேரமுங்கூட!

முற்றிலும் மாறுபட்டவிதமாக – வண்ணம் ஏதும் சேர்க்காமல், வெறும் வெள்ளையையே முழுப் படத்துக்குமான ஆதார நிறமாகக் கொண்டு நாங்கள் தயாரித்த 'சொட்டு நீலம் டோய்' விளம்பரம் மாபெரும் வெற்றி கண்டது! ரீகல் சொட்டு நீலம் பேசப்படும் பொருளாயிற்று.

இந்தப் படம் தயாராகி வெளியானபின் ஒரு பன்னாட்டுத் தொழிலதிபர் என்னிடம் வந்து, ''சொட்டு நீலத்துக்கு இனி மார்க்கெட்டே கிடையாது என்று முடிவே செய்திருந்தோம். உங்கள் விளம்பரம் அதை மாற்றி, மறுமலர்ச்சி ஏற்படுத்தி விட்டது!'' என்று பாராட்டினார்.

இதை எதற்குச் சொல்கிறேனென்றால், விளம்பர உலகம் என்பது அடிக்கடி தன் முகத்தை மாற்றிக் கொண்டே இருக்கும். ஒருகாலத்தில், புதிதாக ஏதாவது ஒரு அம்சத்தை (உதா: 'இந்தப் பற்பசையில் கிராம்புத் தைலம் உள்ளது.') ஹைலைட் செய்து விற்பனையைப் பெருக்க முடிந்தது. இது 78-ம் வருடம் வரையிலான நிலை. பிறகு



**"ஏன் லோன், லோன் என்று தினமும் வந்து தொந்தரவு பண்ணறே..."**

**"ஒருதரம் கடன் கொடுங்க. அப்புறம் நான் இந்தப் பக்கம் வருகிறேனா பாருங்க!"**

**– எஸ். மோஹன்**

ராட்சஸ நிறுவனங்கள் தம் பெயரை முன்நிறுத்தி, மார்க்கெட்டைப் பிடித்தன. ஹிந்துஸ்தான் லீவர், க்ளாக்ஸோ, டாடா போன்ற 'பெயர் கள்' மக்கள் மத்தியில் எடுபடும் சரக்கா யிருந்தன.

பிறகு போட்டிகள் அதிகமாகி விட, நிலைத்திருப்பதற்கு ஏதாவது ஒரு புதுமையைச் செய்து கொண்டே இருக்க வேண்டும் என்பது கட்டாயமாகி விட்டது.

இந்த 'ஏதாவது செய்து' என்பதன் அர்த்தம், சிறப்பாகச் செய்வது; வித்தியாசமாகச் செய்வது என்பது.

முப்பது விநாடி. இதுதான் ஒரு விளம்பரப் படத்தின் அதிகபட்சக் கால அளவு. 'You should feel the film time' என்று விளம்பரப் பட உலகில் சொல்வார்கள். முப்பது விநாடியில் பொருள், அதன் சிறப்பம்சம், அதை வெளிப்படுத்த ஒரு களம், சில பாத்திரங்கள், ஒரு அந்நியோன்யமான சூழ்நிலை, வித்தியாசமான ஒரு புதுமை இத்தனையையும் சரி விகிதத்தில் கலந்து தருகிற சவால் எனக்கு சுவாரஸ்யமாக இருந்தது.

முதலில் எந்தப் பொருளுக்கு நாம் விளம்பரப் படம் தயாரிக்கிறோம் என்பதை முன் வைத்து, உட்கார்ந்து ஸ்கிரிப்ட் எழுதுவேன். ஸ்கிரிப்ட் என்றால், சினிமா ஸ்கிரிப்ட் போலவே அனைத்து விவரங்களுடன்.

பிறகு அதை 'ஷாட்' வாரியாகப் பிரித்து, தொகுப்பேன். பிறகு ஸ்ரீராமிடம் தந்து விடுவேன்.

ஒரு ஸ்கிரிப்டைப் பார்த்து விட்டுத் தரம் கணிப்பதில் அவருக்கு இணை அவர்தான். துல்லியமாக அலசி ஆராய்ந்தபின் படப்பிடிப்புக்குச் செல்வோம்.

விளம்பரப் படம் எடுப்பதும் ஒரு சேல்ஸ் மேன் பணிதான் என்பதை மறப்பதே இல்லை. நமது திறமை என்பதை விட, சரக்கு விற்க அது எவ்வகையில் உதவும் என்பதைத்தான் முதலில் பார்க்க வேண்டும். என்ன பொருள், போட்டியாளர்கள் யார், மார்க்கெட் எங்கே என்பதுதான் முக்கியம். இதில் தெளிவாக இருந்தால் பிரச்னையே இல்லை.

**ர**ஸ்னா தொடங்கி இன்று 'பி.பி.எல். ஹோம் அலோன்' வரை எத்தனையோ படங்கள் எடுத்திருக்கிறோம். தரம், மேலும் தரம், மேலும் மேலும் தரம் என்பது தவிர வேறு சிந்தனை இருவருக்குமே கிடையாது.

இந்த முயற்சியில் வெற்றி அடைந்திருக்கிறேனா என்று எண்ணிப் பார்ப்பது கூட என் வேலை அல்ல என்று நினைக்கிறேன்.

'நீங்கள் வெற்றி பெற்று விட்டீர்கள்' என்று யாராவது சொன்னால் சிரிப்புத்தான் வருகிறது.

தொழிலில் வெற்றி என்று எதுவும் இல்லை. 'தொழில் செய்வது; நேர்த்தியாகச் செய்வது'– இது ஒன்றுதான் முக்கியம்.

அந்தத் தொழில் மூலம் ஈட்டும் வருவாயை நாம் எப்படிச் செலவழிக்கிறோம் என் பதில்தான் வெற்றி இருக்கிறது.

ஒரு துரும்பளவாவது நாம் சார்ந்திருக்கும் சமூகத்துக்கு, நம் தனிப்பட்ட வளர்ச்சி மூலம் உதவ இயலுமானால் அது வெற்றி! அது மட்டும்தான் வெற்றி. சிறப்பாகச் செய்வது, எதிலும் சிறப்பு ஒன்றே கருத்தாக இருப்பதற்கு, முதலில் 'ஆசை' வேண்டும். கனவு வேண்டும். அந்த ஆசை, விசையோடு பெருகினால் செயலாகும். செயல், சிறப்பாவதற்கு அடிப்படையில் நேர்மையும் ஒழுக்கமும் அவசியம் என்று நினைக்கிறேன். இவை இருந்தால் போதும்.

இத்தனை விளம்பரப் படங்கள் எடுத்தாயிற்று. ஏன் ஒரு திரைப்படம் எடுக்கக்கூடாது என்று இப்போது எனக்கு ஆசை உருவாகியிருக்கிறது. இந்த ஆசை கனிந்து, விசை கொண்டு செலுத்துமானால், நாளை நான் ஒரு திரைப்பட இயக்குநராகவும் ஆகலாம். யார் கண்டது! இப்போதைக்குச் செய்வதை சிறப்பாகச் செய்ய வேண்டும். அதுதான் முக்கியம். அது மட்டும்தான் முக்கியம்! ○

சந்திப்பு : **ஔரங்கசீப்**

படம் : **ரவிசங்கரன்**






1999 பிப்ரவரி 14
வெகுதான்ய மாசி 2
மலர் : 57
இதழ் : 29

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## வெங்காயத்தை மறக்கலாமா?

பொது விநியோகத் திட்டத்தின் கீழ் விற்கப்படும் பொருள்களின் விலையைக் கணிசமாக உயர்த்தி, எதிர்க்கட்சிகளிடம் மட்டுமின்றி, கூட்டணிக் கட்சியினரிடமும் செம்மத்தியாக வாங்கிக் கட்டிக் கொண்டது மத்திய அரசு.

'மானியச் செலவுகளைக் குறைப்பதற்காகத்தானே இந்த நடவடிக்கை; கூட்டணிக் கட்சிகளின் அதிருப்தி எங்களுக்கு ஆச்சர்யம் அளிக்கிறது...' என்று வீராப்பும் பேசியது.

பின்னர் நடந்த ஒருங்கிணைப்புக் குழு கூட்டத்தில், வறுமைக் கோட்டுக்குக் கீழேயுள்ள மக்களுக்கு விலையுயர்விலிருந்து விலக்கு அளிக்க முன்வந்தார் பிரதமர்.

ஒருசில நாட்களுக்குள் இப்படி பி.ஜே.பி. அரசு முன்னுக்குப் பின் முரணாக இயங்குவதென்பது வாடிக்கையாகவே ஆகிவிட்டது.

பெட்ரோல் விலையை உயர்த்தியபோது நடந்த நாடகத்தை நாடு இன்னும் மறக்கவில்லை!

ரேஷன் உணவுப் பொருட்களின் விலையை உயர்த்துவதன் மூலம் மானியச் செலவுகளில் மூவாயிரம் கோடி ரூபாய் மிச்சப்படுத்த திட்டமிட்டிருந்தது மத்திய அரசு. கொள்முதல் விலை ஏறி விட்டது; எனவே விற்பனை விலையையும் ஏற்றியாக வேண்டும் என்று வாதிட்டது. மேலும், புதிய பொருளாதாரக் கொள்கையின் ஒரு முக்கிய அம்சம், மானியங்களைப் படிப்படியாகக் குறைப்பது. 'இதைத்தானே நாங்கள் செய்ய முற்பட்டிருக்கிறோம்' என்று அரசுத் தரப்பில் கூறப்படுகிறது.




மானியச் செலவுகளைக் குறைக்க வேண்டும் என்பது உண்மைதான். ஆனால், ஏழையிலும் ஏழையான எளிய மக்களின் வயிற்றிலா முதலில் அடிப்பது! பொது விநியோக முறை மூலம் அதிகம் பயனடைவோர் இத்தகைய மக்கள்தான். உணவுப் பொருள்களின் விலை உயர்வு என்பது அவர்களுக்கு இழைக்கப்படும் கொடுமையேயொழிய, புத்திசாலித்தனமான பொருளாதார நடவடிக்கை அல்ல.

'ஒவ்வொரு மாநிலத்திலும் பொது விநியோக முறை மாறுபடுகிறது. சில பிரிவினருக்கு மட்டும் விலை உயர்வை ரத்து செய்திருப்பது போதாது. ஏழைகளுள் அனேகம் பேர் இந்தச் சுமையைத் தாங்க இயலாமல் தவிப்பார்கள்' என்று இடதுசாரிக் கட்சிகள் சுட்டிக்காட்டுகின்றன.

தமிழக முதல்வர், தமது அரசே இந்த விலையுயர்வை ஏற்கும் என்று அறிவித்தாலும் மறைமுகமாக வரிகள் மூலம் மக்கள் தலையில் சுமை இறங்கத்தான் போகிறது.

போதாக்குறைக்கு உணவு உற்பத்திக்கு உதவுகின்ற யூரியா உரத்தின் விலையும் உயர்த்தப் பட்டுள்ளது.

இதனால் உணவு உற்பத்தி பாதிக்கப்படுமானால் விலைவாசி விஷம் போல் ஏறும் என்பது அடிப்படைப் பொருளாதாரம்.

சமையல் எரிவாயு விலை ஏற்றம் என்பது உணவுப் பொருட்கள் விலையேற்றம் அளவுக்கு நேரடியாக ஏழைகளை பாதிக்காது போகலாம். ஆனால் புத்திசாலி வாக்காளர்கள் அடங்கிய மத்தியதர வகுப்பை இந்த விலை உயர்வு மோசமாகத் தாக்கும். உணவகங்கள், ஹோட்டல்கள் யாவுமே சமையல் காஸ் பயன்படுத்துவதால், சமைத்த உணவுப் பண்டங்களின் விலையும் ஏறப் போகிறது. இதனால் மத்தியதர வகுப்பினர் மட்டுமின்றி ஏழை எளிய மக்களும் கூட பாதிக்கப்படத்தான் போகிறார்கள்!

சந்தைப் பொருளாதாரத்தைத் தீவிரமாகப் பின்பற்றும் முன்னேறிய நாடுகளில் கூட, உணவு மானியங்கள் முக்கியமாகக் கருதப்படுகின்றன.




பி.ஜே.பி. ஆட்சி இதையெல்லாம் யோசித்துப் பார்க்காமல் முடிவெடுத்திருப்பது தற்கொலைக் குச் சமம்!

வெறும் வெங்காயத்தின் விலை உயர்வு மட்டுமே கடந்த தேர்தல்களின்போது ஆளும் கட்சிக்கு அடிமேல் அடிவாங்கிக் கொடுத்தது. இப்போது அனைத்துப் பொருள்களும் விலை ஏறினால், மக்களுக்கு மத்திய அரசிடம் மிஞ்சியுள்ள கொஞ்ச - நஞ்ச அனுதாபமும் மரியாதை யும் காற்றோடு பறந்து விடும்!

அரசியல் சூழ்நிலையோ ஸ்திரமாக இல்லை. நாளை திடீர்த் தேர்தல் வந்தால், அதில் தாங்கள் அவலமாகத் தோற்பதற்கும், எதிர்க்கட்சியினர் சுலபமாக ஜெயிப்பதற்குமே பாதை போட்டிருக்கிறது பி.ஜே.பி.

மானியச் செலவுகள் என்பது பெரிய சுமைதான் என்பதை மறுக்க முடியாது. ஆனால் அவற்றை ஆண்டாண்டு காலமாக மக்களுக்கு வழங்கி, பழக்கப்படுத்தி விட்டு திடீரென்று கணிசமாகக் குறைப்பதில் நியாயம் இல்லை. விலைவாசிகளை ஸ்திரப்படுத்தவும் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும் தொழில், வர்த்தக சூழல்களை வளப்படுத்தவும் போதுமான முயற்சிகளை அரசு மேற்கொள்ள வேண்டும். அதே சமயத்தில் உற்பத்திக்கு உதவாத அரசாங்கச் செலவு களையும் அமைச்சர்களின் ஆடம்பரச் செலவுகளையும் குறைத்து வழிகாட்ட வேண்டும். தலைவர்கள் எளிமைக்கு முன்னுதாரணமாக விளங்க வேண்டும்.

இதையெல்லாம் ஒருசேர மனப்பூர்வமாகச் செய்ய அவர்கள் முன்வந்தால் சிக்கனமும் பொருளாதார விழிப்புணர்வும் ஓர் இயக்கமாகவே நாடு முழுவதும் பரவும்.

இப்போது எடுத்துள்ள நடவடிக்கைகள் பி.ஜே.பியை அரசியல்ரீதியாக பலவீனப்படுத்தும். விலை உயர்வைக் கண்டிக்கும் எதிர்க்கட்சியினர், உள்ளூர மகிழ்ச்சியே கொள்வார்கள். கசப் பான காரியங்களைத் தாங்கள் செய்வதற்கு அவசியமின்றி, பி.ஜே.பியே நிறைவேற்றி, தங்கள் வெற்றிக்கும் பாதை அமைத்துக் கொடுத்துள்ளது என்பதற்காக!

# இப்படியெல்லாம்

## கோவிந்தாச்சார்யா பேட்டி

**பாரதீய ஜனதா கட்சியின் அகில இந்தியப் பொதுச்செயலாளர் கோவிந்தாச்சார்யா, அண்மையில் சென்னை வந்திருந்தார். பல்வேறு விஷயங்கள் குறித்தும் நாம் கேட்ட கேள்விகளுக்குத் தயக்கமில்லாமல், பளிச்சென்று பதில் வந்தது. அவரிடமிருந்து. பேட்டியிலிருந்து:**

“**ஊ**ழல் புகார்களிலிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்ளும் திறமை படைத்தவர் ஜெயலலிதா' என்று கூறியிருக்கிறீர்கள். எதற்காக இப்படி ஒரு சர்டிபிகேட்?”

“ஜெயலலிதா மீதுள்ள ஊழல் குற்றச்சாட்டுகளை ஆதரித்தோ, கண்டித்தோ நான் எதுவும் சொல்லவில்லை. தம் மீதுள்ள வழக்குகளை, ஜெயலலிதாவே கையாண்டு கொள்வார். அவருக்காக பா.ஜ.க. வக்காலத்து வாங்க வேண்டிய அவசியமில்லை. சட்டம் அதன் பாட்டுக்குச் செயல்படும்; ஜெயலலிதாவுக்காக அதைத் தளர்த்தவோ, கடுமையாக்கவோ தேவையில்லை என்றுதான் நான் சொன்னேன். இதற்குப் போய் நான் ஜெயலலிதாவுக்கு சர்டிபிகேட் கொடுப்பதாக ஏன் நினைக்கிறீர்கள்?”

“இப்படிச் சொன்னாலும் சமீபத்தில் சிறப்பு நீதிமன்ற விஷயத்தில்கூட மத்திய அரசு ஜெ.வுக்குச் சாதகமாகத் தன் நிலையை மாற்றிக் கொண்டு விட்டதே!”

“நான் மறுபடியும் சொல்கிறேன். சட்டம் தன் கடமையைச் செய்யும். அதில் தலையிட்டு யாரையும் காப்பாற்ற பா.ஜ.க. முனையாது.”

“ஜெயின் டைரியில் அத்வானியின் பெயர் இருந்த ஒரே காரணத்துக்காக, வழக்கு தொடரப்பட்டவுடன், அத்வானி எம்.பி. பதவியை ராஜினாமா செய்த ஒரு கட்சியின் 'கிளீன் இமேஜ்' ஜெ. கூட்டணிக்குப் பின் அடிபட்டு விட்டதே! எப்படி சரி செய்யப் போகிறீர்கள்?”

“தூய்மை என்பதற்கான அளவுகோல், கட்சிக்குக் கட்சி மாறுபடும். பா.ஜ.க.வில் அத்வானி நடந்து கொண்டதுபோல், கூட்டணிக் கட்சிகள் அனைத்தும் நடந்து கொள்ள வேண்டும் என்று நாங்கள் எப்படி கட்டாயப்படுத்த முடியும்? அவரவர் அளவுகோலைப் பயன்படுத்திக் கொள்ளட்டும்.”

“சிறுபான்மை மக்களுக்கு அநீதி இழைக்கப்படும்போது அதைத் தடுக்கச் சட்டம் இருக்கிறது. அதனைப் பயன்படுத்தி நடவடிக்கை எடுத்து, குற்றம் செய்தவரைத் தண்டிக்க உங்களுக்கு அதிகாரம் இருக்கிறது. அப்படி இருந்தும், உரியவர் மீது நடவடிக்கை எடுப்பதில் கடுமை காட்டாமல், பிரதமர் வாஜ்பாய் உண்ணாவிரதம் இருப்பது கேலிக்குரியதாக இருக்கிறதே!”

“மத நல்லிணக்கம் என்பது நாட்டின் அந்தந்தப் பகுதிகளில் வசிக்கும் மக்களிடையே நிலவும் சூழ்நிலையைப் பொறுத்தது. சட்டம் மூலமோ, போலீஸ் உதவியுடனோ, மதநல்லிணக்கத்தைச் சாதித்துவிட முடியாது. அது மக்களின் மனம் சம்பந்தப்பட்ட விஷயம். எனவேதான், மத நல்லிணக்கத்துக்குக் குந்தகம் விளைவிப்பவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டாலும், சமூகத்தில் பரஸ்பர ஒற்றுமையை ஏற்படுத்த, ஆட்சி சம்மந்தப்படாத நடவடிக்கைகளும் அவசியம். அந்த விதத்தில், பிரதமர் மேற்கொண்ட உண்ணாவிரதம், மக்கள் மனத்திலுள்ள வேறுபாடுகளைக் களைந்து சகோதரர்களாக வாழ வழி கோலும்.”

“ஒரிஸ்ஸா சமூக சேவகரும் அவரது இரண்டு குழந்தைகளும் மனிதாபிமானமே இல்லாமல் உயிருடன் எரிக்கப்பட்டிருக்கிறார்கள். குஜராத்திலும், ம.பி.யிலும் சிறுபான்மை மக்களுக்கு அக்கிரமம் நிகழ்ந்துள்ளது. இந்தச் சூழ்நிலையில் 'சர்வதேசச் சதி' என்று சொல்வது திசை திருப்புகிற முயற்சிதானே?”

“ஒரிசா சம்பவம் மனவேதனையளிக்கிற ஒன்று. அது கடும் கண்டனத்துக்குரியது என்பதில் இரண்டாவது கருத்து இருக்க முடியாது. ஆனால், அதற்காக ஆதாரம் ஏதுவுமில்லாமல் பஜ்ரங் தளத்தைக் குற்றம் சொல்லிவிடலாமா? குஜராத்தில் வழக்கமான இந்துக்களின் ஊர்வலத்தின்போது திடீரென்று கல்லெறிந்து, கலகம் விளைவித்ததன் பின்னணி என்ன? இந்தச் சம்பவங்களுக்கும்

வாடிகன் மற்றும் வாஷிங்டன் நகரங்களுக்கும் ஏதாவது தொடர்பு உண்டா என்பது கவனமுடன் ஆராயப்பட வேண்டும். இதைத்தான் ஒரிஸ்ஸா சென்று வந்த மத்திய அமைச்சர்கள் குழு கூறியுள்ளது."

"பா.ஜ.க கூட்டணிக் கட்சிகளுக்குள் முரண்பாடுகள் நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றன. ஒருவர் மீது ஒருவர் சேற்றை வாரி வீசுகிறார்கள். அப்புறம் ஒருங்கிணைப்புக் குழு என்று ஒன்று எதற்காக?"

"பல்வேறு கட்சிகளுடனும் கூட்டணியாக அரசு அமைக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டதால், 'காமன் மினிமம் புரோகிராம்' உருவாக்கப்பட்டது. ஒருங்கிணைப்புக்குழு உருவாக்கப்பட்டது. இப்போதும் கூட்டணிக் கட்சிகளிடையே மாறுபட்டக் கருத்துகள் இருக்கவே செய்கின்றன. அதனால்தான் ஒருங்கிணைப்புக் கமிட்டியின் தேவை அதிகமாகியிருக்கிறது. அடிக்கடி ஒருங்கிணைப்புக் கமிட்டிக் கூட்டம் நடைபெற்று, பிரச்னைகள் அலசப்பட்டால், நிலைமை இன்னும் சுமுகமாகும் என பா.ஜ.க கருதுகிறது." •



# பிரச்னை வரும் என்று எதிர்பார்க்கவில்லை!

"அமைச்சரவையில் யாரைச் சேர்த்துக் கொள்ளுவது என்பது பிரதமரின் உரிமை. ஜெயலலிதா, மம்தாவுக்கெல்லாம் ஏன் பயந்து கொண்டு அமைச்சரவை விஸ்தரிப்பை ஒத்திப் போட வேண்டும்?"

"பிரதமரின் உரிமைதான் அது என்பது வாஸ்தவம். ஆனால் ஒரு கூட்டணி ஆட்சியில், ஒரு தலைப்பட்சமாக முடிவுகள் எடுக்காமல், அனைவரையும் அரவணைத்துப் போவதுதானே சரியான அணுகுமுறை?"

"அரசாங்கமும், கட்சியும் கொஞ்சம் கொஞ்சமாக வாஜ்பாயின் கட்டுப்பாட்டிலிருந்து வெளியேறிக் கொண்டிருக்கிறது என்று கூறப்படுகிறதே?"

"அதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். பிரதமரானவுடன் அடல்ஜியின் இமேஜ் கூடியுள்ளது. அவரது திறமை மக்களுக்குப் புரிகிறது."

"பா.ஜ.க, கூட்டணிக் கட்சிகளுடன் அரசுப் பொறுப்பு ஏற்றபோது, இப்படியெல்லாம் பிரச்னைகளைச் சந்திக்க வேண்டியிருக்கும் என எதிர்பார்த்தீர்களா?"

"கூட்டணி ஆட்சி என்பது ஒரு புதிய முயற்சி என்கிற காரணத்தால், பிரச்னைகள் வரும் என்று எதிர்பார்த்தோம்."

"இப்படியெல்லாம் அடிக்கடி பிரச்னைகள் வரும் என்று எதிர்பார்த்தீர்களா?"

"இல்லை!" ●

சந்திப்பு: **மௌலி**

# அப்புறம் என்ன ஆச்சு?



கந்தக் கடவுளையே தமது சொந்தக் கடவுளாக பூஜித்தவர் வாரியார் சுவாமிகள். மேடைப் பிரசங்கம் தொடங்கி, சினிமா வரை, முருகன் பெருமைகளைப் பலவிதமாக எடுத்துச் சொன்ன வாரியார், தினமும் முருகனுக்கு பூஜை செய்யாமல் தண்ணீர் கூட அருந்த மாட்டார். அவர் பூஜித்த முருகன் அவரிடம் வந்து சேர்ந்த கதை தெரியுமா?

"1933-ல் மதுரை, திருச்செந்தூர் உட்படப் பல கோவில்களுக்கும் பயணம் மேற்கொண்டிருந்த வாரியார் சுவாமிகள், திருச்சியை அடுத்த வயலூர் முருகன் கோவிலுக்கும் வந்து முருகனை வழிபட்டார். அப்போது இறைவன் இட்ட ஆணையை சிரமேற்கொண்டு, வயலூர் முருகன் கோவில் திருப்பணியை மேற்கொண்டார். 1936-ல் அந்தக் கோவிலின் கும்பாபிஷேகத்தை வெகு விமரிசையாக நடத்தி வைத்தார். அப்போது, வயலூர் முருகப் பெருமானைப் போலவே, முருகன் விக்கிரகம் ஒன்றைத் தாம் பூஜிப்பதற்காக உருவாக்கச் செய்தார். கும்பாபிஷேகத்தின் போது வைத்து பூஜித்த அந்த வள்ளி, தெய்வானையோடு கூடிய முருகன் விக்கிரகத்தை அன்று முதல் தம் வீட்டில் வைத்து, நாள்தோறும் பூஜித்து வந்தார்" என்கிறார் வாரியாரின் சகோதரர் மகனாகிய கோடிலிங்கம்.

''சுவாமிகள் சொற்பொழிவுகளை முடித்து விட்டு, வீடு திரும்ப நடுநிசியாகி விடும். அதன் பின்பும், உறங்கப் போய் விட மாட்டார். அன்பர்கள் பத்து இருபது பேருக்காவது தம் கைப்பட பதில் கடிதம் எழுதி விட்டுத்தான் உறங்குவார். உறங்கச் செல்லும் முன்பாக, மறுநாள் காலை பூஜைக்கு வேண்டிய அனைத்துப் பொருட்களும் தயாராக இருக்கிறதல்லவா? என்று மறக்காமல் கேட்பார்.

"காலையில் எழுந்தவுடன், நீராடி பூஜை செய்ய அமர்ந்து விடுவார். சூரிய பூஜையில் தொடங்கி, பிள்ளையார் பூஜை, லட்சுமி பூஜை, லிங்க பூஜை, முருகன் பூஜை என்று சுமார் இரண்டு மணி நேரமாகும், பூஜை முடிவதற்கு. பூஜைக்கு தினமும் பலர் வருவார்கள். பூஜை முடிந்தபின், அபிஷேகப் பால், விபூதி விநியோகிப்பார். அதன் பிறகு தான் தண்ணீர் பருகுவது வழக்கம். வழக்கமாக, காலை ஏழு மணி முதல் ஒன்பது மணி வரை பூஜை நேரம்.

''வெளியூர்களுக்குச் செல்லும்போது, முருகர் விக்கிரகம், அனைத்து பூஜைக்குத் தேவையான பொருட்களையும் பிரத்யேகப் பெட்டியில் வைத்து, கூடவே எடுத்துக் கொண்டு போவார். அதுதான் அவருடைய மெயின் லக்கேஜ். பஸ்ஸில் பயணம் செய்கிறபோது அந்தப் பெட்டியினைக் காலடியில் வைத்துக் கொள்ள அவருக்கு மனம் ஒப்பாது. எனவே, தம் சீட்டுக்குப் பக்கத்து சீட்டிலேயே அதை வைத்துக் கொள்வார். அது மட்டுமில்லை. அதற்கென்று தனி டிக்கெட்டும் வாங்கத் தவற மாட்டார்.



விக்கிரகத்துக்கு யார் பூஜை செய்யப் போகிறார்கள் என்பதுதான்' என்று பதில் சொன்னார்.

"19 அக்டோபர் 1993 அன்று அதிகாலை ஐந்து மணிக்கெல்லாம் தமது பூஜையை முடித்துவிட்டு, லண்டனுக்குச் செல்ல காலை ஒன்பது மணிக்கு விமானம் ஏறினார் வாரியார். ஆனால், லண்டனில் இறங்கியதும் அவருக்கு உடல்நலம் குன்றி விட்டது. மருத்துவர்களின் தீவிர சிகிச்சைக்குப் பின் நிலைமை முன்னேற்றம் கண்டது. மறுபடியும் இந்தியாவுக்கு அவரை அனுப்பி வைத்தார்கள்.

"7.11.93 அன்று மும்பையில் வந்திறங்கிய வாரியார் கேட்ட முதல் கேள்வி, 'நான் இங்கேயே பூஜையை முடித்து

# வாரியார் பூஜித்த முருகன் விக்கிரகம்

பிற்காலத்தில் காரில் பயணம் செய்த சமயங்களில், தம்முடன் காரில் எடுத்துக் கொண்டு போவார்.

"வெளியூர்களில் எங்கே தங்கினாலும், அங்கேயே பூஜையை வைத்துக் கொள்வார். தம் வீட்டில் வைத்து சுவாமிகள் பூஜை செய்வதைப் பெரும்பேறாகக் கருதி, அன்பர்கள் சர்க்கரைப் பொங்கல் போன்று எதையாவது நைவேத்தியத்துக்குத் தயாரித்துத் தருவார்கள்.

"ஒரு தடவை வாரியாரிடம், 'உங்களுக்குப் பிறகு, உங்களைப் போல சமயச் சொற்பொழிவாற்ற யார் இருக்கிறார்கள்?' என்று பேட்டியின்போது கேட்டார்கள். அதற்கு, 'சமயச் சொற்பொழிவு செய்யவாவது ஆட்கள் இருக்கிறார்கள். என் கவலையெல்லாம் 'எனக்குப் பிறகு, இந்த

விடட்டுமா?' ஆனால், உடனடியாகச் சென்னை புறப்படவிருப்பதால், சென்னைக்குப் போனபின் வீட்டில் பூஜையை வைத்துக் கொள்ளும்படி அவரிடம் சொல்லப்பட்டது. ஆனால், பறக்கும் விமானத்திலேயே சுவாமிகளின் உயிர் பிரிந்தது" என்று நினைவுகூர்ந்தார் கோடிலிங்கம்.

இப்போதும், வாரியார் பூஜித்த விக்கிரகத்துக்கு தினப்படி பூஜை நடைபெறுகிறது. அது இப்போது பெரம்பூரில் கோடிலிங்கத்தின் வீட்டில் வைத்துத்தான் பூஜிக்கப்படுகிறது. கோடிலிங்கத்துக்குக் கண் பார்வை இல்லை என்பதால், அவரது மகன்களான ஆனந்த் (வயது 19) குகன் (வயது 16) இருவரும் தினசரி பூஜை செய்து வருகிறார்கள். ●

— கௌதம்

## வாண்டு சைகாலஜி

# "இரண்டு டாடா சுமோ

"உன் பிறந்த நாளை இந்தத் தடவை கொஞ்சம் வித்தியாசமா கொண்டாட லாமா...?" என்று கேட்டால், ஆர்வத்தோடு ஒப்புக் கொள்வார்கள் குழந்தைகள்.

ஏழை மாணவர் விடுதி, அனாதை இல்லம் என்று ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்து அழைத்துப் போய்க் காட்டி, அதன் அங்கத்தினர்களுடன் உணவருந்தியோ, அவர்களுக்கு இனிப்புகள் வழங்கியோ பிறந்த நாளைக் கொண்டாடச் செய்யலாம். வீட்டுப் பணியாளரின் குழந்தைகளை வரச் சொல்லி இனிப்புகளைக் கொடுத்து விளையாடச் செய்யலாம்.

இந்த அனுபவம் குழந்தைகளை இரு விதங்களில் தயார் செய்யும். முதலில், பகிர்தல் என்பதன் அர்த்தத்தைப் புரியவைக்கும். சினேகத்துடன் பகிர்வதற்கும் அவ்வப்போது யாசகம் தருவதற்கும் இடையே வித்தியாசம் இருப்பதை உணர்த்தும்.

"திரும்பவும் நாளைக்கு இங்கே வரலாமா? எல்லாருக்கும் இனிப்பு தரலாமா...?" என்று சிறுவர்கள் கேட்கும்போது,

"நிச்சயமாக வரலாம்" என்று மகிழ்ச்சியில் சொல்லிவிடக் கூடாது.

"நாளைக்கே திரும்பவும் நம்மால் வர முடியாது. மற்ற வேலைகளையும் செய்யணுமில்லியா...? அப்புறம் தினமும் ஸ்வீட் வாங்கணும்னா நம்மால முடியுமா...?"

"ஏன் முடியாது...?"

"உனக்கு ஸ்கூல் ஃபீஸ், யூனிஃபார்ம், டான்ஸ் கிளாஸ் ஃபீஸ், அப்புறம் அப்பா ஸ்கூட்டருக்குப் பெட்ரோல், பால் கார்டு, காய்கறி, கேஸ் சிலிண்டர்னு நிறைய செலவு இருக்கில்லியா...?"

"அப்படின்னா இன்னிக்கு மட்டும் இவங்களுக்கு ஸ்வீட் வாங்க எப்படி பைசா கிடைச்சுது...?"

"அப்பாவும் நானும் தினமும் கொஞ்சம் பணம் இதுக்குன்னு தனியா எடுத்து வைச்சுடுவோம்... அப்புறம் ஒருநாள் எல்லாத்தையும் சேர்க்கறப்போ இப்படி நூறு பேருக்கு ஸ்வீட் வாங்கித் தர்ற அளவுக்கு இருக்கும்..."

"நானும் சேர்த்து வைக்கட்டுமா?"

"வைக்கலாமே..."

"ஆனா, எனக்கு நீதானே பணம் தரணும்...?"

"நீ இன்னும் கொஞ்சம் வளர்ந்தப்புறம் நிச்சயமா உனக்குன்னு தனியா பணம் தர்றேன். அப்போ சேர்த்து வைக்கலாம். ஆனா, அதுவரைக்கும் நீ உன்னோட புத்தகம், பொம்மை துணிகளெல்லாம் கூட தரலாமே இவங்களுக்கு...?"

– இப்படிச் சொன்னால் குழந்தைகள் சற்றுக் கலவரமாகி 'தங்கள் பொருள்களைக் கொடுப்பதா?' என்று தயங்குவது இயல்பு.

"போன வருஷத்து ஸ்கூல் புத்தகமெல்லாம் இருக்கு இல்லியா...?"

"ம்..."

"அதையெல்லாம் கொடுக்கலாம். அப்புறம் உனக்குச் சின்னதாப் போயிட்ட பட்டுப் பாவாடைச் சட்டை... இப்போ நீ அந்த குதிரைவால் பொம்மையை வைச்சுக்கிட்டு விளையாடறதில்லியே... அதையும் தரலாம்..."

"என் நீல பாவாடைச் சட்டையைத் தர மாட்டேன். மீரா ஆன்டியோட பாப்பாவுக்குத்தான் அது..."

"மீரா ஆன்டி, பாப்பாவுக்கு நிறைய புதுத் துணி வாங்குவாங்க. உனக்கு நான் வாங்கித் தருவேன்... இன்னிக்கு நாம பார்த்த குழந்தைகளுக்கு வாங்கித் தர யாரும் இல்லையே..."

இந்த உரையாடலுக்குப் பிறகு குழந்தைகள் ஆழ்ந்து சிந்திப்பார்கள். சுபாவத்தில் இளகியவர்களாயிருந்தால் கொஞ்சம் கவலையும் கலக்கமும் கூட ஏற்படலாம்.

இதைப் பாராட்டிப் பெரிதுபடுத்தாமல் இயல்பாக ஏற்றுக் கொள்வது உதவும்.

அவர்களுக்காக வருந்துவதை விட, இயன்ற வழியில் உதவுவதே நல்லது என்று உணர்த்த வேண்டும். அடுத்தடுத்த நிகழ்ச்சிகளில் கவலையும் சோகமும் மறைந்து போனாலும் பொறுப்பும் பகிர்தல் உணர்வும் விதையூன்றப்பட்டுவிடும்.

ஆனால் சில தினங்கள் சென்று, வேறு விதமான ஒப்புநோக்குதலுடன் குழந்தை நம்மை அணுகினால் வியப்பதற்கில்லை.

"அம்மா! வினய் வீட்டுல ஒவ்வொரு ரூம்லயும் ஏ.ஸி. இருக்கு. அவங்கப்பாவுக்கு மூணு கார் இருக்கு - இரண்டு டாடா சுமோ, ஒரு ஜென்..."

"அப்படியா...?"

# விஜி

"ஆமாம். நிஜம்மா இருக்கு.... வினய் ரொம்ப லக்கி, இல்லைம்மா...?"

"நீயும் லக்கிதான்" என்று சமாதானப் படுத்த முயன்றால், "ஆனால், அப்பாகிட்டே மூணு கார் இல்லையே..." என்று பதில் வரும்.

"வினய் வீட்டுல எல்லா ரூம்லயும் ஏ.ஸி. இருக்கு, நம்ம வீட்டுல எல்லா ரூம்லயும் ஃபேன் இருக்கு. ஆனால் ராமு வீட்டுல ஒரு ரூம்ல கூட ஃபேன் இல்லியே...?"

# ஒரு ஜென்..!"



- இப்படி வாக்குவாதத்துக்கு முடிவு கட்டினால் போதாது. பணமிருப்பது பெரிதல்ல; அதை வீணடிக்காமல் உபயோகமாய்ச் செலவழிப்பது ரொம்ப முக்கியம் என்று காட்டித் தர வேண்டும்.

மாதாந்தர பட்ஜெட் போடும் போதும்; ஒரு முக்கியமான பொருளை வாங்க முடிவெடுத்து செயல்படுத்தும் போதும் குழந்தைகளை அந்தத் தருணங்களில் பங்கேற்கச் செய்யுங்கள்.

'இந்த மாதம் தவணைகளை எப்படிச் செலுத்தப் போகிறோம்?' என்ற கவலையை அவர்களுக்குத் தெரிவிக்க அவசியமில்லை. ஆனால், அந்த மாதத்துக்கான சோப் அல்லது பேஸ்ட் வாங்கும் பொறுப்பை அவர்களுடையதாக்கலாம். என்ன பிராண்ட் தேர்வு செய்வது? அதன் விலை என்ன...? நமக்குக் கட்டுப்படியாகிற விலையா...?' என்பதைச் சிந்தித்து முடிவெடுக்கிற உரிமையை வழங்கலாம்.

இந்தச் சின்ன உரிமைகள் பெரிய பொறுப்புணர்ச்சிக்கு உதவும்.

(அடுத்த வாரம் வரை...)

# வேஷம்

"பேசாமல் குட்டிப் பிசாசு வேஷம் போடலாம்! கறுப்பு டிரஸ் மாட்டி, தலையை வாராமல், அப்படியே மேடைக்கு அனுப்பி விடலாம். நிச்சயம் பிரைஸ் நம்ம நிஷாவுக்குத்தான்" என்ற என் கிண்டலை, என் மனைவி வழக்கம் போலவே ஜீரணிக்கவில்லை.

"போதும் நம்ம குழந்தையைக் கிண்டல் பண்ணியது. பெரியவர்களுக்கும் மாறுவேடப் போட்டி உண்டாமா? இருந்தால், நீங்க பேர் குடுங்க. ஆபீசுக்கு அரக்க பரக்க தலையைக் கூட சரியாக வாரிக் கொள்ளாமல் கிளம்பிப் போவீங்களே, அதே மாதிரி மேடைக்குப் போனால், 'அட! கீழ்ப்பாக்கத்துல இருந்து, வந்த ஆசாமி மாதிரியே தத்ரூபமா இருக்கீங்கன்னு, அத்தனை பரிசையும் உங்களுக்கே கொடுத்திடுவாங்க" என்று பதிலுக்குக் கிண்டலடித்தாள்.

சர்க்குலர் கொடுத்த கையோடு, ஒரு பெண்மணி, ஆண்டு விழா நிகழ்ச்சி நிரலில் காணப்பட்ட மாறு வேடப் போட்டிக்கு ஆபீஸ்காரர்கள் வீட்டுக் குழந்தைகளின் பெயர் கேட்டு எழுதிக் கொள்ள வந்தார்.

நான், என் மனைவியைக் கலந்தாலோசித்து விட்டுச் சொல்வதாய்க் கூறி விட்டேன். அன்று மாலை, மாறு வேடப் போட்டியில் நிஷாவுக்கு என்ன வேடம் போடுவது என்ற டிஸ்கஷன் ஆரம்பித்தபோதுதான் இந்த வாக்குவாதம்!

"என் சிநேகிதி ராமாவுக்கு போன் பண்றேன். அவள் பையன் நிறைய மாறுவேடப் போட்டிகளில் கலந்து கொண்டு பரிசு வாங்கியிருக்கான். அவள் நல்ல ஐடியா கொடுப்பாள்" என்று சொல்லிவிட்டு, ராமாவின் நெம்பரைச் சுழற்றினாள். விசு இல்லாமலேயே ஒரு அரட்டை அரங்கம் நடந்து முடிய இருபத்தியேழரை நிமிஷம் ஆனது. (விசுவுக்கே, விளம்பர இடை வேளைகளையும் சேர்த்து வாரத்துக்கு இருபத்தி ஏழு நிமிஷம்தான்) அடுத்து, அரசியல் கட்சிகளின் 'பிரஸ் பிரீஃபிங்' போலத் தங்கள் உரையாடலின் ஹைலைட்டை மட்டும் சொன்னாள் என் திருமதி. ராமா கொடுத்த மாறுவேடப் போட்டி ஐடியாக்களின் லிஸ்ட் இதோ: சூப்பர்மேன், ஸ்பைடர் மேன், ரோபோ, மைக்கேல் ஜாக்ஸன், மிக்கி மவுஸ், டொனால்டு...

"சூப்பர் மேன் போடணும் என்றால் டிரஸ் பிரச்னையே இல்லை."

"ஏன்! நம்ம கிட்ட ஏது அந்த டிரஸ் எல்லாம்?"

"அதில்லை. ஜட்டி போட்டு, அதுக்கு மேல பேண்ட் போட்டா, சாதாரண மனிதன். பேண்ட் போட்டு, மேல ஜட்டி போட்டா சூப்பர்மேன். அதான் சொன்னேன்."

"பெரிய எஸ்.வி. சேகர்னு நினைப்பு! ஏதாவது இந்தியன் கேரக்டர்ஸ் போடலாமே!" என்றாள்.

"அனுமார் போடலாமா?" இது நான்.

"ஊகூம்" சுருக்கென்று கோபம் வந்து விட்டது. "உங்க அக்கா பையனுக்குப் போட்டா, பொருத்தமா இருக்கும்."



கொஞ்ச நேரம் யோசித்தபின், "சார்லி சாப்ளின் வேஷம் போட்டால் எப்படி இருக்கும்?" என்று கேட்டாள்.

சாப்ளின் இந்தியன் கேரக்டரா என்று எனக்குள்ளே கேள்வி எழுந்தது. அதைக் கேட்டு வைத்தால், வீண் சண்டைதான் வரும் என்று சமாதானமாய் இருந்து விட்டேன். (யாரும் நோபெல் சமாதானப் பரிசுக்கு சிபாரிசு செய்வார்களா?) அது மட்டுமில்லை. புரட்சித் தலைவியின் அர்த்தமற்ற அறிக்கைகளையும் பாராட்டுகிற அதி.மு.க. மாஜிகள் போல, "ஓ! சூப்பர் ஐடியா! வழக்கமாய் இதுபோன்ற வேஷம் யாருமே போட மாட்டார்கள், குழந்தைகள் முதல் வாலிப, வயோதிக அன்பர்கள் வரை அனைவர் மனதிலும் சிரஞ்சீவித்துவம் பெற்று விட்ட கேரக்டராயிற்றே சார்லி சாப்ளின்! சே! இது மாதிரி சூப்பர் ஐடியாவெல்லாம் உனக்கு எப்படி வருகிறது?" என்று பாராட்டு

எஸ். சந்திரமௌலி



மழையில்... ஸாரி. பாராட்டு வெள்ளத்தில் திக்குமுக்காட வைத்து விட்டேன். எல்லாவற்றுக்கும் ஒரே காரணம். அவள் மனத்தில் 'சாப்ளின்' என்று தோன்றி விட்டதல்லவா? இனி அந்த சாப்ளினே வந்து, வேண்டாம் என்றாலும் தன் முடிவை மாற்றிக் கொள்ளப் போவதில்லை.

''காஸ்டியூம் பிரச்னையும் வராது. போன தீபாவளிக்கு நம்ம சித்தார்த்துக்கு வாங்கினமே, கறுப்பு-த்ரீ-பீஸ் சூட் அதுவே இருக்கு. கறுப்பு பேண்ட், வெள்ளை சட்டை, கறுப்பு கோட் மூணும் நோ பிராப்ளம். சித்தார்த்தோட யூனிபாரம் கறுப்பு டையை யூஸ் பண்ணிக்கலாம். நிஷா ஸ்கூலுக்கு போட்டுகிட்டுப் போகிற கறுப்பு ஷூவே போதும். ஒரு தொப்பி ரெடி பண்ணிட்டா மொத்த காஸ்டியூமும் தயார்.''

**க**றுப்பு நிறத்தில் சாப்ளின் ஸ்டைல் தொப்பி தேடும் படலம் துவங்கியது. பிளாட்பாரங்களில் இருந்த குல்லாய் வியாபாரிகளிடம் விசாரித்ததில், எல்லா குல்லாய்களையும், ரம்சானை முன்னிட்டு அரசியல் கட்சித் தலைவர்கள் வாங்கிக் கொண்டு போய்விட்ட தகவலைச் சொன்னதுடன், சாப்ளின் தொப்பிகள் பிளாட்பாரக் கடைகளில் கிடைக்காது என்றும் தெரிவித்தார்.

தொப்பிக்கு என்ன பண்ணுவது என்று தலையைச் சொறிந்து கொண்டே யோசித்த வேளையில் ஒரு ஐடியா வந்தது. டெலிபோன் டைரக்டரியை எடுத்து வைத்துக் கொண்டு, டிசோசா, டிசில்வா என்று ஆங்கிலோ இந்தியப் பெயர்களாகத் தேடினேன். ஏழெட்டுப் பேர்கள் தேறினார்கள். அவர்களின் டெலிபோன் நெம்பர்களை எழுதி எடுத்துக் கொண்டு, ஒருத்தொருத்தராய் டெலிபோன் பண்ணினேன். ஒரு தொப்பி தேறவில்லை. அடுத்தபடியாய் பெஞ்சமின், டிமாண்டி என்று முயற்சி பண்ணினேன். ஒரு நெம்பரில் ஒருத்தர் அகப்பட்டார்.

''ஓ! சாப்ளின் தொப்பியா? இருக்கிறதே!''

''இந்த பதிலைக் கேட்க எத்தனை சந்தோஷமாய் இருக்கிறது தெரியுமா?''

''அந்தத் தொப்பி எங்கள் தாத்தாவுடையது. அவர் சார்லி சாப்ளினின் தீவிர ரசிகர். சார்லி சாப்ளின் படங்களைப் பார்த்துப் பார்த்து அவருக்கு சாதாரணமாய் நடப்பது எப்படி என்பதே மறந்து போய் விட்டது. ஸோ கிரேஸி!''

''தாத்தாவை அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். பாவம்! அவருடைய தொப்பியை எனக்கு ஒரே ஒரு மாலைப் பொழுதுக்குக் கொடுத்து உதவ முடியுமா?''

அவர் சாப்ளின் ரசிகர் என்பதால் அவர் இறந்தபோது, அவரது விருப்பப்படியே அவருடைய சாப்ளின் தொப்பியை அவருக்கு அணிவித்து, அடக்கம் செய்து விட்டோம். அவரது சவப் பெட்டிக்குள்தான் அந்தத் தொப்பியும் இருக்கிறது.''

**வெளிநாட்டு சந்தாதாரர்கள் கவனத்துக்கு:**

1.2.1999லிருந்து வெளிநாட்டு விமானத் தபால் கட்டணத்தை இந்திய அரசு உயர்த்தியுள்ளது. இதன்படி, கல்கி பிரதியின் விமானத் தபால் கட்டணம் ரூ.26/-லிருந்து ரூ. 32/-ஆக தபால் இலாகா உயர்த்தியிருக்கிறது. இதனால் நாங்களும் விமானத் தபால் மூலம் அனுப்பப்படும் கல்கி பிரதியின் ஆண்டுச் சந்தா தொகையை அதிகரிக்க வேண்டியிருக்கிறது. 7.2.99 இதழ் முதல் விமானத் தபால் மூலம் அனுப்பப்படும் கல்கியின் ஆண்டுச் சந்தாத் தொகை ரூ.1900/-; ஆறுமாத சந்தாத் தொகை ரூ. 950/- — நிர்வாகி

"சே!" என்றேன் மனத்துக்குள்.

"ஏங்க, புன்னகை மன்னன்ல கமல் சாப்ளின் வேஷத்துல வருவாரே! கமல் ஆபீஸ்ல கேட்டுப் பார்த்தால் கிடைக்குமா?"

"ஆமாம்! கமல் ஆபீஸ்லே தொப்பி கேட்கலாம்! அப்புறம் உன் பொண்ணுக்கு வள்ளுவர் வேஷம் போடுவே! அப்போ, பாலசந்தருக்கு போன் பண்ணி தாடி கேட்கலாம்!"

"சரி விடுங்க! கிருஷ்ணர், வீரபாண்டிய கட்டபொம்மன் காஸ்டியூமெல்லாம் வாடகைக்குத் தருவாங்களாமே! அங்கேயே இதுவும் கிடைக்காதா?"

ஸ்கூட்டரை எடுத்துக் கொண்டு கோடம்பாக்கம் ராம் தியேட்டர் பக்கம் போய் விசாரித்தேன்.

கடைக்காரர், "சாப்ளின் டிரஸ்தானே சார்? குழந்தைக்கு எத்தனை வயது?" என்றார் உற்சாகமாக.

"அஞ்சு"

பையனிடம் "சாப்ளின் செட் - ரெண்டாம் நெம்பர் எடுத்துக்கிட்டு வா" என்றார்.

பையன் ஒரு அட்டைப் பெட்டியை எடுத்துக் கொண்டு வந்தான். பிரித்தால், கறுப்பு பேண்ட், கோட், வெள்ளை சட்டை, கறுப்பு டை எல்லாம் இருந்தன.

"இந்த ஐட்டமெல்லாம் என்னிடமே இருக்கு. கறுப்பு தொப்பி மட்டும்தான் வேணும்" என்றேன்.

"இந்த டிரஸ், கைத்தடி, தொப்பி எல்லாம் சேர்ந்ததுதான் சாப்ளின் செட். வாடகை ஐம்பது ரூபாய். டெபாசிட் நூறு ரூபாய். தொப்பி மட்டும் தனியாய்த் தருவதில்லை."

"சரி! ஞாயிற்றுக் கிழமை மத்தியானம் வந்து எடுத்துக்கிட்டுப் போகிறேன்" என்று சொல்லி, நூற்றைம்பது ரூபாயைத் தர, அவர் ரசீது எழுதிக் கொடுத்தார்.

ஞாயிற்றுக் கிழமை மதியம் கடைக்குப் போய் டிரஸ் எல்லாம் வாங்கிக் கொண்டு ஆண்டு விழா நடக்கவிருந்த அரங்கத்துக்குப் போய் விட்டோம்.

சார்லி சாப்ளின் செட் ஐட்டங்கள் ஒவ்வொன்றாக எடுத்து வைத்தேன். கறுப்பு பேண்ட்டை அணிவித்தேன். வெள்ளை சட்டையை மாட்டி, 'டக்' பண்ணினேன். அடுத்தது டை. நல்ல காலம்! எனக்கு 'டை' கட்டுவது எப்படி என்று தெரியாது என்பதை கடைக்காரன் தெரிந்து வைத்திருப்பார் போலும்! முடிச்சுப் போட்டு, ரெடியாக இருந்த 'டை'யை, அப்படியே கழுத்தில் மாட்டி, டைட் பண்ண, பர்ஃபெக்ட்! கறுப்புக் கோட்டை எடுத்துப் பிரித்தபோது ஏதோ கறுப்பாக கீழே விழுந்தது. எடுத்துப் பார்த்தால், குட்டியூண்டு மீசை. அட! சார்லி சாப்ளினுக்கு முகத்தில் சின்னதாய் மீசை உண்டே! கடைக்காரனின் தொழில் பக்தியை மெச்சினேன்!

கோந்து தடவி, மூக்குக் கீழே கச்சிதமாய் மீசையை ஒட்டினேன். நிஷாவுக்கு சூப்பராக சாப்ளின் செட்அப் வந்து விட்டது.

மாறுவேடப் போட்டி ஆரம்பமானது. பட்டு மாமி மேடைக்குப் போய், கிட்டு மாமாவைப் பற்றிக் குறைசொல்லி விட்டு, முகவாய்க் கட்டையால், தோள் பட்டையில் ஒரு இடி இடித்துக் கொண்டு விட்டுத் திரும்பினாள். ஔவை சண்முகி போய், ருக்கு.. ருக்கு.. ருக்கு பாட்டுக்கு வாயசைத்து விட்டுத் திரும்பினாள். சந்தன வீரப்பன் மீசை முறுக்கி போலீசுக்கு சவால் விட்டான். எம்.ஜி.ஆர். ஜெயலலிதா எல்லாம் இரட்டை விரலசைத்தனர். கிருஷ்ணர் பகவத்கீதை முதல்வரி சொல்லிவிட்டுப் போனபின், வீரபாண்டிய கட்டபொம்மி (பொம்மனுக்குப் பெண்பால்) வந்தாள். குஸ்தி-இஸ்தி என்று ஒப்புவித்து விட்டு, அந்தப் பெண் இடத்தைக் காலி பண்ணி விட்டுப் போனதும், நிஷாவின் பெயரைக் கூப்பிட்டார்கள்.

"ஏங்க! சொல்லிக் கொடுத்ததை ஒழுங்காய்ப் பண்ணுவாளா?"-என் மனைவிக்கு எல்லாவற்றிலும் சந்தேகம்தான். "அதற்கு சௌகரியமாகத்தானே டயலாக் ஏதுமில்லாமல், சார்லி சாப்ளின் போல, கைத்தடியை ஆட்டியபடி நடக்கக் கற்றுக் கொடுத்திருக்கிறோம். போதாக்குறைக்கு, சார்லி சாப்ளின் வேஷம் என்று முடிவான நாளிலிருந்து, வீடியோவில் எத்தனை சாப்ளின் கேஸட்கள் போட்டுக் காட்டியிருப்போம். அவளுக்கு அப்சர்வேஷன் பவர் ஜாஸ்தி. ஜமாய்த்து விடுவாள்! கவலையேபடாதே!" என்றேன்.

சூப்பராய் கைத்தடியை சுழற்றியபடி, நிஷா மேடையில் நடந்து சென்றபோது செம்ம கிளாப்ஸ். முதல் பரிசும் அவளுக்குத்தான்! பரிசு என்னவென்று நினைக்கிறீர்கள்...? பளபளவென்று கறுப்பு நிறத்தில் ஒரு புத்தம்புது சாப்ளின் தொப்பி!

# உங்களுக்கும் இங்கிலீஷ்ல பேசணும்னு ஆசையா இருக்கா?



மடமடன்னு இங்கிலீஷ்ல பேசணும்னு ஆசையாத்தான் இருக்கு. ஆனா...

ஏதாவது தப்பா பேசிடுவோமோன்னு பயமா இருக்கு. இது தானே உங்க ப்ராப்ளம்?

**Don't worry!**

**விவேகானந்தாவின் 'ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்'**ல சேர்ந்து நீங்க ஈஸியா இங்கிலீஷ் பேசக் கத்துக்கலாம்.

**இன்னும் எதுக்கு யோசிக்கிறீங்க?**

பயிற்சி விவரத்தை படிச்சுப் பார்த்து, கூப்பனை கட் பண்ணி உடனே அனுப்புங்க. பாடங்கள் V.P.P. மூலமா உங்க வீட்டுக்கே வந்துடும்.

**அப்புறம் என்ன?**

பாடங்களைப் படிச்சு, பிராக்டிஸ் பண்ணி மடமடன்னு இங்கிலீஷ்ல பேச ஆரம்பிங்க.

**ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்**

இங்கிலீஷ் வார்த்தைகளை ஓரளவு எழுத, படிக்கத் தெரிந்தவர்கள் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்**, சேர்ந்து, இலக்கணப் பிழையின்றி வாக்கியங்களை அமைக்கக் கற்றுக் கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

**இலக்கணம்** மற்றும் **உரையாடல்** பயிற்சிப் பாடங்கள் அடங்கிய இக்கோர்ஸில் சேர்ந்து பயிற்சி பெறக் கட்டணம் ரூ.395/- மட்டுமே.

**அடிப்படை (Basic) & ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்**

இங்கிலீஷ் வார்த்தைகளை எழுத, படிக்க இயலாதவர்கள் அடிப்படையிலிருந்து தொடங்கி ஆங்கில வார்த்தைகளை ஸ்பெல்லிங் மிஸ்டேக் இல்லாமல் எழுத, படிக்க கற்றுக் கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

**அடிப்படை** மற்றும் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து பயிற்சி பெறக் கட்டணம் ரூ. 525/- மட்டுமே.



உரையாடற்பயிற்சி செய்து பழக பாடங்களுடன் ஆடியோ கேசட் இலவசம்.

கீழ்க்காணும் கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப் புங்கள். பாடங்களையும், கேசட்டையும் V.P.P. மூலம் உடனே அனுப்புகிறோம். தகவல் கிடைத்ததும் தபால் அலுவலகத்தில் பணத்தைச் செலுத்திப் பாடங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

**இதோ கூப்பன்**

☐ நான் விவேகானந்தாவின் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ.395/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

☐ நான் அடிப்படை (Basic) மற்றும் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ.525/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

தேவையான கட்டத்தில் ✓ குறியிடுங்கள்

பெயர்:........................................

முகவரி:........................................

........................................

....................பின்கோடு....................

**VIVEKANANDA INSTITUTE**

KLA

9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-600 017.

INDIA'S No. 1 ENGLISH TRAINING INSTITUTE

**விவேகானந்தாவின் நேர்முகப்பயிற்சி மையங்கள்:** சென்னையில்: தி.நகர், தாம்பரம், தண்டையார்பேட்டை, கீழ்ப்பாக்கம், போரூர். மதுரை, திருச்சி, கோயம்புத்தூர், கிருஷ்ணகிரி, ஈரோடு, திருப்பூர், கும்பூர், திண்டுக்கல், தஞ்சாவூர், அரக்கோணம், வேலூர் மற்றும் பாண்டிச்சேரி.

★ சேலத்தில் எங்களது நேர்முகப்பயிற்சி மையம்: F 13 ஃபேர்லாண்ட்ஸ், சேலம்-16 என்ற புதிய விலாசத்தில் இயங்கி வருகிறது.



# சின்னத் திரையில்...

**மனவியல் மருத்துவர் டாக்டர் மாத்ருபூதம் சென்ற வாரம் தாம் பார்த்த டீ.வி. நிகழ்ச்சிகளை விமர்சிக்கிறார்:**

● காலைத்தென்றலில் டாக்டர் கண்ணன் புல் பூண்டுகளின் மகத்துவத்தை தினமும் கூறுகிறார். அவர் சொன்னபடி சாப்பிட்டு வந்தால் வியாதிகள் குணமாகலாம்; கூடவே ஆடுமாடுகளைப் போல கொம்பு முளைத்து விடுமோ என்ற பயமும் ஏற்படுகிறது!

● ஹரீஷ் நடத்தும் 'பாடுவோர் பாடலாம்' பகுதியில் குழந்தைகளும் கலந்து கொண்டு சுவையாக விளாசித்தள்ளினார்கள். ஆனால் இந்த ரேஞ்சில் போனால், அப்போதுதான் பிரசவமான குழந்தைகள் கலந்து கொள்ளும்படி 'டெலிவரி அறையிலேயே' நிகழ்ச்சி நடத்துவார்களோ?

● குமாரி சச்சு சினிமாவில் கனமான ரோல்கள் தராமல் காமெடி ரோல்கள் மட்டுமே தரப்படுவதால் சினிமாவிலிருந்து ஒதுங்கி விட்டதாகச் சொன்னார், ஒரு பேட்டியில். நம்புவோம்! (வந்ததை ஏற்று நடித்திருந்தால் இன்நேரம் மனோரமா ஆச்சி போல ஒரு சச்சுமாமி கிடைத்திருப்பார்)

● 'டாப் டென்'னில் 'ஹவுஸ்புல்'க்கு முதலிடம். ஆனால் ஜோக் அடிக்க வேண்டும் என்றால் அரசியல் வாதிகள் பற்றி மட்டும் தானா? கே.எஸ்.

ரவிகுமாரின் படத்தில், "கணவனல்லாத வேறொருவனிடமிருந்து பெறப்பட்டு நடைபெறும் செயற்கைக் கருத்தரிப்பையெல்லாம் விஞ்ஞானப் புரட்சி என்று ஒத்துக்கறீங்க. ஆனால் விதவை மறுமணம்கிற சமுதாயப் புரட்சியை இன்னும் ஏத்துக்கத் தயங்கறீங்களே?" என்னும் வசனம் நல்ல பஞ்ச்.

● "நியூசிலாந்துடன் ஆடிய நாலு டெஸ்டுகளில் இந்தியா ஒன்றில் மட்டும் ஏன் ஜெயித்தது?"

"என்ன செய்ய? மழை வந்துடுத்து. அதனாலே அவர்களையும் மீறி ஜெயிச்சுட்டாங்க" - இப்படி 'டோட்டல் கலாட்டா' நிகழ்ச்சியில் நிறைய ஜோக்குகள். அப்போதுதான் சேப்பாக்கத்தில் பாகிஸ்தானிடம் இந்தியா மண்ணைக் கவ்வியிருக்க, வெந்த புண்ணில் வேல். உண்மைகள் கசக்கும்தானே? ●

தொகுப்பு :
**ஜி.எஸ்.எஸ்.**

# மனிதனுக்கு மனிதன்...

சமீபத்தில், மிகக் கொடூரமான முறையில் கொலை செய்யப்பட்ட பா.ஜ.க.வின் திருச்சி கிளைத் தலைவர் டாக்டர் ஸ்ரீதர், பொதுச் சேவையில் அபார நாட்டம் உள்ளவர்.

திருச்சியில் எந்த நோயாளிக்கு ரத்தம் தேவைப்பட்டாலும், டாக்டர் ஸ்ரீதரைத்தான் அணுகுவார்கள். கண்தானம் செய்யும்படி மக்களைத் தூண்டிக் கொண்டே இருந்தவர் இவர்.

ஒரு தடவை, திருச்சி பிஷப்புக்கு மிகவும் நெருக்கமான ஒருவருக்கு ஆபரேஷன். ரொம்ப அரிய குரூப் ரத்தம் தேவைப்பட்டது. எங்கெங்கோ முயற்சித்தும் ரத்தம் கிடைக்கவில்லை. ஸ்ரீதரை அணுகினால் காரியம் நடக்கும். ஆனால், அவர் ஆர்.எஸ்.எஸ்.காரர். ஆகவே அவரை அணுக பிஷப்புக்குத் தயக்கமாக இருந்தது. டாக்டர்கள் மிகவும் வற்புறுத்தவே, இறுதியில் அவர் டாக்டர் ஸ்ரீதரை அணுகினார். உடனே எந்தவிதத் தயக்கமும் காட்டாமல், பலருக்கும் தகவல் அனுப்பி, ஏழெட்டு பாட்டில் ரத்தத்துக்கு ஏற்பாடு செய்தார் ஸ்ரீதர். பிஷப் நன்றி கூறியபோது, "மனிதனுக்கு மனிதன் இது கூடச் செய்யவில்லை என்றால், உயிர் வாழ்ந்து என்ன பயன்!" என்று கேஷுவலாய்ச் சொல்லி விட்டார் ஸ்ரீதர்!

— கி.எம்



• டாக்டர் ஸ்ரீதர்



• மோனோலிசா

# மோகனமானவரா மோனாலிசா?

ஜெயஸ்ரீ ராஜ்

அந்தக் காலைப் பொழுதில், சின்ன மழைத் தூறலில் குளித்துவிட்டு பளிச்சென்றிருந்தது பாரீஸ். மெட்ரோவைச் சுற்றிக் காட்ட வழக்கம்போல் ஒரு 'லோகல் கைடை' நியமித்துவிட்டு, மரியா 'பை' சொல்லிவிட்டார். அன்றுதான் எங்களுக்கு முதல் வரிசையில் முதல் சீட்!

''குட்மார்னிங்.. என்னுடன்தான் நீங்கள் பாரீஸைக் காணப் போகிறீர்கள்'' என்ற இனிமையான சங்கீதம் காதில் ஒலித்தது. நிமிர்ந்தால்... அழகே உருவாக ஓர் உயிர்ச்சிலை! ஃப்ரெஞ்சு ப்யூட்டிகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் அன்றுதான் கண் முன்னால் கண்டோம். ஒவ்வொரு அங்கமும் அள வெடுத்துச் செதுக்கிய பதுமை போலிருந்தாள். சுருள் சுருளான முடி, நீலக் கண்கள்; நமக்குப் புரியும்படியான ஆங்கிலத்தில் பேசினாள். நாங்கள் மிக அருகில் இருந்ததால், எங்களையே பார்த்துப் பேசி, பரவசமாக்கினாள்.

தெருவெல்லாம் பச்சை நிறக் கூண்டுகள்–green columns போஸ்டரடித்து என்னென்னவோ செய்திகளை ஒட்டியிருந்தார்கள். பாரீஸின் நிகழ்ச்சி நிரல் அதுதானாம்!

ஸோன் நதியை வலம் வருகையில் முதலில் எதிர்ப்பட்டது பிரம்மாண்டமான நாட்டர்டாம் கதீட்ரல். விக்டர் ஹயுகோவின் ''ஹன்ச் பேக் ஆஃப் நாட்டர்டாம்'' நினைவில் தாக்கியது. அந்தக் கூனன், தன் காதலியான ஒரு ஜிப்ஸி மரித்ததால், மேலேயிருந்து கீழே குதித்துத் தற்கொலை செய்து கொண்ட கதை மிகப் பிரசித்தம்.

அடுத்து மாக்டலீனா சர்ச். முதலில் இது, நெப்போலியனின் படை வீரர்களுக்கு அர்ப்பணிக்கப்பட்ட கோயிலாக இருந்ததாம். இதன் 52 தூண்களும், வருடத்தின் வாரங்களைக் குறிக்குமாம்; இப்போது கத்தோலிக்க சர்ச்சாக மாறிவிட்ட இதில், டயானாக் கென்று, ஸ்பெஷல் 'மாஸ்' நடத்தப்பட்டதாம்.

நதிக்கரையை ஒட்டி, பச்சை நிறப் பெட்டிகளைத் திறந்து வைத்துக் கொண்டு சில தாடிக்கார இளைஞர்கள், 'ஸெகண்ட் ஹாண்ட்' புத்தகங்களை விற்றுக் கொண்டிருந்தனர். விலை ரொம்ப மலிவு என்றார்கள். ஆனாலும் கடைக்காரர்களிடம் அரசு நிறைய வரி வசூலிப்பதால்.



• வெர்ஸெயில்ஸ் அரண்மனையின் முகப்புத் தோற்றம்



• ஒளிவெள்ளத்தில் லூவர் மியூசியம்

இவர்கள் இனம் தேய்மானத்தில் உள்ள தாம். ஒரு சில இடங்களில் வீடியோ சித் திரக்காரர்கள் இங்கேயும் தென்பட்டனர்.

நதியின் வலக்கரைக் கட்டடங்கள் இரட்டைப்படையிலும், இடது பக்கத்தில் ஒற்றைப்படையிலும் எண்கள் தாங்கி நின்றன. நதியை நோக்கி வருகையில் எண்கள் குறைந்துகொண்டே வந்தன.

ஐரோப்பிய நகரங்களின் பெயர் களைக் கொண்ட தெருக்கள் ஃப்ரான்சில் எக்கச்சக்கமாம். உலகிலேயே பெரிதான 'பாம்பீடோ ஹாஸ்பிடல்' பாரீசில்தான் கட்டப்பட்டு வருகிறதாம்.

தொடர்ந்து, பாரீசுக்குத் தனி முத்திரை பதித்துத் தந்திருக்கும் "ஐஃபல் டவரை" நோக்கிச் சென்றோம். கிறிஸ்டோபர் ஐஃபல் என்ற இன்ஜினியரால் கட்டப் பட்ட இந்த டவரை, முதலில் எல்லோரும் ரொம்ப அசிங்கமாயிருக்கிறதென்று இடித் துத் தள்ள நினைத்திருந்தார்களாம். அதன் பிறகு, உச்சியில் ரேடியோ ஸ்டேஷனை நிறுவும் எண்ணம் உதித்ததாம். எப் படியோ, 1789 படிகளையுடைய இந்த 319 மீட்டர் உயர டவர், இன்றுவரை இடி படாமல், டூரிஸ்டுகளைத் தன்பால் ஈர்த்துக் கொண்டு நிற்கிறது!

இதன், இரண்டாம் மாடியிலுள்ள ரெஸ்டாரண்டில், டேபிள்களெல்லாம் முன்பு, ஆறுமாத காலம்வரை அட் வான்ஸ் புக்கிங் ஆகியிருக்குமாம். இப் போது கி.பி.2000 வரை 'புக்'காகி விட்டதாம்!

**"அவர் தி.மு.க.காரர்னு எப்படிக் கண்டுபிடிச்சீங்க?"**

**"குங்குமத்தைப் பார்த்ததும் அலறி அடிச்சுக்கிட்டு ஓடறாரே!"**

**— நாகூர் ஆர். லோகநாதன்**



இந்த டவருக்கு, மொத்தம் பதினைந்து டன் பெயிண்ட் தேவைப்படுமாம்; ஏழு வருடத்துக்கொருமுறை நிறத்தை மாற்று கிறார்கள். சென்ற முறை சிவப்பு; இம் முறை ப்ரவுன் கலந்த மரூன். டவரின் நடு வில் அறிவிப்புப் பலகை J-792 என்று, கி.பி. 2000க்கு இன்னும் 792 நாள் பாக்கி என்று 'கௌண்ட் டவுனில்' அறிவித்தது! இரவில் மின்னொளியில் இன்னும் கவர்ச்சிகரமாக இருக்குமாம்.

வெளியே சின்ன கடைகளில், ஐஃபில் டவரை கீ செயின்களாகவும், பேனா ஸ்டாண்டுகளாகவும், ஷோ கேஸ் பொம்மைகளாகவும் விற்கிறார்கள். ஒரு பஞ்சாபி இளைஞனிடம் 'போஸ்ட் கார் டுகள்' வாங்கினோம். டூரிஸ்டுகளை நம்பி வியாபாரத்தில் இறங்கி இருக்கும் இவன், 'ஏதோ கொஞ்சம்' ஊருக்கும் அனுப்பு வானாம்!

ஐஃபில் டவருக்கு முன்பாக, யோகாச் சார்யா B.K.S. ஐயங்கார் என்ற இந்தியர், ஷார்ட்ஸ் மட்டும் அணிந்து கொண்டு, நடுங்கும் குளிரில், டவரைப் போலவே ஒரு யோகா போஸ் கொடுத்துப் பிரபல மானார். 'லே ஃபிகரோ' என்ற ஃப்ரெஞ் சுப் பத்திரிகை, 'டவரை விட்டுத்தள் ளுங்கள்; இதுவல்லவோ அற்புதம்" என அதிசயித்திருந்தது!

ooo ஃப்ரெஞ்ச் ஓபரா அரங்கம், ஃப்ரெஞ்ச் காமெடி தியேட்டர், ராயல் பேலஸ் எல்லாவற்றையும் நோட்டம் வி ோதே 'லூவர்' மியூசியத்தை ... தாம். 1793ல் ம்யூசியமாக மாறிய இ... அரண்மனைதான், உலகிலேயே மிகப் பெரிய ம்யூசியம்! இந்த பிரம் மாண்ட கட்டடத்தின் ஒவ்வொரு பகுதி யையும் ஒவ்வொரு மன்னன் கட்டி னானாம். முழுவதுமாகப் பார்த்து ரசிக்க, குறைந்தபட்சம் முப்பது நாட்களும், அதிக பட்சம் ஆறு வாரங்களும் ஆக லாம்.

பதினெட்டு வயதுக்குட்பட்டவர் களுக்கும், மாதத்தின் முதல் ஞாயிறன்று எல்லோருக்கும் ஃப்ரீ என்ட்ரி! தினமும் மூன்று மணிக்கு மேலும், மற்ற ஞாயிறு களிலும் பாதிக் கட்டணம்; ஊனமுற் றோருக்கு 'வீல்சேர்' வசதி! ஆறு மொழி களில் 'ஆடியோ' கைடுகள்; ஏழு இலா காக்கள், மூன்று பிரிவுகள் கொண்ட கட் டடத்தில் எதெது எங்கெங்கே இருக்கிறது

என்பது பற்றிய குறிப்புகளை, நல்ல வேளை, முன் கூட்டியே தந்து விடுகிறார்கள். எஸ்கலேட்டரிலும், லிஃப்டுகளிலும் ஏறி இறங்கும் கூட்டத்தைப் பார்த்தாலே மயக்கம் வரும்!

நாங்கள் முதலில், பெயிண்டிங் பகுதியில் புகழ்பெற்ற 'மோனாலிசா'வை தரிசிக்கப் போனோம். பெரிய ஹால் முழுதும் அசத்தலான பெயிண்டிங்குகள். நடுவில், ஃப்ரேமைச் சுற்றி சின்ன பல்புகளை எல்லாம் போட்டுக் கொண்டு, பிரத்யேக ஒளி மழையில் மோனாலிசா, சோகச் சிரிப்புச் சிரித்துக் கொண்டிருந்தார். அவரை நொடிக்கொருதரம் ஃப்ளாஷ் பண்ணிக் கொண்டிருந்தனர். அந்த இடத்தைச் சுற்றி அப்படி ஒரு கும்பல்!

உண்மையில், லியனார்டோ டாவின்ஸியின் நண்பருடைய மனைவியைக் காட்டிலும் அதி அற்புதமான பெயிண்டிங்குகள் எவ்வளவோ இருந்தன. 'நைட் வாட்ச்மேன்', 'லாஸ்ட் ஸப்பர்', 'ரிஸரக்ஷன்', 'நோவாஸ் ஆரக்' போன்ற பிரசித்தி பெற்றவை தவிர, ஏக அவதரித்தவுடன் தங்கள் குழந்தைகளைக் கொல்ல வரும் ராட்சதர்களிடமிருந்து தப்பிக்கும் பெண்கள், வயதானோர் போன்றோரின் உருவங்கள் மிகத் தத்ரூபமாக இருந்தன.

அடுத்து, ஸ்கல்ப்சர்ஸ் என்று போட்டிருந்த சிற்பப் பகுதிக்குத் தாவினோம். இத்தாலிய, எகிப்திய, க்ரேக்க சிற்பங்களெல்லாம் அத்தனை 'நாச்சுரல்'– எழிலிலும், கம்பீரத்திலும், உயிர்ப்பிலும் ஒன்றை ஒன்று தூக்கிச் சாப்பிட்டன– கண்கள் பேசின. உதடுகள் துடித்தன. தோள்கள் புடைத்திருந்தன, கைகளில் நரம்புகள் தெரிந்தன. கன்னத்தில் ரேகைள், மயிர்க்கால்கள் கூட தத்ரூபமாய் அமைந்திருந்தன. ஆண், பெண் சிலைகளெல்லாமே, புஷ்டியாக, ஆரோக்யத்துடனிருந்தன.

இன்னும் சில 'ஓரியண்டல் ஆண்டிக்விடீஸ்', 'லூவர் ஹிஸ்டரி' போன்றவற்றின் மீது ஒரு பார்வையை வீசிவிட்டு, கண்கள் கலைக் கோயில்களாகவே மாறும் கட்டத்தில் திரும்பி விட்டோம்!

ஒருவழியாக மாலையில், வெர்ஸெயில்ஸை நோக்கி இரண்டு மணி நேரப் பயணம். 'வெர்ஸெயில்ஸ் ஒப்பந்தத்தால்' சரித்திரப் பிரசித்தி பெற்ற இதை, பாரிஸின் 'பாக் யார்ட்' என்றழைக்கிறார்கள். லூயி மன்னர்களின் அரண்மனை, அவர்களுடைய ராணிகளின் இருப்பிடங்கள், அதிலுள்ள பொருள்கள் என வரிசையாகப் பார்வையாளர்கள் அழைத்துச் செல்லப்பட்டனர். 'ஹால் ஆஃப் மிரர்ஸ்' என்ற ஒரு பிரும்மாண்ட வரவேற்பறையைத் தவிர வேறெதுவும் அவ்வளவு பிரமாதமாகப் படவில்லை.



• மாக்டலீனா சர்ச்

சேர்த்து வைத்துத் தோட்டமும் துரவும் அத்தனை கவர்ச்சி! அழகிய சிலைகள், ஃபவுண்டன்கள், மரம் செடி கொடிகள்... ஓரிடத்தைச் சுட்டிக் காட்டி, ''பனிக்காலத்தில் இந்தக் குறிப்பிட்ட தோட்டத்தை உள்ளே வைத்துப் பூட்டி விடுவார்கள்'' என்றபோது ஆச்சர்யமாக இருந்தது. செயற்கைத் தோட்டமல்ல, நடமாடும் மொபைல் தோட்டமது! ஒரு மணி நேரம் இயற்கை அழகை ரசித்தபின், பாரீசுக்குத் திரும்பிவிட்டோம்; வழி காட்டிய அழகிக்குப் பிரியாவிடை அளித்தோம்.

ஹோட்டலை வந்தடைந்தபோது... ''இன்று தான் சுற்றுலாவின் கடைசி நாள்; நாளை மதியம் லண்டனுக்குத் திரும்புகிறோம்'' என மரியா அறிவித்ததும் தொண்டைக் குழியில் கோலி குண்டு அடைத்தது... அட அதற்குள் முடிந்து விட்டதா?

(தொடரும்)

# 9 நிலா

புரபசர் முதலில் சிவராமைக் கவனிக்க வில்லை. யாருடனோ அலட்சியமாகப் பேசிக் கொண்டிருந்தார்.

"நீங்க ஃபோன் பண்ணிட்டு வாங்க."

"நான் உங்களைத்தான் ரொம்ப நம்பி யிருக்கேன்."

புரபசர் தலையசைத்துவிட்டுத் திரும்பிய போது சிவராம் எதிரில் நின்றான்.

"ஹலோ..."

"என்ன... மனசு மாறி விட்டதா..."

"இன்னும் யோசனைதான் புரபசர்."

"உன் இயல்பே அப்படித்தான் இருக்கும். பிறகு வருத்தப்படுவாய்."

இருவரும் நடந்து கொண்டிருந்தனர்.

"வணக்கம்..."

யாரோ புரபசரின் குறுக்கே ஸ்கூட்டரை நிறுத்தி இறங்கினார்.

"நீயா... எப்படி இருக்கிறாய்" என்றார் புரபசர்.

"ஃபைன். புது வண்டி வாங்கினேன். சரி. ஒரு ஜாலி ரைடு போகலாம்னு..."

புரபசர் ரெஜிஸ்ட்ரேஷன் எண்ணைப் பார்த்து முகஞ்சுளித்தார். ஸ்கூட்டர்காரர் அதைக் கவனிக்காமல் சிவராமைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"ஸாரை எங்கேயோ பார்த்தாப்ல இருக்கு..."

சிவராம் புன்னகைத்தான்.

"இதே ஊர்தான்..."

"பேங்க்ல இருக்கிங்களா.."

"இல்லை..."

"பிசினஸா..."

"ஊஹூம்..."

"ரொம்ப ஃபெமிலியரா இருக்கே..."

"அப்படியா..." என்றான் அழுத்தமாய்.

வந்தவர் அதற்கு மேல் அலுத்துப் போய் புரபசரிடம் விடை பெற்றுப் போய் விட்டார்.

"சரியான அட்டை. பார்த்த மாதிரி இருக்கேன்னு சொல்லியே ஃப்ரெண்ட்ஷிப் வச்சுப்பான். ஏதாவது ஒரு வகையில நம்மை உபயோகப் படுத்திருவான்..."

"ஸ்கூட்டர் நம்பரைப் பார்த்து... நீங்க.."

"ஓ... கவனிச்சியா. கூட்டுத் தொகை சரியில்லை. அவனோட எண்ணுக்கு விரோதி எண். பிரச்னை பண்ணும்."

அதற்கு மேல் விளக்கினால் சிவராமுக்குப் புரியாது என்கிற தொனியில் பேசினார்.

"அது எப்படி ஸார். எல்லாமே எண்கள் தானே. ஒரு நம்பருக்கு நல்ல பலன். இன்னொன்றுக்கு வேற பலன்னு..."

"ப்ச்... ரோட்டுல பேச முடியாத சப்ஜெக்ட். வீட்டுக்கு வா... அது சரி. உனக்



கேன் இந்த வீண் வம்பு. நீதான் நம்பாதவனாச்சே..."

"நம்பிக்கை உண்டாக்கிக்கத்தான்."

புரபசர் பதில் பேசவில்லை. சிவராம் அவரைச் சீண்ட நினைத்தான்.

"உங்களுக்கும் ஆகாத எண் எதுவும் இருக்கா..."

"ம்! இருக்கு."

"என்னது... நான் தெரிஞ்சுக்கலாமா."

புரபசர் யோசித்தார். பிறகு சொன்னார்.

# எட்டு

"இதைச் சொல்லணும்னு அவசியம் இல்லே. சரி சொல்றேன். எட்டு எனக்கு ஆகாது."

சிவராமுக்கு அவர் முகத்தில் தெரிந்த தீவிரம் திகைப்பூட்டியது. என்ன நம்பிக்கை.

"வரட்டுமா..."

ஸ்கூட்டர் நிறுத்தி வைத்த இடம் வர சிவராம் நின்று விட்டான்.

புரப்சர் விறுவிறுவென நடந்து போய் விட்டார்.

**ஸ்** வேதாசலம் தனத்தைத் தான் கவனித்துக் கொள்வதாய்ச் சொல்லிவிட, சிவராமுக்கு நிம்மதியானது.

வேதாசலம் இவனுக்காகக் காத்திருந்தது வேறு சங்கடப் படுத்தியது.

"வா.. சாப்பிட்டு விடலாமா..."

"பத்து நிமிஷம் போகட்டும்."

இருவருமாய் அமர்ந்தனர்.

"லைம் ஜூஸ் வேணுமா..."

வேண்டாமென்று தலையசைத்தான்.

"இப்போதெல்லாம் எல்லாமே அலுப்பு தருகிறது. வயதாகிறதோனாறு..."

வேதாசலம் பாதி முனகலாகச் சொன்னார்.

சிவராமுக்குச் சட்டென்று நினைவில் வர, கையோடு கொண்டு வந்திருந்த ஷர்ட் பார்சலை அப்பாவிடம் நீட்டினான்.

"எதுக்கு." என்றார்.

ஆனாலும் வாங்கி அருகில் வைத்துக் கொண்டார்.

"அம்மா இருந்தவரை ஒரு நாள் கூட ஷர்ட்டுக்கு அளவு கொடுக்கப் போனதில்லை" என்றார் பெருமூச்சுடன்.

சிவராம் ஹாலில் மாட்டியிருந்த அம்மாவின் புகைப்படத்தைப் பார்த்தான்.

"இன்று என்னவோ... பழைய நினைவுகளாய்... நிறைய... அவளைப் பெண் பார்க்கப் போனபோது... முதலில் எனக்குப் பிடிக்கவில்லைதான். என்னவோ நினைப்பு. ஆனால் உன் பாட்டியின் வற்புறுத்தல். வேறு வழி... தாலி கட்டியாச்சு. எங்கள் தாம்பத்தியம் வெற்றிதான். முழுக் காரணம் உன் அம்மா. அவள் பொறுமை, துளிகூட நான் பிறழாமல் கட்டிக் காத்த சாமர்த்தியம்."

வேதாசலம் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

"உன்னிடம் சொன்னால் என்ன... வேறு ஒருத்தியை என் மனசாரக் கூட நினைக்காமல்.... சுத்தமாய் இருந்தேன் என்றால், உன் அம்மாவால்தான்."

'ஏனப்பா பொய் சொல்கிறீர்கள்.'

சிவராம் மனசு அலறியது.

"எவ்வளவோ பேர்... பொறாமைக்காரர்கள்... என்னென்னவோ சொன்னார்களே. நம்பவே இல்லையே... என்மேல் அவ்வளவு நம்பிக்கை..."

இல்லை. மனசுக்குள் வருத்தப்பட்டாள். உங்களுக்கு அது தெரியாது.

"ரொம்ப நேரமாச்சே. சாப்பிடலாமா."

தலையசைத்தான்.

சாப்பாட்டில் மனசு பதியவில்லை. என்ன துணிச்சலாப் பொய் பேசுகிறார். அம்மா என்னமாய் சங்கடப்பட்டாள். செய்வதை எல்லாம் செய்து விட்டு இப்போது முழுப் பூசணியை சோற்றில் மறைத்த மாதிரி 'உத்தமர்' என்று பட்டம் கட்டிக்

**ரிஷபன்**

கொள்கிறாரே.

"உன் கவனம் சாப்பாட்டில் இல்லை போலிருக்கிறதே..."

"எ... என்ன."

சிவராம் மனசு அலைபாய்வதைத் தடுக்க இயலாமல் தவித்தான்.

"இந்தா, இதைப் பார்த்திருக்கிறாயா.."

சாப்பாடு முடிந்ததும் பழைய ஆல்பம் ஒன்றை எடுத்துக் கொடுத்தார்.

"நேற்று தற்செயலாய்க் கிடைத்தது. பீரோவினுள் இருந்தது" என்றார்.

பிரித்தான். கறுப்பு வெள்ளைப் படங்கள் முதல் கலர்ப்படங்கள் வரை வெவ்வேறு கால கட்டங்களில் எடுக்கப்பட்டவை.

அம்மாவின் மிகச் சிறிய வயசுப் படங் கூட இருந்தது.

"அடையாளம் தெரிகிறதா. உன் அம்மா தான்."

அப்பாவியான தோற்றம். தலைமுடி அடர்த்தியாய்... பெரிய விழிகள்.

"இது உன் தாத்தா, பாட்டி..."

"இவ உன் அத்தை.. இப்ப இல்லே. ப்ச்..."

பக்கத்தில் அமர்ந்து பிரிக்கப் பிரிக்க சொல்லிக் கொண்டே வந்தார்.

கோட் சூட்டில் வேதாசலமும் இன்னொரு நபரும் நின்றிருந்தார்கள். யார் இது.. ரொம்பத் தெரிந்த முகம்.

"...புரபசர்தான்... தெரிகிறதா..."

"ரொம்ப நாளாய் பழக்கமா..." என்றான்.

"ரொம்ப நாட்களுக்கு முன்பு பழக்கம். உனக்குச் சிறு வயதாய் இருந்தபோது இந்த வீட்டிற்கு வந்திருக்கிறான். அப்புறம் எங் கெங்கேயோ போய்விட்டு.. இங்கு வந்தான். உன் அம்மா வழியில் ஏதோ உறவு என்று நினைக்கிறேன்."

புரபசரின் பார்வையில் அப்போதே எதிராளியை ஊடுருவும் சாமர்த்தியம் தெரிந்தது. புகைப்படம் என்பதே மறந்து நிஜமாய்ப் பார்க்கிற மாதிரி முறைப்பு.

"ரொம்ப சந்தோஷம் சிவா" என்றார் கிளம்பும்போது.

அப்பா இத்தனை நெகிழ்ந்து பார்த்ததே இல்லை என்பதால் அவனுக்கும் லேசாய்க் கண்கள் கசிந்தன.

"ஒரு நிமிஷம்..."

சிவராமின் குரலில் அதட்டல் வந்து விட்டது.

சிவப்பு நிற சோற்றுப் பருக்கைகளை விசிறியவர் திரும்பிப் பார்த்தார்.

இன்று எப்படியும் அவரைப் பிடித்து

"அம்மாவை எதுக்குடா எதிர்த்துப் பேசுனே?"

"போங்கப்பா, உங்களுக்குப் பொறாமை!"

– சென்னிமலை சி.பி. செந்தில்குமார்

விடுவது என்று முடிவு கட்டியிருந்தான்.

"என்ன வேணும்."

"ஸாரி... நீங்கள் வந்து... உங்ககூடக் கொஞ்சம் பேசணும்."

"வாங்கோ. என் ரூமுக்குப் போகலாம்."

சிவராம் தயக்கத்துடன் பின்தொடர்ந் தான்.

அறைக்கதவைத் திறந்ததும் கும்மென்று சாம்பிராணி மணம்.

"தாராளமா உள்ளே வரலாம்..."

வாசலில் தயங்கியவனை அழைத்தார்.

ஹாலில் குறிப்பிடும்படியாய் பொருட்கள் எதுவும் இல்லை. அலமாரியில் நிறையப் புத்தகங்கள்.

"நீங்க தனியாத்தான் இருக்கீங்களா" என்றான் என்ன கேட்பதென்று தயங்கி.

"இல்லை..."

சிவராமின் பார்வை அலை பாய்வதைக் கண்டு சிரித்தார்.

"இதோ இந்த அறைக்குள் பாருங்கள்.."

இரண்டு அறைகள், சமையலறை, ஹால், பாத்ரூம் என்ற அமைப்பில் இருந்தது அந்த ஃப்ளாட்.

அவர் சுட்டிக்காட்டிய அறைக்குள் எட்டிப்பார்த்தான்.

அறையின் ஒரு பக்கச் சுவர் முழுவதும் ஸ்வாமி படங்கள்.

நடுவில் பிரும்மாண்டமாய் அம்பிகை. எதிரே பீடமிட்டு அம்பாள் சிலை பெரிய சைஸில். ஐந்து முகங்களும் எரியும் குத்து விளக்கு.

"எனக்குக் கல்யாணமாகி மூன்றே வருஷம் ரொம்ப சந்தோஷமாய் இருந்தேன். ப்ச்... அது நிஜமில்லை. என்ன காரணம் என்று சொல்வது.. குழந்தை ஒரே வயசில் தவறிப் போனது. அடுத்த வாரம் ஆயுஷ் ஹோமம்... அவளுக்குத்தான் என்னை விடப் பாதிப்பு.. பித்துப் பிடித்த மாதிரி இருந்தவள்.. கொல்லைக் கிணற்றில் குதித்து விட்டாள்..."

தழுதழுக்கிற குரலில் சொல்லிக் கொண்டே போனார்.

"கால் போன போக்கில் அலைந்தேன். திருவண்ணாமலை பக்கம் போனபோது



தான் யாரோ ஒருவர் பரதேசி மாதிரி.. கையைப் பிடித்து நிறுத்தினார். அம்பாள் உபாசனை பண்றியான்னு கேட்டார். அவர் கேட்டதோ அல்லது என்னைத் தொட்டதோ... ஏதோ ஒன்று. என்னை அப்படியே மாற்றிவிட்டது.. சின்ன வயசில் சூரிய நமஸ்காரம் செய்வேன். இப்போது அம்பாள் மந்திர உபதேசம்... ஸ்ரீ பாலாம்பிகை. பாலாதிரிபுரசுந்தரி... எல்லாருமே எனக்கு சாட்சாத் அவள்தான். பாலா...பாலா..."

சிவராம் திகைத்துப் போய் நின்றான்.

"பிரசாதம் நைவேத்தியம் செய்வேன். குங்கும அர்ச்சனை... ஒரு கவளம்... மொட்டை மாடியில் போய் ஸமர்பித்து விட்டு வருவேன்..."

சரிதான். ஆன்மீகத் தேடல். பயந்த மாதிரி வேறு உபத்திரவம் எதுவும் இல்லாத நபர்.

"என்னவோ பேசணும்னு சொன்னீங்களே" என்றார்.

"இல்லை. ஒன்றும் இல்லை."

"இந்தாருங்கள். வெறுங்கையாய் நீங்கள் திரும்பிப் போகக் கூடாது."

அர்ச்சித்த குங்குமத்தைக் கை நிறைய அள்ளிக் கொடுத்தார்.

"பேப்பர் வேணுமா..."

சுற்றுமுற்றும் தேடி ஒரு காகிதத்தை எடுத்துக் கொடுத்தார்.

சிவராம் காகிதத்தில் போட்டு மடிக்கப் போனான். ஏதோ எழுதியிருந்தது பார்வையில் தென்பட... படித்தான்.

**'த**ம்பி...'

தம்பியா... அவசரமாய் குங்குமத்தை கையில் கொட்டிக் கொண்டு படித்தான்.

'தம்பி..'

நாதான் வேலு எழுதறேன்.

உன்னைய மாதிரி ரொம்ப நல்ல பிள்ளையை பார்க்கவே முடியாது.

என்னோட போறாத நேரம் உன்னைக் கூட சங்கடப்படுத்திட்டேன்.

என்னோட காலம் முடியப் போவுது.

உன்கிட்டே இதுவரை மறைச்சு வச்ச ஒரு உண்மையை நான் சொல்லப் போறேன்.

அதுக்கு முன்னால என்னை நீ மன்னிச்சுரு.'

சிவராம் படபடப்பாய் அதைப் படிப்பதைக் கண்டவர் ஏதோ விசாரிக்க முயன்றார்.

சிவராமின் குழப்பம் அதிகமானது. காகிதத்தில் அவனால் படிக்க முடிந்த வரிகள் சொற்பமே. ஈரமும் குங்குமமும் கலந்து வார்த்தைகளின் மீது ஈஷிக் கொள்ள, ஒருவாறு யூகித்து இதுவரை படித்து விட்டான்.

கடைசியாய் ஒரு பாரா எழுதப்பட்டிருந்தது தெரிந்தது. ஆனால் வார்த்தைகளைத் தான் சரியாகப் படிக்க இயலவில்லை.

'இப்படிக்கு வேலு..' என்று முடித்திருந்தது.

தொலைந்து போன கடிதம் இங்கு எப்படி வந்தது?

"ஸார்... இந்த பேப்பர் எப்படி உங்களுக்குக் கிடைச்சுது?"

"ஞாபகம் இல்லே. பொதுவா கீழே ஒரு பேப்பர் கிடந்தாலே... எடுத்து மடிச்சு வச்சுப்பேன். மிதிபடக் கூடாதுன்னு. இங்கே தான் நம்ம வீட்டுக்குள்ளே கிடந்திருக்கணும்."

"வரேன்..."

வெளியே வந்தான்.

'தம்பி, என்னால... ஒரு உண்மையை... நீ நினைக்கிற.. தனம்.. அப்பா... என்னை மன்னிச்சுரு. அவளைக் கை விட்டு விடாதே...'

புரிபட்ட வார்த்தைகள் புரிபடாத அர்த்தத்தைத் தேடி அவன் நினைவுகளைக் குழம்பச் செய்தன.

**ரா**ஜப்பா அவனைப் பார்த்ததும் திடுக்கிட்டார்.

"என்ன ஆச்சு உனக்கு."

"இந்தக் கடிதத்தைப் பாருங்களேன்..."

"கண்ணாடி இல்லாமல் எனக்குப் படிக்க வராது..." என்றவர் சூரிய ஒளி படும்படி பிடித்துக் கொண்டார்.

"சரியாய்ப் புரியலியே.. பேப்பர் ரொம்பப் பழசு.. அதுவும் பென்சில்ல எழுதியிருக்கே..ரொம்ப நைஞ்சு போயிருக்கு..."

விர்ரென்று ஒரு புழுதிக்காற்று அடிக்க, பேப்பர் கிழிந்து காற்றில் பறந்தது.

"அடடா.." என்றார் ராஜப்பா.

"ரொம்ப முக்கியமானதா.."

என்னவென்று சொல்ல?

சிவராம் விக்கித்து நின்றான்.

(தொடரும்)

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி நூற்றாண்டு 1899-1999 100

கல்கி கலெக்ஷன்

நாற்பத்து எட்டாம் அத்தியாயம்

## 'கலபதி'யின் மரணம்

குதிரை மீது வந்த பெண்மணி யார் என்பது இளவரசருக்குத் தெரிந்து போயிற்று. குதிரை நின்ற இடத்தை நோக்கி அவர் விரைந்து சென்றார். அவருடன் பூங்குழலியும் போனாள். மற்றவர்களும் சற்றுத் தூரத்தில் தயங்கித் தயங்கிப் போனார்கள்.

ஊமை ராணி அதற்குள் குதிரையிலிருந்து இறங்கி விட்டாள். பின்னால் கூட்டமாக வந்தவர்களைச் சற்றுக் கவலையுடன் பார்த்துவிட்டு பூங்குழலியிடம் சமிக்ஞை பாஷையில் ஏதோ சொன்னாள். "பெரியம்மா காட்டில் ஏதோ அதிசயத்தைப் பார்த்திருக்கிறாள். அந்த இடத்துக்கு நம்மை வரும்படி அழைக்கிறாள்!" என்றாள். இளவரசர் அக்கணமே போவதென்று தீர்மானித்து விட்டார். மற்றவர்களும் தம்முடன் வரலாமா என்று கேட்கச் சொன்னார். ஊமை ராணி சிறிது யோசித்துவிட்டு, சம்மதத்துக்கு அறிகுறியாகத் தலையை அசைத்தாள்.

போகும்போது எல்லோரும் அவள் ஏறி வந்த குதிரையைப் பற்றியே பேசிக் கொண்டு போனார்கள். அது அரபு நாட்டிலிருந்து வந்த அற்புதமான உயர் ஜாதிக் குதிரை. இந்த மூதாட்டிக்கு எப்படிக் கிடைத்தது? சமீப காலத்தில் இந்தப் பிரதேசத்தில் சைன்யம் எதுவும்

அமரர் கல்கி

வந்து இறங்கவில்லை; போர் ஒன்றும் நடக்கவில்லை. அப்படியிருக்கும்போது இக்குதிரை இந்தப் பெண்மணிக்கு எப்படிக் கிடைத்திருக்க முடியும்?

தொண்டைமானாற்றின் முகத்துவாரத்தின் அருகில் சோழ நாட்டுக் கப்பல் ஒன்று கரை தட்டிப் புதைந்திருந்ததைப் பார்த்தோம். அங்கிருந்து சிறிது தூரம் வரையில் இலங்கைத் தீவின் கரை தென்கிழக்குத் திசையாக வளைந்து நெளிந்து சென்றது. அடிக்கடி கடல் நீர் பூமிக்குள் புகுந்து சிறிய நீர் நிலைகளையும் பெரிய நீர் நிலைகளையும் உண்டாக்கியிருந்தது. இத்தகைய வளைகுடா ஒன்றுக்குள்ளிருந்து தான் வந்தியத்தேவன் முதலியவர்கள் அன்று காலையில் பார்த்த கப்பல் வெளியே வந்து கடலில் சென்றது.

இப்போது ஊமை ராணி தென்கிழக்குத் திசையிலே அவர்களை அழைத்துக்கொண்டு சென்றாள். அடர்ந்த காட்டுக்குள்ளே புகுந்து சென்றாள். போகப் போக, இளவரசரின் ஆர்வம் அதிகமாயிற்று. ஏதோ ஒரு முக்கியமான சம்பவம் நடந்திருக்க வேண்டும்; இல்லாவிட்டால் இவ்வளவு தூரம் நம்மை இம்மூதாட்டி அழைத்துப் போக மாட்டாள் என்று எண்ணினார். திடீரென்று அச்சம்பவம் அவர்களுடைய கண் முன்னால் வந்து நின்றது!

காட்டில் சிறிது இடைவெளி ஏற்பட்டதும் நீர்நிலை ஒன்று தெரிந்தது. அதன் கரையில் மனிதர்கள் சிலர் இறந்து கிடந்தார்கள். பிணங்களின் நாற்றத்தோடு காய்ந்து போன மனித இரத்தத்தின் நாற்றமும் கலந்து வந்தது. எத்தனையோ போர்க்களங்களின் அனுபவம் பெற்ற அந்த மனிதர்களுக்கு உயிரில்லா மனித உடல்களும் காய்ந்த இரத்தமும் புதிய அனுபவங்கள் அல்ல. எனினும், ஏதோ அதிசயமான, மர்ம பயங்கரமான காரியம் இங்கே நடந்திருக்கிறது என்ற எண்ணம் எல்லாருடைய மனத்திலும் ஆர்வத்தோடு அருவருப்பையும் உண்டாக்கியது.

அருகிலே சென்று பார்த்தால் உயிரற்றுக் கிடந்த உடல்கள் எல்லாம் தமிழ்நாட்டு மாலுமிகளின் உடல்கள் என்று தெரிய வந்தது. "சீக்கிரம்! சீக்கிரம்! யாருக்காவது இன்னும் உயிர் இருக்கிறதா என்று பாருங்கள்!" என இளவரசர் கூவினார். அவருடன் வந்தவர்கள் ஒவ்வோர் உடலுக்கு அருகிலும் சென்று பரிசோதிக்கத் தொடங்கினார்கள்.

இளவரசரை ஊமை ராணி மறுபடியும் கையினால் சமிக்ஞை செய்து அழைத்துப் போனாள். உடல்கள் கிடந்த இடத்துக்குச் சிறிது தூரத்துக்குக்கப்பால் இருந்த மரத்தடிக்கு அழைத்துப் போனாள். அந்த மரத்தடியில் ஒரு கோர ஸ்வரூபம் சாய்ந்து படுத்திருந்தது. படுத்திருந்தவன் மனிதன்தான். ஆனால் அதை நம்புவது கஷ்டமாயிருந்தது. உடம்பெல்லாம் காயங்கள். மண்டையில் பட்டிருந்த காயங்களிலிருந்து இரத்தம் முகத்தில் வழிந்து மிகப் பயங்கரமாகச் செய்திருந்தது. ஒவ்வொரு கணமும் மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த அம்மனிதனுடைய முகத்தில் இளவரசரைக் கண்டதும் மலர்ச்சியின் சிறிய அறிகுறி தோன்றியது. அவன் வாய் திறந்து ஏதோ பேச முயன்றான். ஆனால் அவன் வாயிலும் இரத்தமாயிருந்தபடியால் அவனுடைய முகத்தின் கோரம் அதிகமாயிற்று.

இளவரசர் பரபரப்புடன் அவன் அருகில் போய் உட்கார்ந்தார். "சீக்கிரம் தண்ணீர் கொண்டு வாருங்கள்!" என்று கத்தினார்.

அம்மனிதன், "வேண்டாம் இளவரசே! சற்று முன்னால்தான் இந்தப்

பெண்மணி தண்ணீர் கொடுத்தாள். அவள் அச்சமயம் வராதிருந்தால் இதற்குள் என் உயிர் பிரிந்திருக்கும். ஐயா! தங்களுக்குத் துரோகம் செய்ய வந்ததின் பலனை இங்கேயே அனுபவித்துவிட்டேன். மறுஉலகில் இதற்காக மறுபடியும் கடவுள் என்னைத் தண்டிக்க மாட்டார்'' என்றான்.

இளவரசர் அவன் குரலைக் கேட்டதும் முகத்தை உற்றுப் பார்த்தார். "ஆ! கலபதி!* இது என்ன பேச்சு! இதெல்லாம் எப்படி நடந்தது? எனக்கு நீர் என்ன துரோகம் செய்வதற்காக வந்தீர்? அதை நான் நம்பவே முடியாது!'' என்றார்.

"ஐயா! தங்கள் உத்தம குணத்தினால் அப்படிச் சொல்கிறீர்கள். பழுவேட்டரையர்களின் சொற்படி தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டு போக வந்தேன். இதோ கட்டளை!'' என்று சொல்லி, மடியிலிருந்து ஓலை ஒன்றை எடுத்துக் கொடுத்தான், சாகுந்தறுவாயில் இருந்த கலபதி.

ஓலையைக் கண்ணோட்டமாக இளவரசர் ஒரு வினாடியில் பார்வையிட்டார். 'இதில் உமது துரோகம் என்ன? சக்கரவர்த்தியின் கட்டளையைத்தானே நிறைவேற்ற வந்தீர்? அதையறிந்து நானே விரைந்து ஓடி வந்தேன். அதற்குள் இந்த விபரீதங்கள் எப்படி நேர்ந்தன? சீக்கிரம் சொல்லுங்கள்!'' என்றார்.

"சீக்கிரம் சொல்லத்தான் வேண்டும். இல்லாவிட்டால் அப்புறம் சொல்லவே முடியாது!'' என்றான் கலபதி. பிறகு அவன் அடிக்கடி தட்டுத் தடுமாறிப் பின்வரும் வரலாற்றைக் கூறினான்:-

சக்கரவர்த்தியின் கட்டளையைப் பெற்றுக்கொண்டு, கலபதி இரண்டு கப்பல்களுடன் நாகப்பட்டினத்திலிருந்து கிளம்பினான். அந்த வேலை அவனுக்குப் பிடிக்கவில்லைதான். ஆயினும் சக்கரவர்த்தியின் கட்டளையை மீற முடியாமல் புறப்பட்டான். புறப்படும்போது பழுவேட்டரையர்கள் அவனிடம் கண்டிப்பாகச் சில கட்டளைகளை இட்டிருந்தார்கள். அதாவது, இலங்கையை அடைந்ததும் தனியான இடத்தில் கப்பல்களை நிறுத்திக்கொண்டு இளவரசர் எங்கே இருக்கிறார் என்று முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு அவரை நேரில் சந்தித்துச் சக்கரவர்த்தியின் ஓலையைக் கொடுக்க வேண்டும். அதற்கு முன்னால் சேநாதிபதி கொடும்பாளூர் வேளாருக்கு இந்தச் செய்தி தெரியக் கூடாது. இளவரசரிடம் கட்டளையைக் கொடுத்த பிறகு அவராக வந்தால் சரி, இல்லாவிட்டால் பலவந்தமாகச் சிறைப்படுத்தியாவது கொண்டு வர வேண்டும்... இவ்விதம் சொல்லித் தங்கள் அந்தரங்க ஆட்கள் சிலரையும் பழுவேட்டரையர்கள் கலபதியுடன் சேர்த்து அனுப்பினார்கள்.

கலபதி மனத்தில் பெரிய பாரத்துடனேயே புறப்பட்டு வந்தான். அவன் கீழிருந்த கப்பல் மாலுமிகளில் பலருக்கு எதற்காக இலங்கை போகிறோம் என்பது தெரிந்திருக்கவில்லை. இதனால் அவனுடைய மனவேதனை அதிகமாயிருந்தது. அவர்களிடம் எப்படிச் சொல்வது என்று தயங்கினான். கப்பல்களைத் தொண்டைமானாற்றின் முகத்துவாரத்தில் கொண்டு போய் நிறுத்திய பிறகு கலபதி இன்னும் சில மாலுமிகளோடு காங்கேசன் துறைக்குப் போனான். இளவரசர் அப்போது எங்கே இருக்கிறார் என்று விசாரித்து வருவதற்காகத்தான். தென்னிலங்கையின் உட்பகுதியில் இளவரசர் பிரயாணம் செய்து கொண்டிருப்பதாகக் காங்கேசன் துறையில் தெரிந்துகொண்டு திரும்பி வந்தான்.

* அந்நாளில் சேனைத் தலைவனைத் 'தளபதி' என்று அழைத்ததுபோல், மரக்கலத் தலைவனைக் 'கலபதி' என்று அழைத்தார்கள்.



கலபதி திரும்பி வருவதற்குள்ளே மாலுமிகளுக்கு விஷயம் தெரிந்து விட்டது. பழுவேட்டரையர்களின் அந்தரங்க ஆட்கள் சிலர் இருந்தார்கள் அல்லவா? அவர்கள் மூலம் பிரஸ்தாபம் ஆகிவிட்டது. கலபதி திரும்பி வந்ததும் மாலுமிகள் கூட்டமாகச் சேர்ந்து கொண்டு கலபதியிடம் கேட்டார்கள்.

''பொன்னியின் செல்வரைச் சிறைப் படுத்திக்கொண்டு போகவா நாம் வந்திருக்கிறோம்?'' என்று வினவினார்கள். கலபதி உண்மையைக் கூறினான். "நாம் இராஜாங்க சேவையில் இருப்பவர்கள். சக்கரவர்த்தியின் கட்டளையை நிறைவேற்ற வேண்டியவர்கள்" என்றான். "எங்களால் அது

முடியாது. இது சக்கரவர்த்தியின் கட்டளையும் அல்ல; பழுவேட்டரையர்களின் கட்டளை'' என்றார்கள்.

''பின்னே நீங்கள்



என்னதான் செய்யப் போகிறீர்கள்?'' என்று கலபதி கேட்டான்.

''மாதோட்டம் சென்று இளவரசருடன் சேர்ந்து கொள்ளப் போகிறோம்.''

''மாதோட்டத்தில் இளவரசர் இல்லையே?''

''இல்லாவிடில் சேநாதிபதி கொடும்பாளூர் வேளாரிடம் சரண் அடைவோம்.''

கலபதி அவர்களுக்கு எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் பயனில்லை. கலபதியுடன் நிற்பதற்குப் பழுவேட்டரையர்களின் அந்தரங்க ஆட்கள் உள்படச் சுமார் பத்துப் பேர்தான் சம்மதித்தார்கள். பத்துப் பேரை வைத்துக்கொண்டு இருநூறு பேரை என்ன செய்ய முடியும்?

''சரி; அப்படியானால் இப்போதே போய்த் தொலையுங்கள்! பின்னால் வருகிறதையும் அனுபவித்துக் கொள்ளுங்கள்! என்னால் இயன்றவரையில் என் கடமையை நான் செய்வேன்!'' என்றான் கலபதி.

மாலுமிகளில் பலர் இரண்டு கப்பல்களில் ஒன்றைச் செலுத்திக் கொண்டு மாதோட்டம் போகலாம் என்று உத்தேசித்தார்கள். மற்றும் சிலர் அதை ஆட்சேபித்தார்கள். ஆகவே கப்பலிலிருந்து இறங்கித் தரை மார்க்கமாகவே புறப்பட்டார்கள். புறப்படும் அவசரத்தில் அவர்கள் ஏறியிருந்த கப்பலுக்கு நங்கூரம் பாய்ச்சவில்லை. கப்பல் நகர்ந்து நகர்ந்து சென்று கரை தட்டி உடைந்து மண்ணில் புதைந்து விட்டது.



தற்குப் பிறகு கலபதி மற்றொரு கப்பலுடன் அங்கேயிருக்க விரும்பவில்லை. காங்கேசன் துறையில் அவன் ஒரு செய்தி கேள்விப்பட்டிருந்தான். சில நாட்களுக்கு முன்பு முல்லைத் தீவுக்குப் பக்கத்தில் அரபு நாட்டுக் கப்பல் ஒன்று உடைந்து முழுகிவிட்டதென்றும், அதிலிருந்து தப்பிப் பிழைத்த மூர்க்க அராபியர்கள் சிலர் அந்தப் பக்கத்தில் திரிந்து கொண்டிருந்ததாகவும் சொன்னார்கள். எனவே, கரை தட்டிப் புதைந்த கப்பலுக்குப் பக்கத்தில்

இன்னொரு கப்பலையும் நிறுத்தி வைக்க அவன் விரும்பவில்லை. நன்றாயிருந்த கப்பலை அங்கிருந்து அப்புறப்படுத்திக் கொண்டு போனான். கடல் அடுத்தபடியாகப் பூமிக்குள் சென்றிருந்த குடாவில் கொண்டு போய் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தினான்.

பின்னர் கலபதி தன்னுடன் இருந்த மாலுமிகளுடன் கரையில் இறங்கி மேலே செய்ய வேண்டியதைப் பற்றி அவர்களிடம் கலந்து ஆலோசித்தான். அவன் மட்டும் தனியாகச் சென்று இளவரசரிடம் கட்டளையைச் சேர்ப்பிப்பதாகவும் அதுவரையில் மற்றவர்கள் கப்பலைப் பத்திரமாகப் பாதுகாத்து வர வேண்டும் என்றும் சொன்னான்.

மாலுமிகள் தங்கள் கவலைகளைக் கலபதியிடம் தெரிவித்துக்கொண்டார்கள். அவர்களுக்குக் கலபதி தைரியம் கூறிக் கொண்டிருக்கும்போதே மயிர்க்கூச்சு எடுக்கும்படியான பயங்கரக் கூச்சல்களைப் போட்டுக்கொண்டு சில மனிதர்கள் அவர்களைச் சூழ்ந்து கொண்டு தாக்கினார்கள். அவர்கள் அரபு நாட்டார்கள் என்பது தெரிந்தது. தமிழ் மாலுமிகள் அச்சமயம் இந்தத் தாக்குதலை எதிர்பார்க்கவில்லை. சண்டைக்கு ஆயத்தமாகவும் இருக்கவில்லை. கையில் கத்திகளும் வைத்திருக்கவில்லை. எனினும் தீரத்துடன் போராடினார்கள். போராடி எல்லாரும் உயிரை விட்டார்கள்.

"இளவரசே! நான் ஒருவர் மட்டும் மரண காயங்களுடன் ஓடி ஒளிந்து உயிரைக் காப்பாற்றிக் கொண்டேன். நடந்தது என்னவென்பதை யாருக்காவது சொல்ல வேண்டும் என்பதற்காகவே இதுவரையில் உயிரை வைத்துக் கொண்டிருந்தேன். இளவரசே! தங்களையே நேரில் பார்த்துச் சொல்லும்படியான பாக்கியம் எனக்குக் கிட்டி விட்டது. தங்களுக்கு நான் துரோகம் செய்ய எண்ணியதற்குப் பலனையும் அனுபவித்து விட்டேன். பொன்னியின் செல்வரே, என்னை மன்னித்து விடுங்கள்!" என்றான் கலபதி.

"கடமையை ஆற்றிய கலபதியே! உம்மை எதற்காக நான் மன்னிக்க வேண்டும்? போர்க்களத்தில் உயிரை விடும் வீரர்கள் அடையும் வீர சொர்க்கம் ஒன்று இருந்தால் அதற்கு நீரும் அவசியம் போய்ச் சேர்வீர்! சந்தேகம் இல்லை!" என்று சொல்லி இளவரசர் அக்கலபதியின் தீயெனக் கொதித்த நெற்றியைத் தடவிக் கொடுத்தார்.

கலபதியின் கண்களிலிருந்து அப்போது பெருகிய கண்ணீர் அவன் முகத்தில் வழிந்திருந்த இரத்தத்தோடு கலந்தது.

மிக்க சிரமத்துடன் அவன் தன் கைகளைத் தூக்கி இளவரசரின் கரத்தைப் பிடித்துக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

இளவரசரின் கரம் கலபதியின் கண்ணீரால் நனைந்தது. அவருடைய கண்களிலும் கண்ணீர் துளித்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் கலபதியின் உயிர் அவன் உடலை விட்டுப் பிரிந்தது.

## நாற்பத்து ஒன்பதாம் அத்தியாயம்

# கப்பல் வேட்டை

கலபதியின் உடலையும் மாண்டு போன மற்ற மாலுமிகளின் உடல்களையும் சேர்த்து வைத்து உலர்ந்த மரக் கட்டைகளை அடுக்கித் தகனம் செய்தார்கள்.

தீ மூட்டி எரியத் தொடங்கியபோது இளவரசர் முகத்தில் கண்ணீர் பெருகிக் கொண்டிருப்பதைச் சேநாதிபதி பூதி

விக்கிரமகேசரி கவனித்தார்.

"ஐயா! இந்தப் பாதகர்களின் சாவுக்காகவா கண்ணீர் விடுகிறீர்கள்? தங்களைச் சிறைப்படுத்த வந்த துரோகிகளுக்குக் கடவுளே தக்க தண்டனை அளித்து விட்டார். தாங்கள் ஏன் வருந்த வேண்டும்?" என்றார்.

"சேநாதிபதி! இவர்கள் துரோகிகள் அல்ல; இவர்களுடைய மரணத்துக்காகவும் நான் வருத்தப்படவில்லை. சோழ நாட்டுக்கு இவ்வளவு பொல்லாத காலம் வந்து விட்டதே என்று வருந்துகிறேன்" என்றார்.

"பொல்லாத காலம் பழுவேட்டரையர்களுடனேயே வந்துவிட்டது. இப்போது புதிதாக ஒன்றும் வரவில்லையே!"

"புதிதாகத்தான் வந்திருக்கிறது. கலபதியின் கட்டளையைக் கப்பல் மாலுமிகள் மீறுவது என்று வந்து விட்டால் அதைக் காட்டிலும் ஒரு ராஜ்யத்துக்குக் கேடு வேறு என்ன இருக்க முடியும்? சேநாபதி! இது ஒரு சிறிய அறிகுறிதான்! இதைப்போலவே சோழ ராஜ்யம் எங்கும் பிளவுகள் ஏற்படுமோ என்று அஞ்சுகிறேன்! அப்படி ஏற்பட்டால் விஜயாலய சோழர் அஸ்திவாரமிட்ட இந்த மகாராஜ்யம் சின்னாபின்னமாகி விடுமே! இந்தக் கேடு என்னாலேயா நேர வேண்டும்? மகாபாரதக் கதை கேட்டிருக்கிறேன். துரியோதனன் பிறந்தபோது நரிகளும் ஓநாய்களும் பயங்கரமாக ஊளையிட்டன என்று பாரதம் சொல்லுகிறது. நான் பிறந்தபோதும் அப்படி நரிகளும் ஓநாய்களும் பயங்கரமாக ஊளையிட்டிருக்க வேண்டும்!" என்றார் இளவரசர்.

"ஐயா! தாங்கள் இந்த உலகில் ஜனித்த போது என்னென்ன நல்ல சகுனங்கள் ஏற்படலாமோ, அவ்வளவும் ஏற்பட்டன. தங்கள் ஜாதகத்தைக் கணித்த சோதிடர்கள்..."

"போதும், சேநாதிபதி! போதும்! இந்தப் பேச்சைக் கேட்டுக் கேட்டு என் காது புளித்து விட்டது. என் ஜாதக விசேஷம் இருக்கட்டும். நாம் பிரிய வேண்டிய காலம் வந்துவிட்டது. சேநாதிபதி! தங்களைக் கேட்டுக்கொள்கிறேன். இந்தக் கப்பல்களிலிருந்து கலபதியின் கட்டளையை மீறிச் சென்ற மாலுமிகள் தங்களிடம் வந்தால் அவர்களைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது. உடனே சிறைப்படுத்தி அவர்களைத் தஞ்சைக்கு அனுப்ப வேண்டும்."

"இளவரசே! கலபதி கூறியதை மட்டுமே நாம் கேட்டோம். மாலுமிகளின் கட்சி என்னவென்று நாம் கேட்கவில்லை. ஒரு பக்கத்துப் பேச்சை மட்டும் கேட்டு எப்படித் தீர்மானிக்க முடியும்? அது நீதிக்கும் தர்மத்துக்கும் உகந்ததா? தாங்கள் என்னுடன் வாருங்கள். அந்த மாலுமிகள் வந்ததும் அவர்கள் சொல்வதையும் கேட்டு முடிவு செய்யுங்கள்..."

"ஐயா! அது சாத்தியமில்லை. தங்கள் உசிதம் போல் செய்யுங்கள். நான் இனி ஒருகணமும் இங்கே தாமதிக்க முடியாது. உடனே புறப்பட வேண்டும். படகுக்காரன் எங்கே?" என்று கேட்டார்.

"எங்கே புறப்பட வேண்டும், இளவரசே! படகுக்காரன் எதற்கு?"

"இதைப் பற்றித் தாங்கள் கேட்கவும் வேண்டுமா? வந்தியத்தேவனை ஏற்றிச் செல்லும் கப்பலுக்குத்தான் நானும் போக வேண்டும். அந்த வீராதி வீரன் எனக்காகவல்லவோ அராபியர் வசப்பட்ட கப்பலில் ஏறிப் பயங்கரமான அபாயத்துக்கு உள்ளாகியிருக்கிறான்? அவனை நான் கைவிட்டு விடக் கூடுமா? ஏற்கெனவே நான் செய்துள்ள பாவங்கள் போதாதென்று சிநேகத் துரோகம் வேறு செய்ய வேண்டுமா?"

"ஐயா! தாங்கள் ஒரு பாவமும் நான்



அறிந்து செய்ததில்லை. தாங்கள் சொன்னாலும் உலகம் ஒப்புக் கொள்ளாது. வந்தியத்தேவன் வெறும் முரடன். முன்யோசனை சிறிதும் இல்லாதவன். அவனாக வருவித்துக் கொண்ட அபாயத்துக்குத் தாங்கள் எப்படிப் பொறுப்பாக முடியும்? இதில் சிநேகத் துரோகம் என்ன? இளவரசே! எங்கிருந்தோ தெறிகெட்டு வந்த ஒரு வாலிபனைத் தங்கள் சிநேகிதன் என்று கொண்டாடுவதே எனக்குப் பிடிக்கவில்லை. சமநிலையில் உள்ளவர்கள் அல்லவோ சிநேகிதர்கள் ஆக முடியும்?''

''சேநாதிபதி! வீண் பேச்சில் காலங் கடத்த நான் விரும்பவில்லை. அவன் என் சிநேகிதன் இல்லாவிட்டாலும் நன்றி என்பதாக ஒன்று இருக்கிறதல்லவா? வள்ளுவர் முதல் பெரியோர்கள் அனைவரும் சொல்லியிருக்கிறார்களே? 'சோழ குலத்தார் நன்றி மறவாதவர்கள்' என்ற புகழ் என்னால்

கெட்டுப் போக விட மாட்டேன். இந்த நிமிடமே புறப்பட்டுச் சென்று அந்தக் கப்பலைத் தேடிப் பிடிப்பேன்..."

"எப்படிப் புறப்படுவீர்கள், எங்கே தேடுவீர்கள், இளவரசே!"

"நீங்கள் வந்த படகில் ஏறிக்கொண்டு புறப்படுவேன்..."

"முயலை வைத்துக்கொண்டு புலி வேட்டையாட முடியுமா? ஆழ்கடலில் செல்லும் மரக்கலத்தை இச்சிறிய படகில் ஏறித் துரத்திப் பிடிக்க முடியுமா? பிடித்த பிறகுதான் என்ன செய்வீர்கள்?"

"படகில் ஏறிப் போவேன், படகு உடைந்தால் மரக்கட்டையைப் பிடித்து நீந்திக் கொண்டு போவேன். வந்தியத் தேவனை ஏற்றிச் செல்லும் கப்பல் ஏழு கடல்களுக்கு அப்பால் சென்றாலும் அதைத் துரத்திக்கொண்டு போய்ப் பிடிப்பேன். பிடித்த பிறகு என் நண்பனைக் காப்பாற்ற முடியாவிட்டால் நானும் அவனோடு உயிரையாவது விடுவேன்... படகுக்காரன் எங்கே?"

இவ்விதம் சொல்லிக் கொண்டே இளவரசர் நாலாபுறமும் திரும்பிப் பார்த்தார். படகுக்காரனுடன் ஒரு பக்கமாக நின்று பூங்குழலி பேசிக் கொண்டிருந்ததைக் கவனித்தார். அருகில் ஊமை மூதாட்டியும் நின்றாள். அவர்கள் இருந்த இடத்தை நோக்கி விரைந்து போனார்.

சமீபத்தில் சென்றதும் பூங்குழலி கண்ணில் நீர் ததும்ப அப்படகுக்காரனுடன் ஆத்திரமாக ஏதோ பேசிக் கொண்டிருந்தாள் என்று தெரிந்தது.

"ஆகா! இது என்ன? இன்னொரு உட்கலகமா?" என்றார் இளவரசர்.

படகுக்காரன் திடீர் என்று இளவரசரின் காலில் விழுந்தான். "இளவரசே! தெரியாமல் பாதகம் செய்து விட்டேன். பணத்தாசையால் செய்து விட்டேன். மன்னிக்க வேண்டும்!" என்று கதறினான்.

"இது என்ன...? பூங்குழலி! எல்லாருமாகச் சேர்ந்து என்னைப் பைத்தியமாக்கி விடுவார்கள் போலிருக்கிறதே? நீயாவது விஷயம் என்னவென்று சொல்லக் கூடாதா?"

"இளவரசே! இத்தனை நேரம் சொல்ல வெட்கப்பட்டுக் கொண்டு சொல்லவில்லை. இவன் என் தமையன். தங்களைக் கொல்லுவதற்காக வந்த இரண்டு பாவிகளையும் இவன்தான் கோடிக்கரையிலிருந்து படகில் ஏற்றிக் கொண்டு வந்தான். அவர்கள் சொற்படியேதான் இவன் இதுவரை இங்கே காத்துக் கொண்டிருந்தான். அவர்களை இன்று காலையில் மறுபடியும் படகில் ஏற்றி நாம் பார்த்த கப்பலில் கொண்டு போய் விட்டானாம்! தங்கள் நண்பரும் அதிலேதான் ஏறியிருக்கிறார்..." என்றாள்.

"பிரபு! என்னை வெட்டிக் கொன்று விடுங்கள்! அவர்கள் அத்தகைய துஷ்டர்கள் என்று எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் செய்திருக்க மாட்டேன். என்னைத் தங்கள் கையாலேயே கொன்று விடுங்கள்!" என்றான் படகுக்காரன்.

"அப்பனே! இச்சமயம் உன் உயிர் எனக்கு விலை மதிப்பில்லாத பொருள். வா, போகலாம்! அந்தக் கப்பலிலேயே என்னையும் கொண்டு போய் ஏற்றி விடு. எனக்கு நீ செய்த கெடுதலுக்கு அதுதான் பரிகாரம். புறப்படு. போகலாம்!" என்றார் இளவரசர்.

கடற்கரையோரத்தில் சென்றதும் கரையில் கிடந்த படகைப் படகோட்டி தண்ணீரில் இழுத்துவிட்டான். இளவரசர் கடலைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார். "அதோ கப்பல் இன்னும் தெரிகிறது! பிடித்து விடலாம்!" என்றார்.

சேநாதிபதியும் தூரத்தில் தெரிந்த

கப்பலைக் கூர்ந்து பார்த்தார்.

"இளவரசே! பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று!" என்றார்.

"என்ன? என்ன? தங்களிடமிருந்து கூட நல்ல வார்த்தை வருகிறதே!"

"நம் கண்ணுக்குத் தென்படுவது தாங்கள் நினைக்கிறபடி வந்தியத் தேவனை ஏற்றிச் செல்லும் கப்பல் அல்ல. பார்த்திபேந்திரனுடைய கப்பல். திரிகோணமலைப் பக்கமிருந்து வருகிறது. நாம் இருக்கும் திசையை நோக்கி வருகிறது. தெரியவில்லையா?"

"ஆம், ஆம்! அப்படியானால் மிகவும் நல்லதாய்ப் போயிற்று. பார்த்திபேந்திரர் வேறு ஏதோ நோக்கத்துடன் வருகிறார். ஆயினும் நல்ல சமயத்தில் வருகிறார். சிங்கத்தைக் கொண்டே சிறுத்தையை வேட்டையாடலாம்...! ஆனால் அந்தக் கப்பல் இங்கே வரும் வரையில் நான் காத்திருக்கப்போவதில்லை. படகில் சிறிது தூரம் சென்று எதிர்கொள்கிறேன்..."

"இளவரசே! தங்களுடன் படகில் வருவதற்கு..."

"ஐயா! நீங்கள் ஒருவரும் என்னுடன் வர வேண்டியதில்லை. இங்கேயே நின்றால் எனக்குப் பெரிய உதவி செய்ததாக எண்ணிக்கொள்வேன்... திருமலை! உனக்குங்கூடத்தான் சொல்கிறேன். உனக்குத்தான் கடல் என்றால் தயக்கமாயிற்றே?"

"ஆம், ஐயா! நானும் பின் தங்குவதாகவே இருந்தேன். இலங்கைத் தீவில் இருக்கும் வரையில் தங்களைப் பார்த்துக் கொள்ளும்படிதான் எனக்குக் கட்டளை. முதன் மந்திரி மதுரையில் இருக்கிறார். அவரிடம் போய் இங்கு நடந்தவற்றைச் சொல்ல வேண்டும்..."

"அப்படியே செய்! பூங்குழலி! நீயும் இங்கே நிற்க வேண்டியதுதான். உன் தமையனைப் பற்றிக் கவலைப்படாதே. நான் பார்த்துக் கொள்கிறேன். நீ வந்த படகை எங்கேயோ விட்டிருப்பதாகச் சொன்னாயல்லவா? அதில் ஏறி இனி உன் வழியில் போகலாம். நீ எனக்குச் செய்த உதவியை என்றும் மறக்க மாட்டேன்... சேச்சே! கண்ணீரைத் துடைத்துக்கொள்! பார்க்கிறவர்கள் என்ன நினைத்துக் கொள்வார்கள்?"

இவ்வாறு கூறிவிட்டு இளவரசர் ஊமை ராணியின் அருகில் சென்று அவளுடைய பாதத்தைத் தொட்டு வணங்கப் போனார். அந்த மூதாட்டி அவரைத் தடுத்து நிறுத்தி உச்சி முகந்து ஆசிர்வதித்தாள்.

அடுத்தநிமிஷம் இளவரசர் கடலில் ஆயத்தமாக நின்ற படகில் பாய்ந்து ஏறிக்கொண்டார்.

கரையில் இருந்தவர்கள் படகைப் பார்த்துக்கொண்டே நின்றார்கள்.

இளவரசரும் போகின்ற படகிலிருந்து அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

எல்லாரையும் பொதுவாகப் பார்த்தாலும் அவருடைய கண்கள் பூங்குழலியின் கண்ணீர் வழிந்த முகத்திலேயே நிலைத்து நின்றன. அதிசயம்! அதிசயம்! தூர விலகிப் போகப் போக உருவங்கள் சிறியனவாக வேண்டுமல்லவா? கரையில் இருந்த மற்றவர்களின் உருவங்கள் சிறியனவாகித்தான் வந்தன. ஆனால் பூங்குழலியின் முகம் மட்டும் வரவரப் பெரிதாகிக் கொண்டேயிருந்தது. இளவரசரின் அருகில் நெருங்கி வந்து கொண்டேயிருந்தது.

இளவரசர் உடம்பைச் சிலிர்த்துக் கொண்டார். கண்களை வேறு பக்கம் திருப்பினார். முதல் நாள் இரவு கண்ட கனவில் ஒரு நிகழ்ச்சி அவர் மனக்கண் முன் வந்தது. இளையபிராட்டி குந்தவை "தம்பி! உனக்காக இங்கே வானதி காத்திருக்கிறாள் என்பதை மறந்து விடாதே!" என்று கூறிய மொழிகள் கடல் அலைகளின் இரைச்சலுக்கிடையில் தெளிவாக அவருடைய காதில் கேட்டன.

(தொடரும்)



# பெண் தெய்வங்கள்

பெண் தெய்வங்கள் இருக்கும் திக்கு நோக்கி, பயபக்தியுடன் தண்டம் சமர்ப்பிக்கும் அடியார்களில் அடியேனும் ஒருவனாகிச் சிறிது கால மாயிற்று.

என்னைப் பொறுத்தவரையில், உலகில் சாதாரண ஸ்திரீகள் யாருமே கிடையாது. எல்லாரும் மாதரசிகள், பெண்மணிகள், ஸ்திரீ ரத்தினங்கள், பெண் தெய்வங்கள், இன்ப விளக்குகள், இளங்குயில்கள், பொன் மயில்கள்தான். உலகம் இத்தகைய ஆனந்தக் காட்சியாக அடியேனுக்குத் தோற்றம் அளிப்பதற்கு முக்கியக் காரண புருஷர்கள் கவி சுப்பிரமணிய பாரதியும், திரு.வி.கலியாண சுந்தர முதலியாருமேயாவர். பாரதியின் கவிதைகளையும், திரு.வி.க.வின் கட்டுரைகளையும் படிக்கப் படிக்க, மிகவும் சாதாரண ஸ்திரீகளெல்லாம் என் கண்முன்னே தெய்வ மகளிராகக் காட்சி தரலாயினர்.

✤ ✤ ✤

ஆரம்பத்தில், மேற்கூறிய பெரியார்களுடனே நான் முற்றும் மாறுபட்ட குற்றத்தை ஒப்புக் கொள்கிறேன்.

"– நல்ல
காதல் புரியும் அரம்பையர்
போலிளம்
கன்னியர் சூழ்ந்த தமிழ்நாடு"

எனும் பாரதியார் பாட்டின் அடிகளை முதன்முதலில் நான் கேட்டபோது இதைப் போன்ற வெள்ளைப் புளுகு – அல்லது பச்சைப் பொய் – உலகில் வேறொன்றும் கிடையாது என்று எண்ணினேன். தற்காலத் தமிழ்நாட்டின் இளங் கன்னியர் அரம்பைகளல்லர் என்பது சர்வ நிச்சயம். அவர்கள் காதல் புரிவதில்லையென்று கோயிலில் விளக்கு வைத்து அணைப்பேன். தமிழ்நாடு மற்றும் எத்தனையோ துறைகளில் மேன்மை பெற்றிருக்கலாம். ஆனால் பெண்களின் அழகுக்கு நமது நாடு பெயர் போனதல்ல. இச்சிறப்பைக் கேரளம், சிந்து, காஷ்மீரம் முதலிய நாடுகளுக்குக் கொடுத்து விடத்தான் வேண்டும். மேலும், இந்நாளில் நமது பெண்களுக்குக் கன்னிப் பருவத்தில் காதல் புரியும் சந்தர்ப்பம்தான் ஏது? பாரதியார் ஏன் இவ்வளவு பச்சைப் பொய் சொல்கின்றார்? – என்று இவ்வாறு சிந்திக்கலானேன்.

✤ ✤ ✤

ஸ்திரீகளைப் 'பெண்மணிகள்' என்றும், "பெண் தெய்வங்கள்" என்றும், "மாதரசிகள்" என்றும் திரு.வி.க. முதலியோர் புதுத் தமிழில் சொல்கின்றார்கள் என்னும் சந்தேகமும் முதலில் எனக்கு இருந்தது. ஆண்களைப் பற்றிச் சொல்

அமரர் கல்கி

லுங்கால், "ஆடவ தெய்வங்கள்" என்றாவது, "ஆண்மணிகள்" என்றாவது, "ஆணரசர்கள்" என்றாவது சாதாரணமாய்ச் சொல்கிறோமா? கிடையாது. பழைய நூல்களிலே "புருஷ வியாக்ரம்," "ஆண் சிங்கம்", "இளங்காளை" முதலிய சொற்றொடர்கள் வருவது உண்மை. ஆனால் ஆண்மகனுக்கு இவையெல்லாம் சிறப்பா, இழிவா என்பதே ஐயத்துக்கிடமானது. அறிவுக்கே சிறப்பு மிகுந்த இந்நாளில் யாரையாவது பார்த்து "அடே ஆண் புலியே! ஏ இளம் மாடே!" என்று அழைப்போமாயின் அவன் உண்மையிலேயே புலியின் குணமும், மாட்டின் குணமும் பெற்று, அறையவோ, முட்டவோ வந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை. நல்ல வேளையாக இவ்வழியில் ஆண்களைச் சிறப்பிப்போர் இந்நாளில் யாரும் கிடையாது.

ஒரே ஒருமுறை மட்டும் எனது முஸ்லிம் நண்பர் ஒருவர் இத்தகைய சொற்றொடர் ஒன்றை உபயோகப்படுத்தினார். கூடலூர் சிறைச்சாலையில் அவர் சில ஹிந்து நண்பர்களுக்கு உருது கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார். "பைல்" என்னும் வார்த்தைக்கு அர்த்தம் சொல்ல வேண்டி வந்தது. "காளை, எருது, ரிஷபம்" என்னும் வார்த்தைகளில் ஒன்றாவது அவர் நினைவுக்கு வரவில்லை. வெகுநேரம் யோசித்து விட்டுக் கடைசியில் அவர் நினைவுக்கு வந்து விட்டது! "ஆண் பசு!" என்றார். ஆனால் இச்சொற்றொடர் மூலம் அவர் ஓர் ஆண் மிருகத்தைக் குறிப்பிட்டாரேயன்றி, ஆண்மகனையல்ல.

❖ ❖ ❖

ஆனால், பெண்களில் மட்டும் எல்லாருமே மணிகளாகவும், அரசிகளாகவும், தேவியர்களாகவும் விளங்குவது எப்படி? பாரத நாட்டில் நான் அறிந்த வரையில் புருஷர்களுக்குள்ளே ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஒருவர்தான் "தேவர்" என்னும் சிறப்புப் பெயர் பெற்றுள்ளார். ஆனால் ஸ்திரீகளிவென்றால், எல்லாரும் கமலாதேவி, விமலாதேவி, லக்ஷ்மிதேவி, பார்வதி தேவி, ருக்மணி தேவி, சகுந்தலா தேவிதான். ஏன்?

❖ ❖ ❖

பெண் தெய்வங்காள்! மன்னியுங்கள். இந்தச் சந்தேகங்களெல்லாம் பின்னால் எனக்குப் பூரணமாய் நிவர்த்தியாகி விட்டனவென்று தெரிவித்துக் கொள்கிறேன். எப்படியிருந்தாலும் தமிழ்நாடு நமது நாடு. தமிழ்நாட்டுப் பெண்கள் நமது சகோதரிகள். எனவே, பாரதியார் பாடியதில் தவறு என்ன? காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சல்லவா? "மணி" என்றால் பொன்மணியாய்த்தான் இருக்க வேண்டுமா? கருமணி அல்லது நீலமணியாகவும் இருக்கலாமன்றோ? பார்க்கப் போனால், ரூப சௌந்தரியத்தில் என்ன இருக்கிறது? குண சௌந்தரியமன்றோ உண்மை சௌந்தரியமாகும்? கல்வியழகே யழகு! கற்பின் புகழே புகழ். நமது இளங்கன்னியர் புரியும் காதலைப் பாடியபோது பாரதியார் கேவலம் கீழ்த்தர நாவல்களில் காணப்பெறும் இழிவான காதலையா குறிப்பிட்டார்? இல்லை; இல்லை. தமிழ்ப்பெண்களின் காதல், இல்வாழ்க்கையோடியைந்த உயர் காதலாகும் - என் உள்ளத்திலே பெரியதொரு புரட்சி உண்டாயிற்று. எவ்வளவு பெரிய புரட்சியெனில் வங்கத்தின் பிரபல நாடகாசிரியரான துவிஜேந்







திரலால்ராய் என்பவர் ஓரிடத்திலே,

"பகவானே! பெண் தெய்வங்களைப் படைத்து இவ்வுலகை இன்ப மய மாக்கிய நீ, அவ்வின்பத்தைக் கெடுப்பதற்கு இந்த ஆண் மிருகங்களை ஏன் படைத்தாய்?"

என்று எழுதியிருந்ததைப் படித்த போது, "உண்மை! உண்மை!" என்று கதறினேன். ஏ! ஆண் மிருகங்காள்! பெண் தெய்வங்களைப் போற்றுங்கள்; பூசியுங்கள்; புகழ்ச்சி கூறுங்கள். பெண்ணின் பெருமையே பெருமை! பெண்மை வாழ்க! பெண்மை வெல்க!

✤ ✤ ✤

இப்படி ஒரே மூச்சில் ஒரே பாரா வில் நான் தாவிக் குதித்துப் பெண் தெய் வங்களின் அடியார்க்கடியனாகி விட் டதைப் பற்றி நேயர்கள் குறை கூறலாம். இதென்ன அநியாயம்? நமது சகோதரி மார் எல்லாரும் அழகிலும், அறிவிலும், குணத்திலும் இணையற்றவர்களாகவே யிருக்கட்டுமே? அதனால் அவர்களை ஆண்கள் போற்றுவதும், பூசிப்பதும் எதற்காக? பெண்களுக்கென்று தனிப் பெருமை என்ன வந்தது? - என்று நேயர்கள் கேட்கலாம். உண்மையில் எனக்கும் இந்த சந்தேகம் தோன்றா மலில்லை. திரு.வி.க. அவர்கள் "பெண் ணின் பெருமை" என்று ஒரு புத்தகம் எழுதப் போவதாய்ச் சொன்னபோது, "ஆணின் மகிமை" என்று அதற்கு பதில் புத்தகம் ஒன்று எழுதலாமென எண்ணி னேன். பெண் இல்லாவிடில் உலகம் இல்லையென்றால், ஆண் இல்லாமலும் உலகம் இல்லை. பெண்மணிகளின்றி ஆண் மக்களின் வாழ்வில் ரசமிராதென் றால், ஆண் மக்கள் இல்லாத பெண் தெய்வங்களின் வாழ்வு எப்படி யிருக்கும்? விரசமாயிருப்பது மட்டு மல்ல, சண்டை சச்சரவுகளும் நிரம்பி யிருக்கும். சந்தேகமிருந்தால் வேலூர் பெண் சிறையில் வசித்த தேசபக்தப் பெண்மணிகளைக் கேட்டுப் பாருங்கள். ஆண் மக்கள் மூர்க்கர்கள், பொல்லாதவர்கள் என்றால், நல்லது, தெய்வங்களுக்குள்ளே பயங்கரக் கொடுந் தெய்வங்களான பத்திரகாளி யும், துர்க்கையும் பெண் தெய்வங்களே யல்லவா? இதிகாசங்களிலும் ஓர் இராவணன் இருந்தால், ஒரு சூர்ப் பணகையும்கூட இருக்கிறாளன்றோ? பெண், மக்கட்குலத்தின் தாய் என் றால் ஆண் அக்குலத்தில் தகப்பன் அல் லவா? "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்பதில் ஔவை, அன்னை யைத்தானே முன்னால் வைத் திருக்கிறாள் என்று சொல்வீர்களா னால், ஔவையும் ஒரு ஸ்திரீதானே, அவள் தன் குலத்தைப் பெருமைப் படுத்தியிருப்பதில் வியப்பொன்றும் இல்லை - இவ்வாறு சிந்தித்து வரும் போது, ஔவை மூதாட்டியின் பெய ரைச் சொன்னதும், எனக்கு உண்மை விளங்கிவிட்டது.

✤ ✤ ✤

ஔவை தன் இனத்தைப் பெரு மைப் படுத்தியதுபோல், இதுகாறும் உலகில் ஆண் மக்களே எல்லாத் துறை களிலும் அதிகாரத்திலிருந்து வந்த

படியால், தங்கள் இனத்துக்கே பெருமை கொடுத்து வந்தார்கள். பெண்ணுக்குப் புருஷனே தெய்வம் என்று சாஸ்திரம் செய்தார்கள். "பதிதேவதை என்று தங்களுக்குப் பெருமைப்படுத்திய காலத்திலும், புருஷனைப் பூசித்ததனாலேயே அவளுக்குப் பெருமை ஏற்பட்டதாகக் கூறினார்கள். அந்த யுகம் மாறி இப்போது புதிய யுகம் பிறந்திருக்கிறது. இத்தனைக் காலம் பெண்கள் புருஷர்களைத் தெய்வமென்று போற்றினார்கள். இனிக் கொஞ்ச காலம் புருஷர்கள்தான் பெண்களைத் தேவிகளாகக் கருதிப் பூசிக்கலாமே? ஒரு காலத்தில் பட்டினத்துப் பிள்ளையார் "பெண்ணாகி வந்ததொரு மாயப் பிசாசம்" என்றார். இப்போது பிசாசு தெய்வமாகி விட்டது. மாறுதலே உலக இயற்கையன்றோ?

❖ ❖ ❖

இச்சமயத்தில் கராச்சி காங்கிரஸின்போது எனக்குக் கிடைத்த இரண்டு அரிய சந்தர்ப்பங்களைக் குறித்துச் சொல்லவேண்டும். மேற்படி காங்கிரஸில் பெண்மணிகளின் ஆதிக்கம் மிகுந்திருந்ததென்பது அனைவரும் அறிந்ததே. பெண் தொண்டர்களும், ஸ்திரீ பிரதிநிதிகளும், தலைவிகளும் எங்கும் நிறைந்திருந்தார்கள். தமிழ் நாட்டிலிருந்துகூட பெண் பிரதிநிதிகள் பலர் வந்திருந்தனர். இவர்களெல்லாம் தனியிடம் தேடாமல் ஆண் மக்களுடன் கலந்தே பிரதிநிதி ஜாகைகளில் தங்கியது ஒரு பெரிய விசேஷமாகும். நிற்க. எனது நண்பரும் தலைவருமான ஒருவரைப் பார்க்க ஒருமுறை நான் அவருடைய அறைக்குச் சென்றேன். அங்கு அவர் இல்லை. ஆனால் எனக்குத் தெரிந்த ஒருபெண்மணி அங்கே கண்ணீர் விட்டு அழுதுகொண்டிருப்பதைக் கண்டு திடுக்கிட்டேன். "இதென்ன, அம்மா! ஏன் அழுகிறீர்கள்?" என்று கேட்டேன். அந்த அம்மா பதில் சொல்லவில்லை. ஆனால், பக்கத்திலிருந்த, நான் பார்க்கச் சென்ற அவரின் மனைவியார், "அவருடைய புருஷர் காலையில் இட்டிலி வாங்கி வந்து தராமல் போய் விட்டார். பசிக்கிறதென்று அழுகிறார்கள்" என்று கூறினார். எவ்வளவு அரிய சந்தர்ப்பம் பாருங்கள்! உடனே இட்டிலிக் கடைக்கு ஓடிச் சென்று (தமிழர்கள் போகுமிடமெல்லாம் இட்டிலிக் கடையும்கூட வருமென்பது நேயர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.) இட்டிலி வாங்கிக்கொண்டு வந்து கொடுத்தேன். ஆனால் இதில் எனக்கு ஏமாற்றம் என்னவென்றால், நான் செய்த இவ்வரிய பணியின் பொருட்டு அந்தப் பெண்மணி சிறிதும் திருப்தியடைந்ததாகத் தெரியவில்லை. உண்மை என்னவெனில், அந்த ஸ்ரீமதி பசி பொறுக்க முடியாதவரல்ல. "அவாள் இப்படிக் கவனிக்காமல் போய்விட்ட"தைக் குறித்தே பெரிதும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். எனவே, இந்தத் தொண்டு செய்ததில் எனக்கு அவ்வளவு திருப்தி உண்டாக நியாயமில்லையல்லவா?

❖ ❖ ❖

இப் பெண்மணி இருந்த அதே அறையில் சென்னை நகரிலிருந்து வந்த ஒரு கலாசாலை மாணவி இருந்தார். அவர் பெயர் "சுலோசனா தேவி" என்று வைத்துக் கொள்ளுங்கள். இவருடன் எனக்கு அதிகப் பழக்கமில்லை. இரண்டு மூன்று தடவை அவர் ஏதோ கேட்டதற்குப் பதில் சொல்லியிருக்கிறேன். அவ்வளவுதான். காங்கிரஸ் முடிந்து நான் கப்பலுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தபோது, சுலோசனா தேவி கண்ணீரும் கம்பலையுமாய் என் முன் வந்ததைப் பார்த்துத் திடுக்கிட்டேன். "மிஸ்டர் ராகவனைப் பார்த்தீர்களா?" என்று அவர் பாதி அழுதுகொண்டே கேட்டார். "நான் பார்க்கவில்லை அம்மா? ஆனால் என்ன விஷயம்? ஏதாவது செய்ய வேண்டுமானால் சொல்லுங்கள்" என்றேன். எனக்குக் கப்பலுக்குக் கிளம்பும் அவசரந்தான். இருந்தாலும் பெண் தெய்வத்துக்குப் பணி

செய்யும் இந்த அரிய சந்தர்ப்பத்தை எப்படிக் கைவிட முடியும்? உடனே சுலோசனா தேவி, விம்மல்களுக்கிடையில், ''அந்த இடியட் என்னுடைய பௌண்டன் பேனாவை வாங்கிக் கொண்டான். திருப்பிக் கொடுக்கவில்லை. என்னுடையது அருமையான பேனா! அதைக் கைவிட்டு நான் எப்படி இருக்க முடியும்? அந்த ராஸ்கல் இப்படி அப்ஸ்காண்டு ஆகிவிட்டானே? எனக்குக் கப்பலுக்குப் புறப்பட வேண்டுமே? டைம் ஆகிவிட்டதே!'' என்று புலம்பிக் கொண்டே அங்குமிங்கும் ஓடலானார். மிக்க பரிதாபகரமான காட்சியாயிருந்தது. ஆனாலும் என்ன செய்யலாம், சொல்லுங்கள். அந்த இடியட், ராஸ்கல், மிஸ்டர் ராகவனைக் கண்டுபிடிப்பதென்பது இயலாத காரியம். திரும்பி அகப்படுகிறவனாயிருந்தால் சொல்லிக் கொண்டு போயிருக்க மாட்டானா? ''ஓடிப் போகிறவனுக்கு ஒன்பதாம் மடத்தில் ராஜா'' என்னும் கொள்கையில் மிஸ்டர் ராகவன் உறுதி கொண்டவர் என்பது நிச்சயம். அவரைக் கண்டுபிடிக்கத் தொடங்கினால் நான் கப்பலைக் கண்டுபிடிக்க முடியாது. என்னுடைய பௌண்டன் பேனா எனக்கும் மிக்க அருமையானது தான்! எத்தனையோ கட்டுரைகள் மூலம் ''விகடன்'' நேயர்களுக்கும் எனக்கும் தொடர்பு ஏற்படுத்திய பேனா. ஆயினும் அதை அர்ப்பணம் செய்வதின் மூலம் அந்தப் பெண்மணி திருப்தியடைவதாயிருந்தால் அப்படியே செய்திருப்பேன். ''என்னுடைய பேனாவைத் தரட்டுமா?'' என்று கேட்டிருந்தால், மிஸ்டர் ராகவனுக்குக் கிடைத்த புகழுரைகளில் சில எனக்கும் கிடைத்திருக்கும். அவ்வளவுதான். எனவே, நான் செய்யக் கூடிய உதவி ஒன்றுதானிருந்தது. சுலோசனா தேவியின் காது கேட்கும்படி நானும் மிஸ்டர் ராகவனை ''சுத்த அயோக்கியன்'', முழு முட்டாள்'', ''அசல் போக்கிரி'' என்று அடைமொழியுடன் திட்டிவிட்டுப் புறப்பட்டேன்.

✤ ✤ ✤

''இதென்ன? சுதந்தரம் விரும்பும் பெண்கள் கண்ணீர் விடலாமா? 'கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை' என்ற கதையாகவல்லவா இருக்கிறது?'' என்று நேயர்கள் கேட்கலாம். சுதந்தரம் எக்கேடு கெட்டாலும் கெடட்டும். ஆனால் பெண்களின் கண்ணீர் உலகில் நீடூழி வாழட்டும் என்று நான் பிரார்த்திக்கிறேன். பெண்களின் கண்ணீர் இல்லாத உலகம் எனக்கு வெறும் சூன்யமாகவே காணப்படும். கவிதைகளிலும், கதைகளிலும், காவியங்களிலும், ஓவியங்களிலும் நாம் அநுபவிக்கும் முக்கிய ரசம் யாது? சோகரசமேயல்லவா? நாடகங்களிலும் சலனப் படங்களிலும் நமக்கு இன்பமளிக்கும் மிக ரசமான காட்சி எது? பெண் தெய்வம் கண்ணீர் விடுங் காட்சியேயன்றோ? பகவானே! சுதந்தரமோ அடிமைத்தனமோ, உயர் அறிவோ அஞ்ஞானமோ, ஐசுவரியமோ கொடும் வறுமையோ எதை வேண்டுமானாலும் எனக்குத் தருவாய். நான் கவலைப்படுவதில்லை. ஆனால் என்னுடைய உலகில் பெண்களின் கண்ணீர் இல்லாமல் மட்டும் செய்துவிடாதே. பிறகு, இந்தப் பாலைவனத்தில் என்னால் ஒருகணமும் வாழ முடியாது. ●

**(ஆனந்த விகடன் – 17.8.1931)**

சென்னையில் சமீப காலமாக நிறைய பில்லியர்ட்ஸ் கிளப்கள் முளைத்திருக்கின்றன. பெரிய, பெரிய கிளப்புகளில் சீமான்களுக்கு மட்டுமேயான பொழுது போக்காக இருந்து வந்த இந்த மேல்நாட்டுச் சரக்கு, இப்போது சாமானியர்களோடு கைகோர்த்துக் கொண்டு விட்டது! அரை மணி நேரம் பில்லியர்ட்ஸ் விளையாடக் கட்டணம் இருபத்தைந்து ரூபாய்தான்!

"ஹாய் லெட் அஸ் கோ ஃபர் எ கேம் ஆஃப் பில்லியர்ட்ஸ்" என்று ஜீன்ஸுகளும், மிடிகளும் பில்லியர்ட்ஸ் கிளப்புகளை ஆக்ரமிக்க, ஒரே கொண்டாட்டம்தான்! கலர் கலரான பந்துகள் சிணுங்கிக் கொண்டு நீண்ட குச்சிகளின் செல்லமான தட்டுக்களில் குழியில் போய் விழ, உற்சாகக் கூச்சல்கள். சென்னையில் இப்போது பதினைந்துக்கும் மேற்பட்ட பில்லியர்ட்ஸ் பொழுதுபோக்கு பாயிண்ட்டுகள். இன்னமும் பெருகிக் கொண்டே இருக்கின்றன.

வஷி ஷெவா ரமணி. கொஞ்சம் பல்லைக் கடித்துக் கொண்டு உச்சரிக்க வேண்டிய பெயர் ஆனாலும், இந்த சிந்தி தொழிலதிபர்தான் சிங்கப்பூரிலிருந்து, "பாமர" பில்லியர்ட்ஸைச் சென்னைக்கு முதன் முதலாகக் கொண்டு வந்தவர்.

தைவான், ஹாங்காங், இந்தோனேஷியா, சிங்கப்பூர் என்று பல ஊர்களில் தொழில் செய்து பழக்கப்பட்டவர் வஷி. சமீபத்தில் வெளிவந்துள்ள 'மாயா' படம் உட்படப் பல படங்களில் ஸ்பெஷல் எஃபெக்ட் காட்சிகளும், கம்ப்யூட்டர் அனிமேஷன்களும் செய்த 'எடிட் பாயிண்ட்', இவரது நிறுவனம்தான்.

"ஏதாவது புதுசா செய்யணும்னு தோன்றிக் கொண்டே இருந்தது. சென்னை இளைஞர் இளைஞிகளுக்கு சினிமா, மெரீனா

# 25 ரூ. இருக்கிறதா? வாங்க, பில்லியர்ட்ஸ் ஆடலாம்!

• வஷி ஷெவா ரமணி





விட்டால் பொழுதுபோக்க வேறு இடம் ஏதுமில்லை. கொஞ்சம் ஜாலியாகவும் அதே சமயம் திறமை வெளிப்படும் படியாகவும் உள்ள விளையாட்டுகளில் பில்லியர்ட்ஸும் ஒன்று. சிங்கப்பூரில் எல்லா தரப்பு மக்களும் 'பில்லி' கிளப்பு களில் புகுந்து வந்து கொண்டிருப்பார்கள். பக்கத்து பெங் களூரில் சென்னைக்கு முன்பே வந்து விட்டது பில்லி. கொஞ்சம் அதிக முதலீடு தேவையென்றாலும் துணிந்து கோபாலபுரத்தில் 15 மேஜைகளோடு ஒரு கிளப் துவங்கி னேன். நல்ல வரவேற்பு! ஒன்றரை வருட காலத்தில் கிண்டி ராஜ்பவனுக்கு அருகில் அதற்குக் கிளை திறக்கும் அளவுக்கு ஆதரவு இருந்தது. இதை ஒரு பிஸினஸாக எடுத்துக் கொண்டு, பலர் இப்போது பில்லி கிளப்கள் துவங்கியிருக் கிறார்கள்'' என்று சொல்கிறார் வஷி.

இந்த விளையாட்டைத் தெரிந்து கொண்டுதான் பில்லி கிளப்களுக்கு நுழைய வேண்டும் என்பதில்லை. மார்க்கர்கள் 'குச்சியை எப்படிப் பிடிக்க வேண்டும்' என்று துவங்கி, எல்லாமும் சொல்லித் தருகிறார்கள்.

பில்லியர்ட்ஸ் அரங்கச் சூழ்நிலையே பிரமிக்க வைக்கிறது. ரொம்ப காஸ்ட்லியான சினிமா செட் போல இருக்கின்றன. (இன்னமும் தயாரிப்பாளர்கள்/இயக்குனர் கள் கண்களில் இந்த கிளப்கள் படவில்லையா?) ரெஸ்டா ரெண்டும் உண்டு. சனி, ஞாயிறு அன்று காத்திருந்துதான் மேஜைகளைப் பிடிக்க வேண்டும்.

''இங்கே விளையாடி, பெரிய சாம்பியன்களாக ஆவார்கள் என்று எங்களால் உறுதி கொடுக்க முடியாது. பெரிய கிளப்புகளில் உறுப்பினராவதற்குப் பல வருடம் காத் திருக்க வேண்டும். நிறைய 'தகுதிகள்' வேண்டும். ஆனால் இங்கே எங்கள் நோக்கம் பொழுதுபோக்குவதற்கு இன் னொரு இடம் என்ற அளவில், பிரமாதமாய் வைத்திருப்பது தான்! ஆனால் ஆர்வமுள்ளவர்கள் இதை ஒரு துவக்கமாகக் கொண்டு, தொழில்ரீதியாகவும் முன்னேறலாம்'' என்கிறார் கள் மானேஜர்களான சுப்பிரமணியமும், ஷ்யாமும்.

வெள்ளைப் பந்தால் சிவப்புப் பந்தைக் குழியில் தள்ளிய ஜாலியில் இருந்த சங்கரைத் தோளில் தட்டி, 'சபாஷ்' சொல்லிவிட்டு விசாரித்தோம்.

"ஹாங்... என்ன சொல்றது? அப்படியே வந்து பார்த் தேன். கொஞ்சம் நேரத்தை ஓட்டலாம் என்று தெரிந்தது. அப்புறம்... ரொம்ப சீப்! சினிமா போய், ரெஸ்டாரெண்டில் புகுந்தால் இருநூறு ரூபாய் புஸ் ஆகிவிடும். அந்தப் பணம் இருந்தால் நான்கு மணி நேரம் ஆடலாமே" என்றார் சங்கர்.

இங்கே, சென்னை தூதரகங்களில் வேலை பார்க்கும் அயல்நாட்டவர்களும் நிறைய வருகிறார்களாம்.

'வஷி'யின் அடுத்த ப்ராஜக்ட், போலிங் பாயிண்ட் (Bowling Point) என்கிற மற்றொரு பொழுதுபோக்கு அம்சம். ''எதிலும் முதலாவதாக இருக்கணும். அதுதான் நம்முடைய லட்சியம்'' என்று உற்சாகமாகச் சொல் கிறார் வஷி.

— ப்ரியன்

படங்கள் : ரவிசங்கரன்



''எங்க கிராமத்திலே இனிமே யாரும் கள்ளச் சாராயம் காய்ச்சுறது இல் லேன்னு முடிவு பண்ணிட் டோம்!''

''அட, அப்படியா?''

''ஆமா! அதுக்கு ஆகிற செலவை விட பக்கத்துக் கிராமத்திலே விலை மலிவா கிடைக்குதே!''

— கு. அருணாசலம்



''நீ அடிக்கடி இதே கோர்ட்டுக்கு வருகிறாய். உனக்கு ஐந்து ஆண்டு சிறைத் தண்டனை...''

''ரெகுலர் கஸ்டமருக்கு சலுகை ஏதும் கிடையாதுங் களா, எசமான்?''

– சென்னிமலை சி.பி. செந்தில்குமார்.

## வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



**அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!**



அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்




**YESDE ASSOCIATED BUILDERS LTD.**

**FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS**

26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.

Phone: 4340224/4340210/-4342667. Fax: 044-2344333

E.Mail:yesde@md3.vsnl.net.in Web:www.yesdebuilders.com

**ச**ச்சிதானந்தாவை ஆவுடையப்பன் சித்தேரிக்கு அழைத்து வருவான் என்று கந்தசாமி எதிர்பார்த்தார். ஜீப் ஏறும் போது பாஸும் அப்படித்தான் சொன்னான்.

மறுநாள் காலை சந்தனக்கன்று ஏற்றி வந்த வனத்துறை லாரியில் பாஸ் மட்டும் தனியே வந்து இறங்கினான்.

அருர் மேட்சுக்கு ஒன்றுசேர்ந்த இளைஞர் அணி மலையிறங்க, தற்செயலாகக் கீழே போகும் டிராக்டர் ஒன்று காத்திருந்தது.

பையன்களை ஒவ்வொருவராக டிராக்டர் 'டெய்லரி'ல் ஏற்றிக் கொண்டிருந்தார் கந்தசாமி. ஸ்போர்ட்ஸ் பனியன், அரை நிஜார், ஷூவில் யாரும் அவர் வயசு கணிக்க முடியாது.

பாஸ் இறங்குவதைப் பார்த்த கந்தசாமி தூரத்திலிருந்தே கத்தினார்.

"ஆவு வரலியா பாஸ்?"

"இல்லே."

"எங்கே போனான்?"

"ஏற்காட்டிலே ஏதோ லீட்லிங் வாங்கணும்னு போயிடுச்சு."

"சச்சிதானந்தா வந்தாரா?"

"வந்தாரு. ஆவண்ணா கூடவே அவரும் போயிட்டாரு."

பின்னால் டிராக்டர் டெய்லரில் ஏறிக் கொண்டிருந்த இளைஞன் ஒருவன் கத்தினான்.

"மாஸ்டர்... மாஸ்டர்.. இவன் கெட்ட வார்த்தையிலே திட்டறான்."

அதற்கு மறுப்பு வேகமாக வந்தது.

"இல்லீங்க மாஸ்டர்! இவன்தான் ஷூவால மிதிச்சான்."

கந்தசாமி தலை திருப்பி கம்பீரமாக ஒருமுறை முறைத்தார். உடனே நிசப்தம்.

"இப்படி வா பாஸ்!" கைகாட்டி அவனை அழைத்து ஒரு பூவரச மரத்தடிக்கு நடந்தார் கந்தசாமி.



அவன் பின்னால் வந்ததும் கேட்டார்.

"எப்ப வர்றேன்னான் ஆவு?"

"சொல்லலே."

ஒருகணம் அவர் பார்வை அவன் மேல் நிலை குத்தியது. எதுவோ தேடியது.

"வருவானாடா?"

என்ன கேள்வி இது என்று பிடறியில் அடி விழுந்தது போல் அவரைப் பார்த்தான் பாஸ்.

"என்னப்பா ஒளர்றீங்க?"

அமைதியாக அவனைப் பார்த்தார் கந்தசாமி.

உதட்டில் ஓர் உலர்ந்த புன்னகை.

"இல்ல பாஸ். அவன் எப்ப வெளியே கௌம்பினாலும் இப்படி ஒரு நெனப்பு வந்துடுது."

பாஸ் அவரை உற்றுப் பார்த்தான்.

"இப்ப சச்சிதானந்தா வேற வந்திருக்காரா!"

பாஸின் புருவம் விநோதமாக உயர்ந்தது.

"அவனை அல்மோராவிலேர்ந்து கூட்டியாந்தானே, அதிலேர்ந்து இப்படி ஒரு கலக்கம்!"

"நீங்க சொன்னதே இல்லியே!"

"சொல்லி ஒன்னை வேற கலக்கி இருக்கணுமோ?"

"முட்டாள்தனமான பயம்... அதுவும் நீங்க?" என்றான் பாஸ்.

கந்தசாமி வெள்ளையாகச் சிரித்தார்.

"பையா... எல்லா பயமும் முட்டாள்தனம்தான்"

பாஸ் குறுக்கே புகுந்து வெட்டினான்.

"தட்ட ஆரம்பிச்சுடுவீங்களே, தத்துவத் தகர டப்பாவ"

அவன் கிண்டலை மார்பில் குழந்தை உதைக்கிற குஷியோடு வாங்கிய மலர்ச்சி, அவர் முகத்தில்.

"கொஞ்சம் முட்டாளா இருக்கணும்டா. ஒரு 'த்ரில்' வேணாம்? இப்ப பாரு... அந்த பயம் இருக்கறதால ஒனக்கு அவசர அவசரமா பொண்ணு பார்த்து ஒன் சாப்டரை குளோஸ் பண்ணிடணும்னு முடிவு கட்டிட்டேன்."

"குளோஸ்?" என்று ஒரு புத்தகத்தைத் திறந்து மூடுவது போல் கைவிரித்து மூடிக் கேட்டான் பாஸ்.

"ஆமாண்டா."

சைப் பயறு மூட்டை மேல் பாஸுக்கு உட்கார வேண்டும் போலாகி விட்டது.

உட்கார்ந்தான்.

கந்தசாமியை நிமிர்ந்து பார்க்காமல் கண் மூடி இரண்டு தடவை தலையில் அடித்துக்

"பொண்ணு ரெடியாப்பா?"

"எவரெடி"

"யாரு?"

"தீபிகா"

# தீபிகா

**யா**ரோ லாரியில் ஏற்றச் சாலையோரம் போட்டிருந்த மொச்

கொண்டான். பிறகு கண் திறந்து ஆயாசமாகப் பார்த்துக் கேட்டான்.

"ஒங்களுக்கு மேட்ச் எத்தனை மணிக்குப்பா?"

அவன் எதிர்வினை கந்தசாமியைச் சற்று குலுக்கி அசடாக்கி, நிசப்தமுற வைத்தது.

கந்தசாமி பேசவில்லை.

பாஸ் மீண்டும் கேட்டான். "எத்தனை மணிக்குன்னு கேட்டேன் இல்லே?"

"ஏன் கேக்கறே?"

"பெட்டர், நீங்க பொறப்படுங்க" அவன் கண் மூடித் தலைகுனிந்தான்.

"இதுக்கு என்னடா அர்த்தம்?"

"வாலிபால். ஒரு லோடு தத்துவ ஜல்லி. வேற என்ன தெரியும்?" என்று வாய்த்துடுக்காகச் சொன்னான் பாஸ்.

"இதான் என் லிமிட்டுங்கறே" கேட்டு விட்டு கந்தசாமி ஒரு சிறு மூச்சு விட்டார்.

"பையா... எனக்கு வயசாச்சு...! சமைக்க முடியலப்பா. அதுவும் ரெண்டு புள்ளைல ஒண்ணையாவது நமக்குன்னு தக்க வச்சிக்கத் தோணுது... ஆஃப்டர் ஆல் நானும் மனுஷன்தான்டா."

பாஸ் முகம் மாறி வருத்

தம் படர்ந்தது.

"ஸாரிப்பா... நான் ஓவராப் போய்ட் டேன்! ஆனா இருந்திருந்து ஏன் இந்த ஐடியா வந்துது ஒங்களுக்கு?"

"ரெண்டு மூணு நாள்லே நாம சித் தேரிக்குக் குட்பை சொல்லப் போறோமே!"

அவன் அடுத்த கேள்விக்குத் தாவினான்.

"நெஜம்மா ஒங்களுக்கு ஒரு ஸ்விச் ஆஃப்'ப்பா"

கந்தசாமி இளைய மகனின் சள்ளையை, கிண்டலை, குத்தலை ரசிப்பவர். இப்போது சற்று வெலவெலத்தார். மேலே பேசு என்று பார்த்தார்.

"ஆவண்ணா தீபிகாவுக்கு ஓடி ஓடி டியூஷன் எடுக்குது. போட்டோ எடுக்குது. விண்ணப்பம் ஃபில்லப் பண்ணித் தருது. பிராக்டிகல் கிளாஸுக்கு அசூர் கூட்டிப் போய் வருது. புரியலே உங்களுக்கு?"

கந்தசாமி இந்தக் கோணமே புதியது போல் விழித்தார்.

ஆவுடையப்பனா... அவனுக்குள் இப்படி ஒரு நினைப்பா? வீட்டுக் கூரையின் ஓட்டு இடுக்கில் விழும் வெளிச்ச வில்லையில் எலி ஓட்டம் பார்த்த மாதிரி மருண்டார் கந்த சாமி.

"நான் தீபிகாகிட்டே அப்படி ஒரு நெனப்போடதாம்பா பழகிட்டு வர்றேன்!"

"எப்படி?"

"அண்ணியா"

டிராக்டர்காரன் கை ஹாரனை இரு முறை அழுத்தி அழுத்தி, கந்தசாமியைக் கூப்பிட்டான்.

கந்தசாமி திரும்பிப் பார்த்து பொறுக்கச் சொல்லிக் கைகாட்டினார்.

"பொறப்படுங்க. இப்படி இந்த நேரத்தில பேசற விஷயம் இல்லே இது."

கந்தசாமி ஏதோ சொல்ல வாயெடுத்தவர் மறுபடியும் இவனிடம் எதற்கு என்று நிறுத்தி, "ஹாட்பாக்கிலே புளியஞ்சாதம் இருக்கு. என்ணுப் பொடி பெருங்காயம் போட்டு கமகமன்னு வாசனை வந்துது. டப்பாவிலே கருவேப்பிலைத் துவையல் வச்சிருக்கேன்" என்று மாற்றினார்.

"சரி" என்றான் பாஸ்.

'அப்பாவுக்கு ஏன் அந்த நினைப்பு வந்தது?'

புளியஞ்சாதமும் கருவேப்பிலைத் துவை யலும் வயணமாய் இருந்தும் மனசு ஈடுபட வில்லை. அதே கேள்வி மலை ஈ மாதிரி உள்ளே சுற்றிச் சுற்றி ரீங்கரித்தது.

ஐந்தாறு வாய்க்கு மேல் கொள்ள வில்லை. கையலம்பி விட்டு எழுந்தான்.

ஹாட்பேக்கையும் எவர்சில்வர் டப்பா வையும் மூடி சமையல் மேடை மீது தூக்கி வைத்தான். துடைப்பம், முறம் எடுத்து வந் தான்.

சாப்பிட்ட இடத்தில், 'மக்'கிலிருந்த தண்ணீரைத் தெளித்து விட்டுப் பெருக்கி சுத்தம் செய்யத் தொடங்கினான்.

வெளியே பாதி மூடிய கதவு நாதாங்கி, வரலாமா என்று யாரோ உத்தரவு கேட்பது போல் லொட் லொட் என்று ஒலித்தது. தட் டலின் எதிரொலி சித்தேரியின் நிசப்தத்தின் மண்டையில் அடிப்பது போல் வந்தது.

"யாரு?" என்று பெருக்கிக் கொண்டே பாஸ் கேட்டான்.

"நான்தான்"- தீபிகா.

"அடடேடே... வாங்க வாங்க. உள்ளாற வாங்க" என்று பெருக்கியதை அவசரமாக முறத்தில் கூட்டினான் பாஸ்.

படியேறி கதவை விரியத் திறந்து விட்டுக் கொண்டே ஒரு புதிய வாசனையும் வெளிச்

---

**"என்னய்யா படம் எடுத்திருக்கீங்க. அரைச்ச மாவையே அரைச்சிட்டு?"**

**"அப்பவாவது 'வெரி நைஸ்'னு சொல்ல மாட்டீங்களான்னு எதிர்பார்த்துதான்!"**

**—சென்னிமலை சி.பி. செந்தில்குமார்**



சமூம் பிரவேசமாக உள்ளே வந்தாள் தீபிகா.

வந்தவள் வேகமாக நெருங்கி, "இப்படிக் கொண்டாங்க!" என்று அவன் கையிலிருந்த துடைப்பத்தையும் முறத்தையும் வாங்கி னாள்.

பலமுறை பார்த்த முகம். அப்பாவுடன் போடும் செல்லச் சண்டை போதாவிட் டால் அன்புப் பஞ்சத்திற்கு வடிகால் தேடி சிண்டிச் சிண்டிக் கிளறி, கொஞ்சம் கோபம், கொஞ்சம் சிரிப்பு பார்க்கும் அதே முகம். இப்போது ஒரு வித்தியாசப் புதுமை.

"ஆம்பள வேல ஆம்பள வேலைதான். அரை கொறை வேலை" ஒரு டோஸ் கொடுத்தபடி பெருக்கினாள்.

பிறகு பெருக்கியதைப் புழக்கடைக்குப் போய்க் கொட்டி விட்டுத் திரும்பி, வர வரக் கேட்டாள்.

"அங்கிள் இல்லியா?"

"இன்னிக்கு அரூர் மேட்ச்."

"தெரியுமே... போய்ட்டாரா?"

"போய்ட்டார்."

"மூணு மணிக்குப் போறதாச் சொல்லி இருந்தாரே."

"ஏதோ ஒசி டிராக்டர் கெடைச்சதாம்" நிறுத்தி பாஸ் நாற்காலி காட்டி, "உட் காருங்க" என்றான்.

அவள் உட்கார்ந்தாள்.

"எப்ப வருவாரு?"

"மேட்ச் முடிஞ்சு லாரி கெடைச்சா ராத் திரிக்கு வருவாரு. இல்லேன்னா காலைலே தான்."

தீபிகா புருவம் நெறித்தாள். அவள் உட்கார்ந்திருந்த நாற்காலிக்கு நேர் மேலே சுவரில் ஆவுடையப்பன் போட்டோ. ஃபாரஸ்டர் பயிற்சி முடித்து எடுத்தது. திறந்த கதவு வழியே நுழைந்த மலைக் காற்றில் ஆணி வளையம் நகரவே இரு முறை ஆடிற்று.

பாஸ் அதையும் அவளையும் மாறி மாறிப் பார்த்தான்.

"என்ன பார்க்கறீங்க?" என்று அவன் பார்வையைக் கவனித்தாள். தலை வளைத்து நிமிர்ந்து பார்த்தாள்.

"பாரஸ்டர் சார் போட்டோவா?" இயல் பாக அவள் கேட்டது, புரிந்து கொண்டே புரியாத மாதிரி காட்டும் பாவனையாக அவனுக்குப்பட்டது.



**"தமிழ் சினிமா ரசிகர்களைப் புரிஞ் சுக்கவே முடியலை..."**

**"ஏன்?"**

**"தமிழ்ல ஃப்ளாப் ஆன படத்தை தெலுங்குல ரீமேக் பண்ணினேன். சுமாரா போச்சு. அதை டப் பண்ணி தமிழ்ல மறுபடி கொண்டு வந்தேன். சூப்பர் ஹிட் ஆகிடுச்சே?"**

**– சென்னிமலை சி.பி. செந்தில்குமார்.**

---

"சரி" என்றவள், நிமிர்ந்து அவனைப் பார்க்க வந்த காரணம் விளக்கினாள்.

"வீட்ல பாத்ரும் லைட் ஸ்விட்ச் தொட்டா ஷாக் அடிக்குது. அம்மா அங்கிளைக் கூட்டியாந்து காட்டச் சொன் னாங்க. அதுக்கு வந்தேன்" என்று எழப் போனாள் தீபிகா.

"உக்காருங்க தீபிகா"

இப்போது பேசிவிட வேண்டும். இதை விட வேறு வாய்ப்பில்லை. பாஸ் முடிவுக்கு வந்தான். அவன் குரலில் மரியாதை கூடிய விலக்கம் ஓர் ஆணையாக அவளை உட்கார வைத்தது.

"ஒங்களோட பேசணும்."

அவள் முகம் சட்டென்று மாறியது. ஒரு நொடி. மறு நொடியில் சிரிப்பு மீள, "பேசுங்க. அதுக்கு ஏன் இவ்வளவு சீரியஸ்?" என்றாள்.

"இது சீரியஸ்தான்."

திடீரென்று கவிந்த இறுக்கச் சூழலைத் தவிர்க்க அவள் விரல் சொடுக்கிக் காட்டி "ஸ்டார்ட்" என்றாள். நெகிழ்ச்சி குலையாத முக மலர்ச்சி.

அவன் தொண்டை கனைத்துத் தொடங்




பெரிய ஐஸ்கட்டியில் இவர் என்ன செய்து கொண்டிருக்கிறார் தெரியுமா? பிள்ளையார் உருவம் உருவாக்கிக் கொண்டிருக்கிறார். சமீபத்தில் சென்னையில் பத்திரிகையாளர் சு.வெ.ரா. மோகன் வீட்டுத் திருமண வரவேற்பில் தான் இந்த ஐஸ் பிள்ளையார் வைக்கப்பட்டிருந்தது. நாலடி உயரமுள்ள இந்த ஐஸ் பிள்ளையாரை உருவாக்க சுமார் அரை மணி நேரம்தான் ஆனது. ரிசப்ஷன் முடிந்து, அன்று இரவு கழிந்து, மறுநாள் காலை முகூர்த்தம் வரை கரையாமல் இருந்தது கண்டு பலருக்கும் ஆச்சரியம்!

— சி.எம்.



னான்.

''ஒங்களால ஷாக் தாங்க முடிஞ்ச அளவு என்னால முடியலீங்களே!''

தீபிகாவின் முகம் சுருங்கிற்று. அவன் எங்கோ தொட்டுவிட்டான்! அவன் பார்வையைத் தவிர்க்க அவள் தன் கைவிரல் நகங்களின் காப்பிக் கலர் நகப்பூச்சைப் பார்த்தாள்.

''என்ன சொல்றீங்க?'' என்று மெதுவாய்க் கேட்டாள்.

''எங்கம்மா போய் பதிமூணு வருஷம் ஆச்சு!''

''ம்ம்ம்'' என்றாள் அவள்.

அவன் தொடர்ந்தான். ''நேத்து சாயங்காலம் ரயில்வே ஸ்டேஷன்ல அவங்க ஞாபகம் வந்து திகீர்னு இடிஞ்சு ஒக்காந்துட்டேன். இப்படி அப்பப்ப...''

அவள் நிமிர்ந்து பரிவு காட்டிச் சிரித்தாள். அவன் தொடர்ந்தான்.

''அண்ணா, அப்பா... எல்லாரும் இருக்காங்க. ஆனா ஏனோ நான் ரொம்ப அநாதைன்னு ஒரு ஃபீலிங். ஒரே இருட்டடிப்பா அப்பப்ப வந்து கவிஞ்சுக்குது. ஏன் ஒங்ககிட்டே சொல்றேன்? சொல்லணும் போல தோணுது. ஒங்க வெளிச்சத்தைக் கொஞ்சம் கேட்டு வாங்கிக்கணும் போலத் தோணுது.''

எங்கே வருகிறான் என்று எடைபோடுவது போல் பார்த்தாள் தீபிகா.

''இப்ப சொன்னீங்களே, ஆம்பள வேலையப் பத்தி. ஆம்பள மனசு கூட அப்படித்தான். சுத்த அத்துவானம். பெண் வெளிச்சம் வேணும். அம்மா, அக்கா தங்கச்சி இல்லாதவங்களுக்கு ஒரு அண்ணி வெளிச்சம்'' என்று நிறுத்தினான் பாஸ்.

வனமரங்களின் சிள்வண்டு ஓசை உயர்ந்து ஒலித்தது. தீபிகா பேசவில்லை. ஒரு நிமிஷம் கழித்து எழுந்தாள்.

''சரி நேரமாய்ட்டது! அம்மா கவலைப் படுவாங்க. அங்கிள் வந்தா... யாரோ பொண்ணு பார்க்கற பார்ட்டி எங்க வீட்டுக்கு பொம்மிடியிலேர்ந்து வரப்போவுதாம். அதுல யாராவது இருட்டு பாத்ரூமுக்கு லைட் போடப் போய் ஷாக் வாங்க வேண்டாம். அவரை வரச் சொன்னதா சொல்லுங்க'' என்று பதில் எதிர்பாராமல் விடுவிடுவென்று நடந்தாள் தீபிகா.

(தொடரும்)

பிப்ரவரி — 14
காதலர்கள் தினம்
பக்கம் 74லிருந்து
காதல் காற்று
வீசுகிறது.

சுமிசூப்பர்மார்க்கெட்

# ஒரு பாட்டில் தேன் குடிச்ச மாதிரி!

ஒரு பாட்டில் தேன் குடிச்ச மாதிரி இருக்கு. என்ன language! என்ன ஒரு மென்மை! சரித்திரத்தில் எந்த ஒரு விஷயத்தையும் மிகைப்படுத்தாம, ஒரு பிறந்த குழந்தையைக் கையில குடுக்கற மாதிரியான வெள்ளைத்தன்மை.

சாமிநாத சர்மாவோட 'நான் கண்ட நால்வர்' பல வருஷங்களுக்கப்புறம் ரீ-ப்ரிண்ட் வந்திருக்கு. (பூங்கொடி பதிப்பகம், 11, சித்திரைக்குளம் மேற்கு வீதி, மயிலாப்பூர், சென்னை – 4) ரெண்டு மணி நேரத்துல, ஒரே மூச்சுல படிச்சு முடிச்சேன்.

சர்மா ஒரு Dedicated journalist. சொல்ற விஷயத்தோட அர்த்தத்தையும் தன்மையையும் பின் விளைவுகளையும் ரொம்ப ஷார்ப்பா முன்கூட்டியே கணிச்சி, 'இதுக்கு பதிலா அது வந்திருக்கலாமே'ன்னு யாரும் நினைச்சுட முடியாத அளவுக்கு ஸென்டன்ஸஸ் அமைக்கிறவர்.

இந்தப் புஸ்தகத்துல, பல இடங்களைத் தாண்டிப் போகும்போது, "இவர் ஏன் கதை எழுதாமப் போனார்?"னு அடிக்கடி தோணுது.

ஒரே ஒரு சாம்பிள் பார்க்கறீங்களா? சுப்ரமணிய சிவா, திரு.வி.கவை அவரோட 'நவசக்தி' ஆபீஸ்ல மீட் பண்ண வர்ற காட்சியை எப்படிக் காட்டறார் பாருங்க:

'நவசக்தி காரியாலயத்திற்குச் சிவனார் வருவதும் போவதும் ஒரு தனிக்காட்சியாகவே இருக்கும். அவருடைய தோள் அளவுக்கு வரும் நீண்ட தடி. முழங்கால் வரை வரும் நீண்ட அங்கி; தலையில், சிறிது கோணலாகக் கட்டியிருக்கும் தலைப்பாகை. தடியை லொட் லொட் என்று ஓசைப்படுத்தி விதமாக ஊன்றிக் கொண்டுதான் வருவார். உள்ளே நுழையும் போதே, சிவனார் வருகிறார் என்று எங்களுக்குத் தெரிந்து விடும். உள்ளே வந்து முதலியாரைப் (திரு.வி.க.) பார்த்ததும், "என்ன விளக்கெண்ணெய் முதலியார்! சௌக்கியமா?" என்று சொல்லிக் கொண்டே, அவர் இருக்கும் அறைக்குள் பிரவேசிப்பார். பிரவேசித்து, எவ்விதப் பீடிகையுமில்லாமல், "எனக்கு இப்போது பத்து ரூபாய் தேவை" என்று கேட்பார்...'

படிக்கும் போது, சினிமா பார்க்கற மாதிரி இல்லை? சிவா ஏன் திரு.வி.கவை 'விளக்கெண்ணெய் முதலியார்'னு கூப்பிடறார்ங்கறதுக்கு இன்னொரு பேரால இன்னும் சுவையான விளக்கம் இருக்கு. (அதை நான் சொல்லப்போறதில்லை.)

திரு.வி.க., வ.வே.சு. ஐயர், சுப்ரமணிய சிவா, பாரதியார் – இந்த நாலு ஜீனியஸோட நேரடியா பழகற வாய்ப்புக் கிடைச்ச சாமிநாத சர்மா, தன் அனுபவங்களை இதுல தொகுத்துத் தந்திருக்கார். அவர் நாலு பேரைக் கண்டார்னா, நாம இதுல அஞ்சு பேரைப் பார்க்கறோம். – சாமிநாத சர்மாவையும் சேர்த்து. அருமையான புஸ்தகம்.

* * *

பிச்சைக்காரர்களுக்கு சம்பாத்தியம் ஜாஸ்தி; பேங்க் அக்கவுண்ட் வெச்சிருக்காங்க, செல்போன்ல பேசறாங்கன்னு வித விதமா ஜோக்ஸ் பார்க்கறோம். உண்மையில

இந்த 'எக்ஸாஜிரேஷனு'க்குப் பிச்சைக்காரங்களை விட ரொம்பப் பொருத்தமானவங்க பஸ் கண்டக்டர்ஸ்தான்னு நினைக்கறேன்.

23C ரூட்ல நான் பார்த்த ஒரு காட்சியை சொல்றேன்.

என் வயசுப் பொண்ணு ஒருத்தி சைதாப்பேட்டைல ஏறி நுங்கம்பாக்கத்துக்கு டிக்கெட் கேட்டு, பத்து ரூபா கொடுத்தா. டிக்கெட் சார்ஜ் ஒண்ணரையோ என்னவோ. 'சில்லறை இல்லை. மீதி அப்புறம் தரேன்'னாரு கண்டக்டர். இன்னொரு பொண்ணு தி.நகர்ல ஏறி, அயனாவரம் கேட்டா. ஸேம் பத்து ரூபா, ஸேம் சில்லறை இல்லை பாட்டு. மூணாவதாகவும் ஒரு ஆள் எக்மோர்ல ஏறி அடுத்த ஸ்டாப்பிங்ல இறங்க ஒண்ணேகால் டிக்கெட் கேட்டு, ரெண்டு ரூபா காயின் குடுத்தார்.

நான் கவனிச்சுப் பார்த்தேன். இந்த மூணு பேருக்குமே கண்டக்டர் பாக்கிச் சில்லறை தரலை. பத்து ரூபா கொடுத்த ரெண்டு பொண்ணுங்களையும், பஸ் ஸ்டாண்ட் வந்ததும் "இறங்கு! இறங்கு!"ன்னு அவசரப்படுத்தி, "சில்லறை இல்லாம ஏறினது உன் தப்பு. டிப்போல வந்து வாங்கிக்க"ன்னு சத்தம் போட்டுத் துரத்திட்டு, அந்த ஆளுக்குத் தர வேண்டிய முக்கால் ரூபாய்ல வெறும் எட்டணா மட்டும் குடுத்துட்டு, வேற சில்லறை இல்லைன்னு சொல்விட்டார்.

ஒரு சிங்கிள்ல இந்த மாதிரி சுமார் இருபது ரூபா 'களவாட' முடியுதுன்னா, ஒரு நாளைக்குப் பத்து சிங்கிள்னே வெச்சுக்கிட்டாலும் இருநூறு ரூபா. மாசத்துக்கு? ஆறாயிரம் – அடுத்தவன் வயித்தெரிச்சல்!

சில்லறைத் தட்டுப்பாடுங்கறது பொதுவா இருக்கற விஷயம்தான். But, அடிப்படைல நேர்மை இல்லாதவங்களுக்கு எத்தனை குடுத்தாத்தான் விடியும்?

* * *

தேரில் ஏறி,
வெளியே வந்த தெய்வம்
நடுத் தெருவில்
நின்று விட்டது.
வடம் பிடிப்பதற்குள்
வீதியெங்கும்
சாதிச் சண்டை
நல்ல வேளை –
போகிற வழிகாட்டிப்
புண்ணியம் தேடிக் கொண்டது
புல்டோசர்.
வந்திருந்தவர்களுக்கு
அதன்
சாதி தெரியவில்லை,
விட்டு விட்டார்கள்.

– விஜயராகவன்

– இந்த சப்ஜெக்டை ஒரு ஷார்ட் ஸ்டோரியா எழுதினா, கவிதைல இருக்கற ஹ்யூமரைக் கொண்டு வர முடியுமான்னு யோசிக்கிறேன். அநேகமா சாத்தியமில்லைன்னுதான் நினைக்கறேன். 'முடியும்'னு



சொல்லக் கூடிய மன்ற உறுப்பினர்கள் யாராவது ட்ரை பண்ணி அனுப்பலாம். நல்லா இருந்தா (மட்டும்) கல்கில பப்ளிஷ் பண்ண சிபாரிசு செய்யப்படும்.

— சுமி

முதல்வர் நாற்காலியிலிருந்து ஜோஷியைத் தூக்கி எறியப்போகிறார் என்று எல்லோரும் எதிர்பார்த்து நிற்கையில், 'ஆட்சிக் காலம் முழுதும் ஜோஷியே நீடிப்பார்' என்று அல்வா கொடுத்து விட்டு, திடீரென்று இப்படி பல்டி அடித்து விட்டாரே தாக்கரே! என்னதான் சிவசேனை அறிவித்த திட்டங்களை எல்லாம் சட்டுப்புட்டென்று முடித்து, சரிந்து கொண்டிருக்கும் 'இமேஜை' தேர்தலுக்கு முன் தூக்கி நிறுத்தி, பவாருக்கு சவாலாக, மராட்டா வோட்டுக்களை எல்லாம் அள்ளிக் கொள்ளத்தான் ராணேயின் நியமனம் என்று பூசி மெழுகப்பட்டாலும், உள் விவகாரம் வேறாம்! BCCI ஐ (கிரிக்கெட் ஆபீஸ்) தாக்கிய சிவசேனைக்காரர்களை, முண்டே கட்டளையின் பேரில் போலீஸ் கைது செய்ய, ஜோஷி தலையிட்டு தடுக்காததில், தலைவருக்கு எக்கச்சக்கக் கோபமாம்! "நம் கட்சி ஆட்சியிலிருக்கும்போதே உம்மால் சிவசேனைக்காரர்களைக் காப்பாற்ற முடியவில்லை என்றால், நீர் வேறு என்னத்தை (அதாகப்பட்டது, நாளை காங்கிரஸ் ஆட்சியிலமர்ந்து நம்மை உலுக்கும் போது) சாதிக்கப் போகிறீர்?" என்று துப்புகெட்ட மனிதரைத் தூக்கி எறிந்து விட்டாராம்!

## அரசியல் தராசு

'ஜோஷியைக் காட்டிலும் ராணே உயர்ந்தவரா?' இதுதான் இன்று மும்பையின் 'ஹாட்' பட்டிமன்றம்! ராணே கொஞ்சம் குள்ளம்தான்; ஆனால் அசாத்திய சமர்த்தராம்! செம்பூரில், சாதாரண சிவசேனைத் தொண்டராக வாழ்க்கையை ஆரம்பித்தவர், சீக்கிரமே ஒரு 'பார் அண்ட் ரெஸ்டாரண்டை'யும் ஆரம்பித்திருக்கிறார். அடுத்து, 'ஷாகா பிரமுக்'காக முன்னேறி, 'BCC' யில் இடம் பிடித்து, ராஜ்தாக்கரே மனதிலும் இடம்பிடித்து, அதன் பயனாக BEST சேர்மனாகி, அப்புறம் சிந்து தூர்க் எம்.எல்.ஏ.வாகி, கடைசியில் வருவாய்த் துறை அமைச்சரவையையே கைப்பற்றிவிட்டார்! அப்போது பதவியிறக்கியது மருமகனை (சுதிர்ஜோஷி), இப்போது இறக்கியிருப்பது மாமனை. (மனோகர் ஜோஷி.) ஆனால் பெரிய சாதனை, 91-ல், ஸ்ரீதர் நாயக் என்ற காங்கிரஸ்காரரின் கொலை வழக்கில் கைதாகியபோதிலும், பெயிலில் வெளியே வந்து, பிறகு வழக்கிலிருந்தும் 'நிரபராதி' என்ற பெயருடன் வெளியே வந்து விட்டதுதான்! ஆனால் ஜோஷியோ, பிள்ளை உன்மேஷ் ஜோஷி, மாப்பிள்ளை கிரிஷ் வியாஸ் போன்றோர் சம்பந்தப்பட்ட ஊழல் வழக்குகளிலிருந்தே வெளியே வரவில்லையே... ஹூம்... தப்பிக்கத் தெரிந்தவன்தானே தலைவன்?

## உள்ளே... வெளியே....

பி.ஜே.பி. 'காம்ப்'பில் ஒரே புன்னகை மயம்தான்! மைத்துனர் பிரமோத் மஹாஜன் வாயிலாகத் தாக்கரேவுக்குத் தூதனுப்பி, தங்களுடன் பனிப்போர் புரிந்து கொண்டிருந்த ஜோஷியை நீக்கியதில், முண்டேவிற்கு உள்ளூர உவகை. ஆனால் வெளிக்காட்டிக் கொள்ளாமல், 'அதென்னமோ சிவசேனையின் உள் விவகாரம்' என்று சம்பந்தமில்லாதது போல் அறிக்கை விட்டாகி விட்டது!

அடுத்த தேர்தலில் தாங்கள்தான் ஆட்சி அமைக்கப் போவதாக நம்பிக் கொண்டிருக்கும் காங்கிரஸ்காரர்களுக்கோ அதைவிட சந்தோஷம்தான்! ராணே வசூல் மன்னராம்! காலியாகிக் கிடக்கும் கஜானாவில், அவர் வந்தால் கொஞ்சம் சில்லறை சிணுங்கும் என்ற மனக்கோட்டை அவர்களுக்கு! ஆனால் மேலோட்டமாக, 'எங்களுக்கொன்றும் ஆட்சியைப் பிடிப்பதில் அவசரமில்லை; கவிழ்க்குமெண்ணம் எதுவு



• வேதனையின் விளிம்பில் ஜோஷி

மும்பை மசாலா :



• வெற்றிக் களிப்பில் ராணே

படியாக இருக்கும்" என்கிறார், ஊர்வலத்துக்கு 'ஐடியா' கொடுத்த சேதன் மோடி. வேடிக்கை பார்த்துக் கொண்டே காரில் பறந்தவர்களுக்கு, உறைத்திருக்குமோ என்னவோ?

## புதுப்புது மரபுகள்

பதினோரு மணிக்கு மேல் உணவு விடுதி களில் மதுபானங்களை வழங்கக் கூடாது என்று அரசு ஆணையிட்டதிலிருந்து, போலீசார் இரவு நேரங்களில் ஹோட்டல்களை மேய்வது அதிகமாகி விட்டது. அதனால், சப்-இன்ஸ்பெக்டர் கமல்ஜித் சிங், பின்னிரவில் கோரேகானிலுள்ள ஒரு ஹோட்டலுக்குச் சென்று, தனக்கு 'ட்ரிங்க்ஸ்' வேண்டுமென்ற போது, முதலாளியிலிருந்து, 'வாட்டர்பாய்'

# நடக்காதென்பார் நடந்துவிடும்!

வரை, 'ஐயோ, அந்தத் தப்பெல்லாம் நாங்கள் செய்வதில்லை' என்று சத்தியம் செய்தது ஒன்றும் வியப்பில்லை. ஆனால், தனக்கு மது கிடைக்காத எரிச்சலில், இன்ஸ்பெக்டர் கோபமுற்று, இவர்களை அடி அடி என்று அடித்தது தான் வேடிக்கையான வேதனை! இந்த அதிர்ச்சியால், அந்தப் பகுதியிலிருக்கும் 400 ஹோட்டல்காரர்களும் உடனே மோர்ச்சா, தர்ணா என்று ஆரம்பித்து விட்டனர். 'சிங்'கை தற்காலிகமாக சஸ்பெண்ட் செய்திருக்கிறார்கள். இது வெறும் கண்துடைப்புதான் என்று, ASHR (அஸோஸியேஷன் ஆஃப் ஹோட்டலியர்ஸ் அண்ட் ரெஸ்டாரண்ட்ஸ்) தலைவர் ஷெட்டி, இத்துடன் இதனை விட்டு விடுவதில்லை என்று போராடி வருகிறார். சட்டத்தின் காவலர்களே சட்டத்தை மீறுவது பழைய மரபாகி விட்டது! ஆனால் சட்டத்தை மீறாதவர்களைத் தண்டிப்பதென்பது புது மரபாகியிருக்கிறது.

மில்லை' என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

## எதிர்கால ஊர்வலம்

பாரத் பெட்ரோலியமும், பெட்ரோலியம் கன்ஸர்வேஷன் ரிஸர்ச் ஆர்கனைஸேஷனும் இணைந்து, ஸிங் சர்க்கிளிலிருந்து தாதர் வரை ஒரு அதிசயமான ஊர்வலத்தை நடத்திக் காட்டின. ஒரு யானை முன்னே செல்ல, ஏராளமான மாடுகள் வாகனங்களை இழுத்துக் கொண்டு பின்னே சென்றன. "பெட்ரோலை உபயோகிப்பதில் நாம் அசிரத்தையாக இருந்தால், எதிர் காலத்தில் நம் கார்களை மாடுகள்தான் இழுக்கும்

**டெவில் பீஸ் :**

காஜோல் கடைசியில் அஜய்தேவ்கனைத் திருமணம் செய்து கொள்ள நாள் குறித்து விட்டாராம். (ஃபெப்-7?) பரீட்சை எல்லாம் நெருங்கும் சமயத்தில், இப்படி ஒரு ஷாக்கா? இளைய சமுதாயம் ரொம்பவும் நொந்திருக்கிறது!

— ஜெயஸ்ரீ ராஜ்

# அக்னிசர்மா பக்கம் பிப்ரவரி 10 முதல் 16 வரை



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

வாழ்க்கையில் நல்லதொரு திருப்பம் ஏற்படக்கூடிய வாரம் இது. அரசாங்க சமாசாரங்கள் ஏதும் இருந்தா அனுகூலமா முடியும். வியாபாரிகளுக்கு லாபம் உறுதி. தகவல் தொடர்புத் துறைகளில் இருப்பவர்களுக்குச் செழிப்பான பாதை புலப்படும். தொழிலதிபர்களுக்கு வளர்ச்சி தெரியும். கூடப் பிறந்தவங்களால சில காரியங்கள் நிறைவேறும். புதுமணத் தம்பதிகள் சிலருக்கு தேனிலவுக்கு ஃபாரின் போற சான்ஸ் இருக்கு. சனி ஜென்ம ராசியில் உலவறதால அதிக உழைப்பும் அலைச்சலும் தவிர்க்க முடியாதவை.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசிரிஷம் 2-ம் பாதம் வரை)*

நீங்க எண்ணுகிற காரியங்களும் போட்டிருக்கற திட்டங்களும் ரொம்பச் சுலுவா நிறைவேறக்கூடிய வாரம் இது. ஆபீஸ் கோயர்ஸுக்கு இன்கிரிமெண்ட் மாதிரி ஏதும் கிடைக்கலாம். பொருளாதார ரீதியில நல்ல முன்னேற்றம் தெரியும். எஞ்ஜினியர்கள், இயந்திரப் பணியாளர்களுக்கும் நல்ல வளர்ச்சி தெரியும். சட்டம், காவல், ராணுவத் துறையினருக்கு வெற்றி நடைதான்! கொடுக்கல் - வாங்கலில் ஆதாயம்தான். ஃபாரின் தொடர்புள்ளவங்களுக்கு லாபமே! சிலருக்குப் புது வாகனம் வாங்கற சான்ஸ் இருக்கு.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்களுக்கே ஜம்முனு தெரியற வாரம் போங்க. வியாபாரம், தகவல் மற்றும் வெகுஜனத் தொடர்புச் சாதனங்களில் இருக்கறவங்க வெற்றிநடை போடக்கூடிய வாரம். கலைத் துறையினருக்கும் சுபீட்சமான வாரம்தான். பெண்களில் சிலர் புதுப் புடவை, நகை வாங்குவாங்க. சிலர் உல்லாசப் பயணம் போவாங்க. ஆக மொத்தம் உற்சாக வாரம்தான். வெளிநாட்டு சேதி குஷிப்படுத்தறதாத்தான் இருக்கும். கொடுக்கல் - வாங்கலிலும் பயணத்திலும் எச்சரிக்கை அவசியம்.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

பண நடமாட்டம் அதிகரிக்கும். உத்தியோகஸ்தர்களுக்குப் பிரமோஷன் உறுதி. கலைத் துறையினருக்கு நல்ல முன்னேற்றம் தெரியும். பொருள் சேர்க்கையோடு புடைவை சேர்க்கை, விருந்து என்று பெண்களுக்கு உற்சாகமயம்தான். வீடு, மனை, நிலம் விஷயங்களில் அளவோடு லாபம் கிடைக்கும். கணவன் - மனைவிக்குள்ள சிறு சிறு கருத்து வேறுபாடுகள் வர்றதுக்குச் சான்ஸ் இருக்கறதால விட்டுக் கொடுக்கத் தயங்காதீங்க.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

அரசாங்க சம்பந்தமான விஷயங்களே உங்களுக்குச் சாதகமா இருக்கும்னா, மத்த விஷயங்களைப் பத்திக் கேட்க வேணுமா என்ன? சும்மா பூந்து ஜமாய்ப்பீங்க. வீடு, மனை, ரியல் எஸ்டேட் விஷயங்களில் ஆதாயமே கிடைக்கும். சட்டம், காவல் துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். வியாபாரிகளுக்குச் செழிப்பான சூழல் உருவாகும். பண நடமாட்டத்திலும் பிரச்னை இருக்காது. ஆனாலும் சிக்கனம் தேவை.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

நல்லவர்களோடு வல்லவர்களின் தொடர்பும் ஏற்படக்கூடிய வாரம். உங்கள் நிர்வாகத் திறமையும் புத்திசாலித்தனமும் பளிச்சினு தெரியும். வீடு, மனை, வாகனாதி விஷயங்களில் ஆதாயம் கிடைக்கும். சிலருக்கு ஃபாரின் டூர் சான்ஸும் வரலாம். சிலருக்குப் பயணத்தால் பலன் கிடைக்கும். வருமானம் பெருகும். இருந்தாலும் பேச்சிலும் செயலிலும் நிதானம் அவசியம். பதற்றம் கூடவே கூடாது. பெண்களுக்கு சாதாரண வாரம் தான்.



# நடக்குமென்பார் நடக்கும்!



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

உங்கள் திட்டங்கள் நிறைவேறும்; உறவினர்கள் உதவுவாங்க. மனசுல உற்சாகமும் தன்னம்பிக்கையும் பொங்கிப் பிரவகிக்கும். பொருளாதார நிலையில் அபிவிருத்தி புலப்படும். ஆனாலும் பணம் கொடுக்கல், வாங்கலில் எச்சரிக்கை தேவை. வெளிநாட்டுச் செய்தி ஏதும் வந்து உங்களை குஷிப்படுத்தினாலும் ஆச்சரியப்படாதீங்க. வியாபாரிகளுக்கு வளமான வாரம்தான். இருந்தாலும் மக்கள் நலனில் கவனம் காட்டுங்க.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்க சாமர்த்தியமும் புத்திசாலித்தனமும் அபாரமா வெளிப்படும். உங்க வசீகரத்தாலேயே சில காரியங்களைச் சுளுவா சாதிச்சிடுவீங்க. பண விஷயத்தில் வளர்ச்சிக்கான சூழ்நிலை உருவாகும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டத்துக்கான சான்ஸும் பிரகாசமாகவே இருக்கு. உத்தியோகஸ்தர்களுக்கு பிரமோஷனோடு டிரான்ஸ்ஃபரும் கிடைக்கலாம். வேலையில்லாதவர்களுக்கு வேலை கிடைக்கலாம்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

உங்க துணிச்சலையும் பராக்கிரமத்தையும் பரிமளிக்கச் செய்யறதுக்கு செவ்வாய் இருக்கு. கவலையேபடாதீங்க. சட்டம், காவல், இயந்திரப் பணிகளில் உள்ளவர்களுக்கு வெற்றிப்பாதையில் உற்சாக நடைபோட சான்ஸ் இருக்கு. வழக்கு விவகாரங்களில் நல்ல திருப்பம் உருவாகும். ஒன்றுக்கு மேற்பட்ட வகைகளில் தன லாபம் கூடும். கூடவே கட்டுக்கடங்காத செலவுகளும் அலைச்சலும், குடும்பத்தில் சிறு சிறு பிரச்னைகளும் வரத்தான் செய்யும்.

**ரிஷப ராசிக்காரரான நாவலாசிரியர் சாரு நிவேதிதாவுக்குப் பொருளாதார ரீதில ஏதோ பெரிய அபிவிருத்தி வரப் போகுதாமே?**



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

எதிர்ப்புகள் மறைந்து எதிரிகளை வெற்றி கொள்வீர்கள். கூடப் பிறந்தவங்களால அனுகூலம் உண்டு. இயந்திரப் பணியாளர்கள், சட்டம், காவல் துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் கூடி வரும். பந்தயங்களில் ஜெயிப்பீங்க. ஆனாலும் புது முதலீடுகள் வேண்டாம். சில பிரச்னைகளும் தலைதூக்கலாம். மனைவியின் உடல் நலத்தில் அக்கறை காட்டுங்க. பெரியவர்கள் அதிருப்திக்குக் கூட ஆளாக நேரிடலாம். பண விஷயத்தில் ரொம்ப எச்சரிக்கையா இருங்க. அரசுப் பணியாளர்கள் விழிப்புடன் செயல்படாவிட்டால் திடீர் ஏமாற்றத்துக்கு ஆளாக நேரிடும்!



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்கள் மதிப்பும் செல்வாக்கும் உயர்ந்து நிற்கும் வாரம் இது. பண நடமாட்டம் தாராளமாவே இருக்கும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டத்துக்கும் சான்ஸ் இருக்கு. குடும்பத்தில் சுபகாரியங்கள் நடக்கறதுக்கான சூழ்நிலை கனிந்து வரும். கலைத் துறையினருக்கு ஜோரான வாரமே. கொடுக்கல், வாங்கல், ஸ்பெகுலேஷனில் லாபமே கிடைக்கும். மகான்களின் ஆசிகளும் கிடைக்கலாம். சிலருக்கு வெளிநாட்டிலிருந்து ஆதாயமோ அல்லது வெளிநாடு போறதுக்கான சான்ஸோ கிடைக்கலாம்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

அரசு சம்பந்தப்பட்ட விஷயங்களில் அனுகூலம் உறுதி. நிர்வாகத் துறையினருக்கு நல்ல வளர்ச்சி தெரியும். கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ் துறையினருக்கு முக்கியஸ்தர்களின் உதவி கிடைக்கும். கலைத்துறையினருக்குப் பொருள் வரவு கூடும். கூடவே செலவும் இருக்கும். எல்லோருமே குடும்ப நலனில் கவனமா இருக்கணும். பயணத்தில் எச்சரிக்கையா இருக்கணும். குறிப்பா இந்த வாரம் டூ வீலர் பயணத்துக்கு ஒரு பெரிய No போட்டுடுங்க.

# 'பண்ணையில் விவசாயம் செய்ய ஆசை' என்கிறாரே ஜெ...?

● எல். மீனாட்சி சுந்தரம்,
திருவண்ணாமலை.

*? பீகார் மாநிலத்தில் பள்ளிக்குச் செல்லும் ஏழைக் குழந்தைகளுக்கு தினசரி ஒரு ரூபாய் கொடுக்கப் போகிறாராமே ராப்ரி தேவி?*

! குழந்தைகளைப் பிச்சைக்காரர்களாக்கும் திட்டம். கண்டனத்துக்குரியது. கொடுக்கப் பட வேண்டியது நல்ல கல்விதான்; பிச்சைக் காசு அல்ல.

● சுகந்தி நாகராஜன், நாகப்பட்டினம்.

*? 'கழகக் கண்மணிகள் யாரும் நெற்றியில் பொட்டு வைக்கக்கூடாது' என்று முதல் நாள் கூறிவிட்டு, மறுநாள் 'தமாஷுக்காகச் சொன்னேன்' என முதல்வர் கூறுவது அவர் பதவிக்கு அழகா?*

! முதல்நாள் சொன்னது காலத்துக்கு ஒவ்வாதது எனினும் அர்த்தமுள்ளது. மறுநாள் மழுப்பல் ஒரே அபத்தம். இது போன்ற விஷயங்களை அவரவர் விருப்பத்துக்கு விட்டு விடுவது உத்தமம்.

● க.தா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

*? மிக மிக மோசமான பிட்சில் பேட் செய்து கொண்டிருக்கிறோம். அதனால், கஷ்டப்பட்டுத்தான் ரன் எடுக்க வேண்டியிருக்கிறது' என்று தங்கள் ஆட்சியைப் பற்றி பிரமோத் மகாஜன் கூறியிருப்பது?*

! அவுட் ஆனாலும் பரவாயில்லை; அழுகுணி அடிக்கப் பார்க்கிறார்களே, அது தான் சகிக்கவில்லை!

● ராசதாசன், தேனி.

*? 'பத்தாம் வகுப்பு படித்த ஒரு மாணவனைத் தமிழில் கடிதம் எழுதச் சொன்னால், தவறின்றி அவனால் எழுத முடியவில்லை...' என்று கல்வி அமைச்சர் அன்பழகன் கூறியிருப்பது பற்றி...?*

! நமது கல்வி ஒப்புதல் வாக்குமூலம். எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் எண்ணிக்கையை உயர்த்துவதில்தான் அரசு ஐம்பது ஆண்டுகளாக கவனம் செலுத்தி வந்துள்ளதே தவிர, 'கல்வி' வழங்குவதில் அல்ல.

● கே.வி. ராமன், சென்னை - 73.

*? கர்நாடக இசைக் கலைஞர் டி.கே. பட்டம்மாளுக்கு பத்மவிபூஷண் வழங்கப்பட்டுள்ளது குறித்து?*

! அதோடு ரொம்ப ரொம்ப கௌரவமிக்க காளிதாஸ் ஸம்மன் விருதும் அவரை வந்தடைந்திருக்கிறது. இசையில் மேன்மை, தூய்மை, ஹ்ருதய பாவம், அழகுணர்ச்சி என்கிற அபூர்வ சேர்க்கை; இவற்றுடன் இசையைக் கற்பிக்கும் அரிய திறன்; தேச பக்திப் பாடல்கள் பாடி சுதந்தர உணர்வை வளர்த்த பெருமை... என்று பல தகுதிகளுக்குக் கிடைக்கும் அலங்காரம்.

● கு. அருணாசலம், தென்காசி.

*? வர இருக்கும் மத்திய பட்ஜெட் மிகக் கடுமையாக இருக்குமாமே?*

! ஒரேயடியாக அடிக்க வேண்டாம் என்று தான் சமையல் கேஸ் விலையை முன்னதாக ஏற்றியிருக்கிறார்கள்; யூரியா விலை உயர்ந்திருக்கிறது; ரேஷன் பொருட்கள் விலை ஏறியுள்ளன. முதலிலேயே அழுந்தச் சூடு போட்டுவிட்டால் அப்புறம் விழுகிற சவுக்கடி அவ்வளவாக பாதிக்காது அல்லவா!

● என். பாலகிருஷ்ணன், மதுரை - 1.

*? 'ஒரிஸ்ஸாவில் ஸ்டெய்ன்ஸ், அவர் மகன்கள் உயிரோடு எரிக்கப்பட்டது காங்கிரசின் திட்டமிட்ட சதி' என்று பா.ஜ. பகிரங்கமாகக் குற்றம் சாட்டுகிறதே?*

! ஒரிஸ்ஸாவில் காங்கிரஸ் ஆட்சி இருப்பது பி.ஜே.பிக்கு சௌகரியமாய்ப் போயிற்று. பழியை அங்கே போட்டு விடலாம்! ஆனால், சங் பரிவார் என்கிற தீவிரவாதக் கூட்டத்துக்கு



• அருமை அறிந்து...



• பன்முகச் சாதனைகள்



• தொலைந்த தொலைக்காட்சி!


• அபத்த மழுப்பல்!


• அழுகுணி முயற்சி!


• ஒப்புதல் வாக்குமூலம்!

என்று சிவசேனா தலைவர் பால் தாக்கரே கூறியிருப்பது பற்றி?

! அவரது இலக்கு கால் அல்ல; தலை!


• பிச்சைக்காரத் திட்டம்!

● பி. காந்தி, மதுரை.

? ரேஷன் அரிசி, சர்க்கரை விலை கடுமையாக உயர்கிறதே?

! மத்திய அரசு நடவடிக்கை இது. தமிழகத்தைப் பொறுத்தவரை விலையுயர்வு மக்களை பாதிக்காதபடி மாநில அரசு கூடுதல் சுமையை ஏற்கும் என்று அறிவித்து விட்டார் முதல்வர். எப்படி யானாலும் அரசாங்கத்துக்குச் செலவு அதிகரிக்கும். அதை வரி உயர்வு ரூபத்தில் மக்கள் ஏற்கத்தான் வேண்டி வரும்.

இவர்கள் இடம் கொடுத்து நாட்டைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி வருவதை உலகே அறியும்.

● நீடா சி. இளஞ்செழியன், சாலியமங்கலம்.

? 25.1.99 அன்று இரவு, தூர்தர்ஷனில் காணாமல் போனவர்கள் அறிவிப்பில் ஜனாதிபதி கே.ஆர். நாராயணனின் புகைப்படத்தைக் காட்டியது குறித்து?

! நாடே பொறுப்பற்ற செயல்களால் காணாமல் போய்க் கொண்டிருக்கிறது என்பதைக் குறிப்பாக உணர்த்தினார்களோ என்னவோ!

● ஆர்.பி. ஜெயச்சந்திரன், திருச்சி - 9.

? 'சந்தடியில்லாமல் பொது வாழ்விலிருந்து மறைந்து, பண்ணையில் விவசாயம் செய்யவே ஆசை' என்று டீ.வி. பேட்டி ஒன்றில் ஜெயலலிதா கூறியுள்ளது பற்றி?

! உடான்ஸ்தான்! காரணம், வழக்குகளுக்குப் பதில் கூறாமல் இப்போதைக்குப் பொது வாழ்விலிருந்து அவரால் விடுபட முடியாது. ஒருவேளை அவருடைய இன்றைய இழுக்கடிக்கும் முயற்சியும் நாளைய மூடி மறைக்கும் திட்டமும் வெற்றி பெற்று விட்டாலோ, மீண்டும் பதவி ஆசை வந்து விடும். அப்புறம் பொதுவாழ்விலிருந்து மறைவது எங்கே?

● அ. ராஜா ரஹ்மான், கம்பம்.

? ஜெயலலிதா, மமதா பானர்ஜி போல வாஜ்பாயின் காலை நான் வாரமாட்டேன்

● பா. அச்சுதன், சென்னை - 5.

? சமீபத்தில் ரசித்து வியந்த புத்தகம்?

! கந்தகானாமுத கீர்த்தனைகள் 72 உள்பட கோடீஸ்வர அய்யர் கீர்த்தனைகளின் தொகுப்பு. மிக கவனமாக ஸ்வரக் குறிப்புகளுடன் தொகுத்துள்ளார் மூத்த வித்வான் எஸ். ராஜம். அவரது கைவண்ணத்தில் ஷோடச கணபதி ஓவியங்கள் வேறு இடம் பெற்று புத்தகத்துக்குச் சிறப்புச் சேர்க்கின்றன. இசை மாணவர்களுக்குக் கிடைத்த அரிய பொக்கிஷம்.

● ஜி. ராமதாஸ், கணபதி அக்ரஹாரம் ❑

? தனி மனிதப் பிரார்த்தனைக்கும் கூட்டுப் பிரார்த்தனைக்கும் தனித் தனிப் பலன்கள் உண்டா?

! தனிமனிதப் பிரார்த்தனையின்போது குவியாத மனங்கள்கூட கூட்டுப் பிரார்த்தனையின்போது அமைதியுற்று குவியக் கூடும். சமன்பட்ட உள்ளங்களிலிருந்து அமைதி பிறருக்கும் பரவ வாய்ப்பு உண்டு என்பதால் காந்திஜி கூட்டுப் பிரார்த்தனைகளை நடத்தி வந்தார். ●

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ஜி. ராமதாஸ்,
5/46, விசித்திரராஜபுரம்,
கணபதி அக்ரஹாரம் அஞ்சல்,
அய்யம்பேட்டை வழி
614 202.

# சைலன்ஸ்... இது ரொமான்டிக் நேரம்!

*மரத்தைச் சுற்றி டூயட் பாடும் 'ரொமான்டிக்' காட்சிகள் சினிமாவில் இப்பவெல்லாம் மலையேறி விட்டது. பார்க்காமல், கேட்காமல், பழகாமல், (நல்லவேளை, பிறக்காமல் இல்லை) காதலித்துக் கொண்டிருக்கிறார்கள். சினிமா ரொமான்ஸ் ஒரு பக்கம் இருக்க, "உண்மையில் உங்களைப் பொறுத்தவரை ரொமான்ஸ் என்பது என்ன?" என்று சில பிரபலங்களைக் கேட்டோம்.*

**புஷ்பா கந்தசாமி (தயாரிப்பாளர்) :**

வாழ்க்கையை இன்பமயமாக ஆக்க ரொமான்ஸால் முடியும். காதல் என்பதி லிருந்து ரொமான்ஸ் என்பது வித்தியாசப் படுகிறது. காதலர் இல்லாமலும் கூட ரொமான்ஸ் ஏற்படலாம். கொஞ்சம் விஷ யங்கள் சேர்ந்ததுதான் ரொமான்ஸ். என் னைப் பொறுத்தவரை காதலிக்கும் திறன் 25%, கலாரசிப்புத்திறன் 25%, கற்பனைத் திறன் 25% நகைச்சுவை உணர்ச்சி 25% என்ற கலவைதான் ரொமான்ஸ்.

ரொமான்டிக்காக இருக்க வேண்டுமா னால் ரசிக்கத் தெரிய வேண்டும். காதணி ஆடும் விதத்தில் கூட, கற்பனைத் திறன் காரண மாக ரொமான்ஸ் வரலாம். கொஞ்சம் அதிகப்படியாக எதையுமே நினைத்துப் பார்க்கும் இயல் பும் இதற்குத் தேவை.

இயற்கை நிச்சயமாக ரொமான்டிக் மூட் வருவதற்கு உதவி செய்யும். ரசிக்கக்கூடிய பொதுவான பொருள் எதுவாக இருந்தாலும் எந்த ஒரு ஜோடிக்கும் ரொமான்ஸ் வரு மென்றே நினைக்கிறேன். என்னைப் பொறுத்தவரை, எந்த விதத்திலும் மிருக உணர்ச்சியைத் தூண்டாத, இலக்கியத்தர மான நல்லதொரு சினிமாவைக் கண வருடன் பார்க்கும் போது இந்த உணர்வு ஏற்பட்டதுண்டு.

• எம்.ஜி. வல்லபன்

**(சுபா) சுரேஷ் :**

இந்தக் கேள்வியை என் மனைவி ஜெயந்தியிடம் கேட்டதற்கு எள்ளலாக சிரித்து அவள் சொன்னது : "கல்யாணம் ஆகி பதினாலு வருஷம் ஆகியும் உங்ககிட்ட என்னால் கண்டுபிடிக்க முடியாத ஒரு விஷயம் அதுதான்."

ரொமான்ஸ் என்பதை 'ஆனந்த உல்லாச மாக' என்று அர்த்தப்படுத்திக் கொண்டு யோசித்தால்...

• சுரேஷ்/பா



நேரத்தைத் துரத்தித் துரத்தி ஒரு நாவலை எழுதி முடித்து முற் றும் என்ற நான்கு எழுத்துக்களைப் பதித்த வுடன் குபீரென்று ஓர் உல்லாசம் நெஞ்சில் பொங்கும். கடல் அலை களில் குழந்தைகளோடு கால் நனைத்து சிலிர்த்து, இரவு அவர்கள் தூங்கும் வரை, அவர்கள் வெகு நாட் களாகக் கேட்கும் கதையைச் சொல்லி மகிழ்த்துவது ஓர் ஆனந்தம். மனைவியுடன் ஆனந் தத்தில் கரையும் தருணங் கள்?

கொடைக்கானல் மலைச்சாரலில், மேகங் கள் தழுவும் முகடு களில் சூரிய வெளிச்சம் தீப்பந்தங்களாய் ஜொலிப்பதைப் பார்த்த நேரத்தில் இருவரும் கைகளை இறுக்கிக் கொண்டிருக்கிறோம். குலுமணாலி போன போது, பனி அடர்ந்த மலைச்சரி வில் வழுக்கி இறங்கிய போது ஆனந்தக்

• கிரேஸி மோகன்





• புஷ்பா கந்தசாமி

கூச்சலிட்டிருக்கிறோம். ஊட்டியில் பார்க்காத நிறத்தில் எல்லாம் பூக்களைப் பார்த்து நெஞ்சு விம்மி ஒருத்தரை ஒருத்தர் மௌனமாகப் பார்த்து மூச்சு மறந்திருக்கிறோம். ஷிவ் குமார் ஷர்மாவின் சந்தூர் இனிமையில் எங்களை இழந்திருக்கிறோம். மகாராஜபுரம் சந்தானத்தின் 'சம்போ ஷிவ சம்போ' ஒலிக்கும் போதெல்லாம் உதடுகள் துடிக்க, இமைகள் நனைய, உருகிக் கிடந்திருக்கிறோம். அண்மையில் ஜேசுதாஸின் கச்சேரிக்குப் போய் வந்த மாலையில் பசி தொலைந்து ஆனந்தம் நிரம்பி நிறைந்திருந்தோம்.

எலும்பு வரை சுண்டி இழுக்கும் இயற்கை, இதயத்தை உருக்கிப் பிழியும் இசை - இரண்டும் எங்கள் இருவருக்கும் பொதுவான அலைவரிசை.

இயற்கையுடன் இயைந்து கிடக்கும் போதும் இசையுடன் ஒன்றிக் கிடக்கும் போதும் - எனக்கு ரொமான்டிக் மூடு இருப்பதாகக் கொள்ளலாம்!

**எம்.ஜி. வல்லபன் (ஆசிரியர், நியூ பிலிமாலயா) :**

ரொமான்ஸ் என்பது ஒருவித உற்சாக மனநிலை - சாதாரணத்திலிருந்து வித்தியாசப்பட்டது.

குளிர் நேரம். இரவு பத்தைத் தாண்டி கடைசி பஸ்ஸை மிஸ் பண்ணி விடுவோமோ என்று எல்லோரும் நடையைக் கட்டிய நேரம். வெதுவெதுப்பான கடல் காற்று கரையைக் குளிரப்படுத்தும் சூழல் கொண்ட கடற் பரப்பு மணல்.

காதிற்குள் மண் புகுந்து விடக் கூடாது என்று விரித்த விரிப்பின் மீது கைகளைத் தலையணையாக்கிப் படுத்துக் கிடக்க - மேகத்திற்குள் மறைந்தும் வெளிப்பட்டும் பூச்சாண்டி காட்டும் பூரண நிலவு.

நிலவு போலவே முகம் மலர்ந்த மனைவி. வீட்டிலிருந்து கொண்டு வந்த தின்பண்டங்களைக் காகிதத் தட்டில் நீட்ட... நீரில் கால் நனைத்து வரப் புறப்பட்ட மகளும் மகனும். எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு கிடைப்பது போன்ற ஒரு தேனிலவுத் தனிமை.

நட்சத்திரக் கும்பலைத் தவிர நம்மை கவனிக்க யாருமே இல்லை என்ற மன நிறைவு. ஓரிரு தசவர்ஷங்கள் ஓடி மறைந்தது போல் உடலில் ஓர் ஆரோக்கியமான உற்சாகப் பெயர்ச்சி... ரொம்பவும் ரொமான்டிக் ஆகி விடுகிறேன்.

ஆடிக் களைத்து, ஈரமும் மண்ணுமாகத் திரும்பும் என் மக்களை விட உற்சாகமாக - அவர்களுக்கு இணையான வயதினனாக எப்படி மாறி விட்டேன்!

**இரேனி மோகன் :**

பழக்கதோஷத்தில் காதலோடு ரொமான்ஸை நாம் இணைத்துப் பார்த்தாலும், ரொமான்ஸ் என்பது உருவத்தோடு சம்பந்தப்படாதது; குணநலன் அல்லது தன்மையோடு சம்பந்தப்பட்டது. கிரிக்கெட் வீரர் ஜி.ஆர். விஸ்வநாத் உருவத்தில் குள்ளம்; நிறத்தில் கருப்பு. இருந்தாலும் அவரிடம் ஆட்டோகிராப் வாங்கவும், அவர் அணிந்த பனியனைப் பெற்று அணியவும் ஒரு பெருங்கூட்டமே அலைந்ததுண்டு. அவர்களில் கணிசமானவர்கள் இளம்பெண்கள்! ஆக இவர்களின் ரொமான்ஸ் என்பது விச்சுவின் விளையாட்டுத் திறமை மீது தானே!

ஷாருக்கான், அர்விந்த்சாமியெல்லாம் ரொமான்டிக் கதாநாயகர்களென்று அவர்களின் புற அழகை மட்டும் கொண்டு மதிப்பிடுவது சரியில்லை. என்னைப் பொறுத்தவரை 'ஜீன்ஸி'ல் ஐஸ்வர்யாவை விட, 'அதிசயம்' பாட்டை எழுதிய வைரமுத்து ரொமான்டிக்காகத் தெரிகிறார். ஐம்பதைத் தாண்டினாலும் தமது எழுத்துகளால் சுஜாதா ரொமான்டிக்கானவர் என்று எண்ண வைக்கிறார்.

மகாபாரதத்தில் கூட அர்ஜுனனை - அவன் பலரைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டதால் 'ரொமான்டிக்' கென்பதுண்டு. ஆனால் எனக்கென்னவோ கட்டுடல் (தொந்தியெல்லாம் கிடையாது), கதை வீசும் சிறந்த ஆற்றல் இவற்றால் பீமனே திரௌபதிக்கு அதிக ரொமான்டிக்கானவனாக இருந்திருப்பான் என்று தோன்றுகிறது.

தொகுப்பு : குல்லூ

# மனிதர் உணர்ந்து கொள்ள...

டிரியன் - அமெரிக்காவில் வளர்ந்து வரும் அழகான சிறுமி. ஆனால் அவளுக்குக் கொஞ்ச நாட்களாகவே குழப்பம். 'ஏன் தன் தோழர்களும், அவர்களின் பெற்றோரும் தன்னைப் பார்த்துக் கிண்டலாகச் சிரிக்கிறார்கள்?'

தன் அம்மாவான பிரபல மாடல் சீடா ஒயிட்டிடம் கேட்டாள். சில நொடிகள் மௌனமாக இருந்து விட்டு, "நீ என்னை அடிக்கடி என்ன கேட்பாய்?" என்றார். "என் அப்பா யாருன்னு கேட்பேன்" என்றாள் சிறுமி பளிச்சென்று.

பிறகு தாய் விளக்கினாள். "இம்ரான்கான் தெரியுமா? பாகிஸ்தானில் இருக்கும் பிரபல கிரிக்கெட் வீரர். அவர்தான் உன் அப்பா."

''அவருக்கு ஏற்கெனவே கல்யாணமாயிடுச்சே. அவருக்கும் பிரிட்டனைச் சேர்ந்த ஜெமிமாவுக்கும் கல்யாணமாகி, ஒரு குழந்தை கூட இருக்குன்னு டி.வியிலே போன வாரம் காட்டினாங்களே.''

சந்தேகத்தை விட, அடிபட்ட சோகம் அந்த பதிலில் அதிகம் இருக்க, மறுநாளே பத்திரிகையாளர் கூட்டமொன்றை ஏற்பாடு செய்த சீடா, இம்ரானுக்கும் தனக்கும் உள்ள உறவை பகிரங்கப்படுத்தினார்.

"என்னம்மா இது, நான் அவருக்கு மகள் இல்லேன்னு அப்பா சொல்றாரே. டி.வியிலே பார்த்தேன்."

டிரியன் அழ, சீடா வழக்குத் தொடர்ந்தார், இம்ரான்கான் மீது.

ஒருவழியாக சீடாவுடன் தனக்குத் தொடர்பு இருந்ததை ஒப்புக் கொண்டாலும், டிரியன் தம் மகள் அல்ல என்று இம்ரான் சாதித்தார். அப்படியானால் 'உயிரணு சோதனைக்கு அவர் உடன்பட்டு இதை நிரூபிக்கட்டும்' என்று சவால் விட்டார் சீடா.

இம்ரான் பின்வாங்கினார். அதற்குப் பதிலாக அடுத்த அமெரிக்க விஜயத்தின்போது சீடாவையும், டிரியனையும் சந்திக்க ஒப்புக் கொண்டார். ஆனால் அவர் எதிர்பார்த்ததை விட சீக்கிரமே அந்தச் சந்தர்ப்பம் வந்து விட்டது.

தான் கட்டிக் கொண்டிருக்கும் புற்று நோய் மருத்துவமனைக்கு நிதி திரட்ட லாஸ் ஏஞ்ஜெல்ஸ் செல்ல வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அங்கு அவர் எவ்வளவோ தயங்கியும் அவரையும், டிரியனையும் ஒரு ஹோட்டல் அறையில் சந்திக்க ஏற்பாடு செய்து விட்டார் சீடா. (இதற்கு நடுவே ஜெமிமா, இம்ரான் மீது கோபம் கொண்டதும், பிறகு டிரியனை இம்ரான் முதன் முதல் சந்திக்கும் போது தானும் உடனிருக்க வேண்டும் என்று கணவரிடம் சத்தியம் வாங்கிக் கொண்டதும், ஆனால் லாஸ் ஏஞ்ஜெல்சுக்குச் செல்ல முடியாதபடி அவர் மீண்டும் கர்ப்பமடைந்ததும் தனிக்கதை).

டிரியனுக்கு நிறைய வருத்தம். 'என்னுடன் தனியாக இருந்தபோது ஏன் அப்பா புன்னகைக்கக் கூட இல்லை? போன பிறந்த நாளன்று வாழ்த்து அட்டை அனுப்பினார். ஓகே. ஆனால் எங்கள் முதல் சந்திப்பின் போது அப்பா கண்ணீர் விடுவாரென்று அம்மா சொன்னார்களே. அப்படி எதுவும் காணோமே. அடுத்த சந்திப்பு எப்போது என்பதை ஏன் அப்பா சொல்லவில்லை?'

கூடவே அவளுக்கு ஒரு குறுகுறுப்பு. 'தன் தம்பி சுல்தான் (ஜெமிமாவின் முதல் மகன்) எப்படி இருப்பான்? தன்னோடு விளையாடுவானா?'

— ஜி.எஸ்.எஸ்.



• இம்ரான்

• சீடா ஒயிட் - மகளுடன்

# இது மனிதக் காதல் இல்ல...!

மனிதர்களைப் போலவே பறவைகளும் காதலிக்கும்; தெரியுமா?

பறவைகளைப் பொறுத்தவரை காதலிக்கத் தொடங்குவது ஆண்தான். முதலில் தான் காதலிக்கவும், கூடு கட்டிக் குடும்பம் நடத்தவும் ஒரு இடத்தைத் தேர்ந்தெடுக்கும். பிறகு, "இது என் இடம்" என்பதைத் தன் சகாக்களுக்கும், எதிரிகளுக்கும் உணர்த்தும் வகையில் தன் மொழியில் உரத்து அறிவிக்கும்.

பாடத் தெரிந்த பறவைகள் தங்கள் குரல் இனிமையைக் காட்டி காதலியை மயக்கப் பார்க்கும். அதுவும், வானம்பாடி இரவெல்லாம் பாடிக் கொண்டே இருக்கும்- அந்தக் குரலில் மயங்கி காதலி தன் இடத்திலிருந்து வெளிப்பட்டு வந்து சேரும் வரை! காக்கையும் கீதமிசைக்கும். நமக்கு எப்படியோ- ஆண் காக்கையின் குரல் பெண் காக்கைக்குக் 'குயிலோசை'தான்.

நம்மூர் அழகிப் போட்டிகளில், அழகிகள் கேட்-வாக் செய்வது போல ஆண் மயில்கள் தோகையை விரித்தவாறு, பெண் மயிலின் முன்னே விதவிதமாக நடந்து காண்பிக்கும்.

Frigats Birds என்ற வகையைச் சேர்ந்த பறவைகளின் கழுத்தில் ஒரு தொய்ந்து போன சிவப்புப் பை உண்டு. காதலியின் முன்னால் இந்தக் கழுத்துப் பையை ஒரு பலூன் போல பெரிதாக்கிக் கொண்டு கவரப் பார்க்கும். கொக்கும், நாரையும் நடந்து காண்பிக்கும். நடை வித்தைகள்- அடடா! ஒரு நாட்டிய நாடகமாகவே தோற்றமளிக்கும்.

காதலி, இந்த சுயம்வரத்தில் தன் மனதுக்கிசைந்த மணாளனைத் தேர்ந்தெடுத்ததும், அந்த ஜோடி தனிக்குடித்தனம் செல்லும்.

செந்நாரைகள் (Flamingo) வருடத்துக்கு ஒருமுறைதான் இனப்பெருக்கத்தில் ஈடுபடும். முட்டை பொரிந்து குஞ்சு வெளியே வரும்போது அவை ஒன்றை ஒன்று காதலுடன் பார்க்கும் பார்வை இருக்கிறதே - டிஸ்கவரி சானலில் ஒருநாள் உங்கள் கண்ணில் படாமலா போய்விடும்!

ஆண் வாத்துக்கள் சின்ன டைவிங், விதவிதமான நீச்சல், இப்படிப்பட்ட தண்ணீர் சாகசங்களைக் காட்டியும் தன் காதலியின் மனதைக் கொள்ளை கொள்ளப் பார்க்கும். காதலியிடமிருந்து பச்சை சிக்னல் கிடைத்தவுடன், இரண்டுமாகச் சேர்ந்து ஒரே சமயத்தில் டூயட் பாடும்.

மரங்கொத்தி போன்ற பறவைகள் மரத்தை விதவிதமான ஒலிகளில் குத்தி தன் இசைத் திறமையை பறைசாற்றிக் கொண்டு, காதல் பிச்சை கேட்கும். சில புத்திசாலிப் பறவைகள் உணவை நீட்டி (லஞ்சம்?) காரியத்தைச் சாதித்துக் கொள்ளும்.

யாதோங்கி பாராத் படத்திலிருந்து "குடும்பப் பாட்டு" என்ற விஷயம் சந்தி சிரிக்கிறது இல்லையா? சில பறவைகளிடம் அது உண்டு. பறவைக் குடும்பத்தில் மூத்த உறுப்பினர்கள் இந்தப் பாட்டை, தங்கள் குடும்பத்தின் ஜூனியர்களுக்கு சொல்லிக் கொடுக்கும்; அவை பெரிதானவுடன் தங்கள் காதல் கட்டத்தில் இதைத் தவறாமல் பயன்படுத்திக் கொள்ளும்!



— அருண் சரண்யா

# ஏதேனும் பெயரிடுங்களேன்...!

சாதாரணமாய்ச்
சந்தித்துக் கொண்டிருந்த
நம் பார்வைக்கு
எப்போது வாய்த்ததிந்த சக்தி?
எந்த நேரத்திலும்
வெளிப்பட்டு விடக் கூடிய
அபாயத்திற்குப் பெயர்தான்
காதலா?

இருட்டைப் பார்க்கும்போதெல்லாம்
உன் நிறமும்
இட்டிலியைப் பார்க்கும்போதெல்லாம்
உன் மனமும்
ஞாபகத்துக்கு வந்து விடுகின்றன.

நீ சென்றபின்னும்
உன் ஜன்னலில் பதிந்த பிம்பம்
என் நெஞ்சில் எப்படி
அப்பிக் கொண்டது?

நீ பேசுகிறபோது
காற்று சிற்பமாகிவிடுகிறது.
அதற்குப் பெயர்
வார்த்தையா?

மாவைக் கோலமாக்கும் உன் விரல்கள்..
காற்றைத் தென்றலாக்கும் உன் சுவாசம்..
தரையை ஓவியமாக்கும் உன் நடை...

எந்தவரியும் முடிவதாயில்லை
உன்னை
எழுதத் தொடங்கினால்!

ஒவ்வொரு நரம்பிலும்
ஊடுருவிப் பாய்ந்துவிட்டு
அமைதியாய் இருக்கும்
அதிசய மின்சாரமே!
மின்விசிறியாய்ச் சுழலும்
என் இதயத்திற்கு
எப்போது ஓய்வு?

தன்மேல் விழும் பிம்பத்தை
ஆள்மறைந்ததும்
அழித்துவிடுகிற கண்ணாடியாய்
ஆகிவிடக்கூடாதா நான்?

புள்ளிவிவரம் மட்டும் சொல்லிவிட்டு
புயல்மையங்கொண்டிருப்பது பற்றிக்
கவலையேபடாத
கம்ப்யூட்டர் மாதிரி
எப்போது வாய்க்கும்
எனக்கொரு மனசு?

நெடுநாள் பூட்டிய வீட்டுக்குத்
திறவுகோல் ஆனவளே!
வார்த்தைகளையெல்லாம் தாண்டி
உன் இதயத்தை நோக்கிப் பயணமானது
என் கவிதை.

— நா.வே. அருள்

# காதல் பாதி; கலகலப்பு மீதி!

— குல்லூ

"கண்ணா, நீங்க இனியும் தள்ளிப் போடுவது சரியில்லே. நாளைக்காவது நம்ம காதல் விவகாரத்தை உங்க அப்பாகிட்டே சொல்லிடுங்க."

"உனக்கென்ன? 'ஓடிப் போயிட லாம்'னு சுலபமாச் சொல்லிட்டே."

"கார் ரேஸிலே கலந்துப்பது ரொம்ப ரிஸ்க். அதனாலே நமக்குக் கல்யாணமானவுடன்..."

"கார் ரேஸிலே கலந்துக்கக் கூடா துன்றியா?"

"ஊஹூம். எக்கச்சக்கமா இன்ஷ் யூர் செய்துக்குங்க, அது போதும்."

"காதலி வேறொருத்தனைக் கல்யா ணம் செய்துக்கிட்டதாலே தாடி வளர்க் கிறானா உன் நண்பன், பாவம்."

"நீ வேறே! அவன் காதலிச்சது டைட்டானிக் கதாநாயகி கேட் வின்ஸ்லெட்டை."

"யாருக்கும் தெரியாம இன்னும் எவ்வளவு நாள் இப்படிச் சந்திப்பது?"

✉ தனியார் வங்கிகளின் சர்வீஸ் சார்ஜ் அதிகம்தான். ஆனால் அவர்களின் வரவேற்பு, இன்முகம், பொறுப்புணர்வு இவற்றை எந்த தேசியமயமாக்கப்பட்ட வங்கி ஊழியர்களிடம் காண முடிகிறது? இதை இந்தியன் வங்கித் தலைவர் தமது வங்கியின் ஏதாவது ஒரு கிளையிலேயே மாறுவேடத்தில் ஒரு சாமான்யனாகச் சென்று பரீட்சித்துப் பார்க்கட்டும்!
மதுரை, வி. பரமசிவம்.

✉ பத்மவாசனின் 'ஜெயித்த கதை' படித்தேன். தமது வாழ்க்கையையே அவர் ஓர் அற்புத ஓவியமாகத் தீட்டிக் கொண்டிருப்பதை நினைத்து அதிசயிக்க வைத்தது!
திருவண்ணாமலை, ஆர். ஆர். சாமி.

✉ கர்ம வீரர் காமராசரின் காரைப் பற்றிய செய்திகள் மனித நேயத்தையும் பெரிய பதவியிலிருந்த

# சிக்ஸர் அடித்த மகிழ்ச்சி!

எளிமையான மனிதரையும் நமக்குப் படம் பிடித்துக் காட்டியது.
மும்பை – 19, ஜான் சாமுவேல்.

✉ கலைஞரின் கிரிக்கெட் ஆர்வத்தினை அவரது கையெழுத்திலேயே படித்ததும் ஏற்பட்ட மகிழ்ச்சி, டெண்டுல்கர் சிக்ஸர் அடித்தால் ஏற்படும் மகிழ்ச்சிக்கு ஈடாக இருந்தது.
நெய்வேலி – 7, எஸ். கண்ணன்.

✉ சிவசேனைத் தலைவர் பால்தாக்கரேயின் அடுத்த அரசியல் முகத்தை அப்பட்டமாக வெளிச்சத்திற்குக் கொண்டு வந்துள்ள தலையங்கத்தை இரு கரம் கூப்பி வரவேற்றுப் பாராட்டுகிறேன்.
பெங்களூர் – 72, ப. மூர்த்தி.

✉ ஹவுஸ்ஃபுல் படத்தைப் பாராட்டுகிற மாதிரி பாராட்டி விட்டு, அடுத்தப் படம் தரமாக அமையும் என்று இறுதி வரியில் கூறி இப்படி டமால் என்று போட்டு உடைத்து விட்டீரே!
அரவக்குறிச்சிப்பட்டி,
எம். அசோக்ராஜா.

✉ டென்ஷனான கிரிக்கெட் டூட்டியை விமர்சித்ததெல்லாம் சரி. அமீர் சோகைல் 197 ரன் அடிக்கலியே! சயீத் அன்வரல்ல அடிச்சாரு! தவறாக அசோக் கும்பத்தின் உதவியாளர் சொன்னதை நீரும் கிரிக்கெட் டென்ஷனில் அப்படியே பிரகரித்து விட்டீராக்கும்!
பூனாம்பாளையம்,
ஆர்.பி. ஜெயச்சந்திரன்.

✉ கடைசிப் பக்கச் செய்தி கண்கலங்க வைத்தது. ஐந்து லட்சம் மரக் கன்றுகளைப் புதிதாக வைக்க வேண்டாம். இருப்பவற்றைக் காப்பாற்றினாலே போதும். அமைச்சர் பொங்கலூர் பழனிசாமி இனி ஸ்டன்ட் அடிக்காமல், இருக்கும் மரங்களை முறையாகக் காப்பாற்ற முயற்சிக்கட்டும்.
சித்தோடு, டி. சந்திரன்.

✉ "பாலத்தில் வெடிக்கும் பிரச்னைகள்" என்ற கட்டுரை படித்தேன். பாலங்களில் சுங்கம் வசூலிப்பதால்தான், போராட்டங்கள் என்பது உண்மைதான். ஆனால், 'ஆணி வேர்' அதுவல்ல. கோவை கடைவீதியில் இருந்து, குறிச்சி தொழிற்பேட்டைக்கு, ஒரு டெம்போ வேன் சரக்குடன் செல்வதாக இருந்தால், செல்லும் போதும் சுங்கம் வசூலிக்கப்படுகிறது. அதே டெம்போ, திரும்பி பத்து நிமிடத்தில் திரும்பி வந்தாலும் சரி, வரும்போது மீண்டும் சுங்கம் செலுத்த வேண்டும். இதற்கு எதிராகத்தான் போராட்டம்.
கோவை – 41, எம். முருகேசன்.

✉ என் குருநாதர் ஸ்ரீ சில்பி அவர்கள் எனக்குப் பெயர் சூட்டி மகிழ்ந்ததில் அடைந்த ஆனந்தம் சரிவரத் தெரிய வேண்டுமென்று இதை எழுதுகிறேன்.

"என் "இதய தெய்வம்" அகிலாண்டேஸ்வரியின் பூரண அருளுடன் நிறைந்த நாள் அமாவாசையான இன்று, நிறைந்த மனத்துடன் "பத்மவாசன்" என்று முடிவாகி இருக்கிறது. புனைபெயரில் உள்ள ஒரு பாதி என் வாழ்வின் துணையாகி இன்று வழிகாட்டும் ஞானியாகி மறைந்தும் வாழும் என் மனைவி "பத்மா". மறுபாதி என் பெயரின் பிற்பகுதி (ஸ்ரீநிவாஸன்). எங்களது ஆசிகள் உன்னோடு நிறைந்திருக்க வேண்டும் என்பதுவே அவள் விருப்பம்" என்று அவரே பெயர் சூட்டினார்.

மேலும் ராமகிருஷ்ணமடத்தில் எனக்கு எல்லாமுமாய் இருந்து முதலில் வாய்ப்பும் உற்சாகமும் அன்பும் தந்து அரவணைத்தவர் சுவாமி ராகவேஷானந்தர் அவர்களாவார்.
சென்னை – 90, பத்மவாசன்.

# ஊராட்சிகளை ஆளும் மீனாட்சிகள்!

மத்தியப்பிரதேச மாநிலம், திகாம்கர் மாவட்டத்தில் உள்ளது 'பிப்ரா' கிராமம். இங்கு ஊராட்சி மன்றத் தலைவியாக இருப்பவர் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த கண்டியாதேவி. துணைத் தலைவராக இருப்பவர், பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒரு பண்ணையார். இந்த ஊராட்சியில், பலவிதங்களில் செயல்பட முடியாத வாறு துணைத் தலைவரால் அவமானப்படுத்தப்பட்டு இருக்கிறார் கண்டியாதேவி. சுதந்தர தினத்தின் போது கண்டியாதேவியைக் கொடியேற்றக் கூட விடாமல் விரட்டியடித்திருக்கிறார்கள். ஆனால் கண்டியாதேவி முடங்கி மூலையில் உட்கார்ந்து விடவில்லை. எதிர்த்துப் போராடுகிறார்.

"எங்களைப் போன்று உள்ளாட்சிகளில் பொறுப்புக்கு வந்திருக்கும் பெண்கள், சில காலம் ஆண்களுக்குப் பின்னே இருந்துதான் செயல்பட வேண்டியிருக்கும். நாங்கள் தன்னம்பிக்கை பெற அவகாசம் தேவை. ஆனால் முதல்படி எடுத்து வைத்துள்ளோம்" என்கிறார் கண்டியாதேவி.

1996 அக்டோபர் மாதம் உள்ளாட்சித் தேர்தல்கள் நடந்த தமிழ்நாட்டில் என்ன நிலை? ஊராட்சிகளில் தேர்ந்தெடுக்கப்பட்டு, 'தலைவி'யாகச் செயல்பட்டு வரும் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த மூன்று பெண்மணிகளைச் சந்தித்து அனுபவத்தைக் கேட்டோம்:

## கணவர் காட்டிய வழியில்...

*டி. தெய்வநாயகி (வாரணவாசி ஊராட்சி, வாலாஜாபாத் ஒன்றியம், காஞ்சிபுரம் மாவட்டம்):*

"பெண் என்பதால் யாரும் என்னை மரியாதைக் குறைவாக நடத்தவில்லை. உரிய மரியாதை தருகிறார்கள். துணைத் தலைவரும் நானும் ஒருங்கிணைந்து செயல்பட்டு வருகிறோம். ஒன்றிய அளவில் நடைபெறும் கூட்டங்களுக்கு நான் தனியாகவே சென்று வருவேன். எங்கள் ஊராட்சிக்கு வருமானம் 1,500 ரூபாய்தான். இதனால் எல்லா வற்றுக்கும் மாவட்ட நிர்வாகத்தை எதிர்பார்த்துச் செயல்பட வேண்டியதாக இருக்கிறது" என்கிறார் ஐந்தாம் வகுப்பு வரை படித்துள்ள தெய்வநாயகி. ஹரிஜனங்களுக்கான தொகுப்பு வீடுகள், தொலைக்காட்சிப் பெட்டி வைப்பதற்கு அறைகள் என்று சாதனைகளைச் சொல்கிறார்.

"பஞ்சாயத்தில் பணம் இல்லாததால் லைட் வசதி செய்ய முடியலீங்க" என்கிறார் வருத்தத்துடன்.

"எங்க கிராமத்தில் எந்தவிதமான ஜாதிப் பூசலும் இடையாது. ஒருவருக்கொருவர் கலந்து பேசி செயல்பட்டு வருவதால் கருத்து வேறுபாடு இடையாது" என்ற தெய்வநாயகியிடம், "நீங்கள் கணவர் சொல்படிதான் செயல்படுகிறீர்களா?" என்று கேட்டோம்.

"கணவர் ஆலோசனைப்படி செயல்படுவதை நான் பெருமையாக நினைக்கிறேன். எங்கள் இருவரின் நோக்கமே ஊர் முன்னேற வேண்டும் என்பதுதானே" என்று முத்தாய்ப்பு வைக்கிறார்.


• இ. மங்கலட்சுமி


• வி.கே. நிர்மலா


• டி. தெய்வநாயகி

## தம்பியின் தயவில்...

*வி.கே. நிர்மலா, (வன்னிவேடு ஊராட்சி வாலாஜாபேட் ஒன்றியம், வேலூர் மாவட்டம்):*

"நம்ம தம்பி கிராம மக்களுக்கு நிறைய செஞ்சுருக்குங்க... ஆனா ஒதுக்கீட்டில் பெண் தலைவி என்று வரவே, என்னை நிக்க வைச்சுட்டான் தம்பி. எல்லாம் என் தம்பிதான்! நான் கையெழுத்துப் போடுவேன். அவ்வளவுதான்" என்று வெளிப்படையாக ஒப்புக் கொள்கிறார் பள்ளி இறுதி வகுப்பு வரை படித்துள்ள நிர்மலா.

தம்பி ராதாகிருஷ்ணன் அ.இ.அ.தி.மு.க.வின் மாவட்டப் பிரதிநிதி.

"காலையிலே கிளம்பிச்சுன்னா, பி.டி.ஓ. ஆபீஸ், எலெக்ட்ரிக் ஆபீஸ், ரேஷன் ஆபீஸ் என்று சுத்திட்டு மூணு மணிக்குதாங்க சாப்பாட்டுக்கு வரும்" என்று தம்பியின் 'டூட்டி'யைச் சொல்கிறார் நிர்மலா.

வாலாஜாபேட்டியிலிருந்து மூன்று கி.மீ. தொலைவில் அமைந்திருக்கிறது வன்னிவேடு. தலித்துகள் பெரும்பான்மையாக உள்ள இந்த ஊராட்சியில், சுற்றுச்சூழல் பெரிய பிரச்னை. தோல் தொழிற்சாலைகளின் கழிவுகளால் விளைநிலங்கள் பாழாகிப் போய்விட, மக்கள் வேறு வழியின்றி தோல் தொழிற்சாலைகளுக்கே வேலைக்குப் போகும் நிலை.

"நாங்க மொத்தமாக குடும்பம் முழுதும் அம்மா கட்சிதாங்க. ஆனால் இப்ப ஊராட்சிக்கு கலைஞர் ஆட்சிலே கொஞ்சம் அதிகாரங்கள் கொடுத்திருக்காங்க. நிதி தாங்க பெரிய பிரச்னை. நாங்க முதலில் கடனோ, உடனோ வாங்கி, வேலைகளைச் செய்வோமுங்க. பின்னாடி கலெக்டர் கொடுத்தா எடுத்துப்போங்க. துணைத் தலைவரால் ஒரு பிரச்னையும் கிடையாதுங்க. ரெண்டு பேரும் சேர்ந்துதாங்க செக்குல கையெழுத்துப் போட்டுப் பணம் எடுக்கணும்" என்கிறார் நிர்மலா.

சுதந்தர நாளிலும், குடியரசு நாளிலும் கொடியேற்றியதைப் பற்றிப் பெருமையாகக் குறிப்பிடுகிறார்.

ஊராட்சிக் கூட்டங்களின்போது தம்பியும் ஒரு ஓரமாக உட்கார்ந்து கொண்டு அக்காவுக்கு ஆலோசனைகள் சொல்லிக் கொண்டிருப்பாராம். "அவன் சொல்ற யோசனைகளை ஊரே ஏத்துக்கும்" என்கிறார், உடல் நிலை காரணமாகத் திருமணம் செய்து கொள்ளாத நிர்மலா.

## மகன் தாய்க்கு ஆற்றும் உதவி

*ஜி. மங்கா லட்சுமி, (கிரம்பாடி, ஆற்காடு ஒன்றியம் வேலூர் மாவட்டம்):*

"எங்க ஜனங்க பெரும்பாலும் கூலி வேலைதாங்க செய்யறாங்க" என்கிறார் மங்கா லட்சுமி. ஊராட்சியின் துணைத் தலைவர் பலராம்நாயுடு. மங்காலட்சுமியின் மகன் சந்திரசேகரன் தி.மு.க. கிளைச் செயலாளர். ஊராட்சித் தலைவர் பொறுப்பு பெண்களுக்காக ஒதுக்கப்படவே, கல்யாணமாகாத சந்திரசேகரன் அம்மாவைத் தேர்தலில் நிற்க வைத்து விட்டார்.

"பஞ்சாயத்துக்கு ஏழாயிரம் ரூபாய் வருமானம் வருகிறது. தெரு விளக்கெல்லாம் போட்டோம். இனறு வெட்ட லோன் சாங்ஷன் ஆகியிருக்கு. தொலைக்காட்சி பெட்டி அறை கட்டறோம். கல்வர்ட் கட்டியிருக்கிறோம்" என்று சொல்கிறார் சந்திரசேகரன். நாம் சென்ற சமயம் அம்மா (தலைவி) மங்கா லட்சுமி செம்பில் பால் கறந்து கொண்டிருந்தார்.

"இங்க பிரிவினையே கிடையாதுங்க! தாயும், பிள்ளையுமா இருக்கோமுங்க. துணைத் தலைவரு ரொம்ப ஒத்துழைப்பா இருக்காருங்க. எந்தக் குறையாக இருந்தாலும் வீட்டிற்கு வந்து சொல்லிடுவாங்க. சரி செஞ்சுடுவோங்க" என்று சொல்கிறார் மங்கா லட்சுமி.

"அம்மா வயசுல பெரியவங்களாக இருப்பதால் இயல்பாகவே மரியாதை கொடுப்பாங்க. பி.டி.ஓ. ஆபீஸ் அங்க இங்கேன்னு நான் அலைஞ்சு காரியத்தை முடிச்சுடுவேன். பி.டி.ஓ ஆபீஸ் மீட்டிங் சமயத்துல பல ஊராட்சிலே இருந்து பெண் தலைவிகள் வருவாங்க. அம்மா அவுங்ககிட்டே பேசி பல விஷயங்கள் தெரிஞ்சுப்பாங்க... யூனியன்லே நம்ம பஞ்சாயத்துக்கு நல்ல பேருங்க" என்கிறார் சந்திரசேகரன். கட்சிப் பின்னணி இருப்பதால் நிறையவே காரியங்கள் சாதிக்க முடிகிறதாம். ●

— ஸ்ரீநிவாசன்

படங்கள் : வெங்கடேஷ்

**எ**ழுபத்தெட்டாவது முறையாகப் பெரு மூச்சு விட்டபோது தோளில் கைவந்து விழுந்தது. கிஷோர் திடுக்கிட்டுத் திரும்பினான்.

அப்பா!

இத்தனை அண்மையில் அவரை அனுபவித்து ஒரு வருடத்துக்கு மேல் ஆகிவிட்டது. அம்மாவின் இறுதிச் சடங்குகள் முடிந்த நாளில், அயர்வும் துக்கமும் சூழ அவர் உட்கார்ந்திருந்தார். அந்தத் தனிமையை அவன் பகிர்ந்த கணத்தில் ஏற்பட்ட அண்மை...

இப்போது தோளில் பதிந்த அவர் கையில் தோழமை ஊற்று சுரப்பதை உணர்ந்தான் கிஷோர்.

'என்னடா...?' என்பது போல் பார்த்தார் அப்பா.

எதிரே மேஜையில் வள்ளியின் கடிதம் விரிந்து கிடந்தது. நான்கு பக்கங்கள்... காகிதத்தின் ஓரம் வரை வீணடிக்காமல் பச்சை மையில் பொடிப் பொடி எழுத்துகள்.

ஏக்கம், தவிப்பு, பிரிவாற்றாமை என்று எதையும் பகிரங்கப்படுத்தாமல் கடந்த வாரச் சம்பவங்களை வெறும் கோர்வையாக வடித்திருக்கிறாள். ஆனால், அதன் நெளிவு சுளிவு களிலெல்லாம் அவள் தாபம் புதைந்து அவஸ்தைப்படுத்துகிறது.

நேற்று முகூர்த்த நாளென்பதால் மெயின் கார்ட் கேட்டில் ஒரே கூட்டம். நிறைய ஜோடிகள். காலேஜில் முதல் வகுப்பு ஆரம்பிக்கும் முன்னரே மீனாக்ஷி தனக்குக் கல்யாணம் என்று பத்திரிகையை நீட்டினாள். அவ்வளவுதான்! மற்ற 57 பெண்களும் 'ஹோ'வென்று குரலெழுப்பி அவளைக் கேலி செய்ய, அவள் முகம் சிவந்ததைப் பார்த்திருக்க வேண்டுமே! அப்படியே தாமரைப்பூதான்!

மாலை அகிலாண்டேசுவரியைப் பார்த்துவிட்டு வீடு திரும்புவோம் என்று திருவானைக்கா போனால், அவன் பாதத்திலும் ஒரு செந்தாமரை! – இந்தப் பாதங்களில் உன் மனச்சுமையை இறக்கி இறக்கி சிரமப்படுத்தாதே என்று மென்மையாய்த் தடுப்பது போல் சிரித்தது!

– சம்பவங்களே உணர்வுகளாகி மைத்துளியில் மீண்டும் உயிர்ப்பெற்று அவனை வதைக்கின்றன.

பேசாமல் அதையெடுத்து அப்பாவிடம் படிக்கக் கொடுத்து விடலாமா என்று தோன்றியது அவனுக்கு. 'அப்பா, நான் வள்ளியை மிகவும் நேசிக்கிறேன். அவளும் என்னை... நாங்கள் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறோம்.' – இப்படியொரு வசனத்தைப் பேசுவதாவது! வெயில் தகிக்கிறது; பனி குளிர்கிறது என்றெல்லாம் விவரிப்பதைப் போன்ற விரயமது. ஆனாலும் அப்பாவிடம் சொல்லியாக வேண்டும். அதற்கான காலம் கனிந்து விட்டது.

"என்னடா! எழுபத்தெட்டாவது தடவையா பெருமூச்சு விடறே...?"

"............"

"கல்யாணம் பண்ணிக்கிறியா...?"

"அப்பா...!"

"எப்போ வைச்சுக்கலாம் கல்யாணத்தை...?"

கடிதத்தின் மீது அவர் பார்வை திரும்பியது.

மூச்சு நின்றுவிடும் போலிருந்தது அவனுக்கு.

'யாரவள்? எத்தனை நாள் பழக்கம்? நட்பில்லை; காதல்தான் என்பதில் உறுதியாய் இருக்கிறீர்களா?' – எதுவும் கேட்கவில்லை.

"பயந்துட்டியா கிஷோர்...?"

"இல்லை..."

"எப்படித் தெரிஞ்சுதுன்னு யோசிக்கிறியா? பாம்பின் கால் பாம்பறியும்!"

அதுவரை பார்வை தாழ்த்தியிருந்தவன் சடாரென்று அப்பாவை நிமிர்ந்து

# அப்பாவின் காதல்



பார்த்தான். அவன் ஆச்சர்யத்தை சுவாரஸ்யத்துடன் ரசித்தார் அவர்.

"இரு. இந்த வெளிச்சம் கண்ணை உறுத்துது" – எழுந்து போய் குழல் விளக்கை அணைத்தார். அவன் மேஜையில் டேபிள் லாம்ப்பை 'ஆன்'செய்ய, அதன் ஒளி வள்ளி யின் கடிதத்தின் மேல் விழுந்தது.

"நீயும் அவளும் தயாராயிருந்தா இந்தக் கல்யாணத்துக்கு நான் இந்த நிமிஷமே தயார்..." – அதைச் சுட்டிக் காட்டி அவர் சொன்னார். "அந்த பச்சை இங்குல லெட்டர் வர்றபோதெல்லாம் நீ படற அவஸ்தையைப் பார்க்கறேனே..."

திரண்டு வந்த உணர்ச்சிகளை விழுங்கிக் கொண்டான்.

"அப்பா..." வேறெதுவும் சொல்ல இயலாமல் அவர் கைகளைப் பற்றினான்.

துக்கத்தில் வெடித்துச் சிதறிவிடும் போல் அவர் முகம் மாறிப் போனதும் கலவரமானான்.

யோக முயற்சியுடன் அவர் சமனமாகிப் பேசினார் :

"உனக்கும் எனக்கும் எவ்வளவு வயசு

**சீதா ரவி**

வித்தியாசம்...?''

''ஏன்பா...?''

''சொல்வேன்...''

''முப்பத்தஞ்சு வருஷம்...''

''நாம ஏன் இவ்வளவு லேட்டா பிறந்தோம்னு நீ யோசிச்சிருக்கியா?''

'நம் அப்பா, அம்மா ஏன் இவ்வளவு தாமதமாக நம்மைப் பெற்றார்கள்?' என்பது பிள்ளைகள் யோசிக்கும் விஷயமா! என்ன ஆயிற்று அப்பாவுக்கு...?' அவன் சற்றுக் குழம்பினான்.

ஆனால், பாட்டி அவன் கன்னத்தை வழித்து திருஷ்டி கழிக்கும்போதெல்லாம் சொல்லுவாள் :

''தவமிருந்து பெத்தாடா உன்னை... ஹாலாஸ்ய மணி!''

குலக்கொழுந்து பிறந்தால், கழனி வாசல் பிள்ளையாருக்குக் கோயில் மணி வாங்கிக் கட்டுவதாகப் பிரார்த்தனை செய்து கொண்டு நிறைவேற்றினாள்.

இதை வள்ளியிடம் சொன்னபோது எத்தனை சிரித்தாள்! 'ஹாலாஸ்ய மணி! ஹாலாஸ்ய மணி!' என்று அன்று முழுதும் அவனைச் சீண்டி...

அப்பா அவனை நேருக்கு நேர் பார்த்துச் சொன்னார் :

''நானும் காதலிச்சிருக்கேன் - உங்கம்மாவை. அதுக்கு முன்னாடி லலிதாவை...''

அவன் அதிர்ச்சியுறக் கூட நேரம் தரவில்லை அவர்.

எதிர்த்த வீட்டுல குடியிருந்த வக்கீல் குமாஸ்தா சிவராமனோட பொண்ணு. கோயில் விக்கிரகம் மாதிரி அழகாயிருப்பான்னெல்லாம் நான் சொல்லலை... எனக்கு அழகா தெரிஞ்சா. தெருவில கோலம் போட வந்தா, நிற்கறதே நேர்த்தியா இருக்கும். எல்லாத்துலயும் ஒரு திருத்தம். கதவைத் திறக்கறதுல, வாளித் தண்ணியை லாகவமா தெளிக்கறதுல, துடைப்பக்கட்டையை ஒரு தட்டு தட்டிப் பெருக்கறதுல, யோசிக்காம கோலம் போடறதுல, அதை நின்னு நின்னு ரசிக்காம திரும்பிப் போயிடறதுல...

''அவளோட பேச சந்தர்ப்பங்களை உருவாக்கிக்கிட்டு எதிர் வீட்டுக்குப் போக ஆரம்பிச்சேன். அவளும் சட்டுன்னு புரிஞ்சுக்கிட்டா...

''உங்களை மாதிரி பக்கம் பக்கமா கடிதம் எழுதிக்கல்லை நாங்க... எதையும் பரிமாறிக்கலை. ஆனா ஊர் சின்னது. மூச்சு விட்டாக் கூட நாலு வீதியிலயும் பரவிப் போயிடும். எங்க விஷயம் அரசல் புரசலா புரிபட்டது சிவராமனுக்கு. பதினஞ்சு நாள்ல டவுன்லயே வீடு பார்த்துக்கிட்டுப் போயிட்டார்.

''நான் விடுவேனா! திருச்சியில கோர்ட்டுக்கே போய் அவரைப் புடிச்சேன் - உடும்பு மாதிரி. சாயங்காலம் அவரோடவே வீட்டுக்குப் போனேன். வராதேன்னும் சொல்ல முடியலை. வான்னும் கூப்பிட முடியலை அவராலே...

''லலிதா! மணி சார் வந்திருக்கார் பாரு. காப்பி கொண்டான்னு சமாளிச்சார். ஆர்வமா ஓடி வந்து பார்ப்பான்னு நினைச்சேன்... அவ சாவதானமா காப்பியை எடுத்துக்கிட்டுத்தான் வந்தா.

''ஜன்னல் திண்ணையிலே அதை வைச்சுட்டு அவ பார்த்த பார்வையிருக்கே! ரொம்ப ரொம்பப் பிடிச்ச ஒருத்தரை முதலும் கடைசியுமா ஒரே ஒரு தடவைதான் பார்க்கலாம்னு விதிச்சா அந்தப் பார்வை எவ்வளவு தீட்சண்யமாயிருக்கும்...? அப்படி, உச்சந்தலையிலேருந்து பாதம் வரைக்கும் ஒரு பார்வை... 'இனிமே வராதீங்க'ன்னுட்டு உள்ளே போயிட்டா.

''எனக்கு எப்படியிருந்திருக்கும்னு கற்பனை பண்ண முடியறதா கிஷோர் உன்னாலே...?''

அப்பா நிறுத்திவிட்டு அந்த தினத்தை மீண்டும் வாழ்ந்து பார்ப்பதாகத் தோன்றியது. சில விநாடிகள் மௌனத்தில் நகர, தெருவில் சோன்பப்டி வண்டியின் மணியோசை.

தெருக்கோடியில் அந்தச் சத்தம் கேட்டாலே வீதிக்கு இறங்கி விடுவாள் அம்மா.

அப்பாவிடமும் அதே ஞாபகங்கள் கிளர்ந்திருக்க வேண்டும். கொஞ்சம் சோர்வுடன் எழுந்தவரைப் பார்த்து, ''படுத்துக்கங்களேன்பா...'' என்றான்.

''உனக்குத் தூக்கம் வருதா? வராதே! வர முடியாது'' என்றவர் ''கொஞ்சம் இரு'' என்று தெருவில் இறங்கிப் போனார்.

வேகமாகச் சுழன்ற குடை ராட்டினம் திடீரென்று திசைமாறிச் சுற்றுகிறது. என்ன கதை இது! அம்மாவையும் அப்பாவையும் கனிந்த காதலர்களாகவல்லவா எண்ணிக் கொண்டிருந்தான். வள்ளியிடம் கூட அவன்

''ஆபீசுல லஞ்சம் தலைவிரித்தாடுதுன்னா அதுக்காக இப்படியா?''

''என்ன சேதி?''

''பிசினஸ் ஹவர்ஸ்னு போடுற மாதிரி பக்கத்திலேயே 'சைடு பிசினஸ் ஹவர்ஸ்'னு எழுதிப் போட்டுருக்காங்க பாருங்க!''

— அம்பை தேவா



சொன்னதுண்டு. ''எங்க அப்பா குடிக்க தண்ணி கேட்டால் கூட அதை அம்மா எடுத்துத் தர்றதுல கொஞ்சம் காதல் தெரியும்...''

''அடடா! அந்தக் காட்சியை நான் பார்க்கணுமே'' என்பாள். அதற்குத்தான் வாய்ப்பே இல்லாமல் போய் விட்டது. இப்போது அப்பா சொல்வதைக் கேட்டால்...

அவர் சொன்னப்படி வாங்கிக் கொண்டு திரும்பியிருந்தார். சமையலறையில் கிண்ணங்கள் தேடிப் போட்டு எடுத்து வந்தார். அவற்றை மேஜை மேல் வைத்துவிட்டு, சட்டைப் பையிலிருந்து ஒரு பழுப்பேறிய காகிதத்தை எடுத்து நீட்டினார்.

''லலிதா எனக்கு எழுதின ஒரே கடிதம்...''

அதை வாங்கக் கூச்சப்பட்டான். அவனைத் தோளில் தட்டிவிட்டுத் தாமே படிக்க ஆரம்பித்தார்.

''அன்பானவரே,

உங்களை வரவேண்டாம் என்று சொன்னதற்குத் தகுந்த காரணம் உண்டு. உங்களுக்கென்று முடிவான முறைப்பெண் காந்திமதி. பத்தொன்பது வருடங்களாக வேறு சிந்தனையின்றி வளர்க்கப்பட்டிருக்கிறாள். பத்தொன்பது மாதங்கள் கூட உங்களை அறியாத எனக்கு உங்களை இழப்பது எத்தனை வலி தருகிறது... அவள் வலி அதிகமாயிருக்கும். அவளை விரும்புங்கள்; விரும்பி மணந்து கொள்ளுங்கள்.

லலிதா.

ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. பெரிய தியாகின்னு நினைப்பு. முறைப் பொண்ணுன்னு பிறந்த மூணாம் மாசத்துல யாரைக் கேட்டு நிச்சயம் பண்றாங்க? எனக்கென்ன நியாயம் கிடைக்குது இதுலன்னு ரொம்பக் கொதிச்சேன்; குமைஞ்சேன். அதுக்கு மேல ஒண்ணும் பண்ண முடியலை. காந்திமதியைத்தான் நான் கட்டிக்கணும்ன்றது குடும்பத்தைப் பொருத்தவரைக்கும் சூரியன் கிழக்கே உதிக்கும்ங்கறமாதிரி ஆதார விதியாயிருந்தது. அதுக்குக் கட்டுப்பட்டேன்றதை விட லலிதாவுக்குக் கட்டுப்பட்டேன்னு சொல்லணும்.

''ஆனா இரண்டு வருஷம் பெருமூச்சுலயேதான் கழிஞ்சது. உங்கம்மா ஒரு தேவதை. எப்படித்தான் என்னை சகிச்சிக்கிட்டாளோ தெரியலை... ஊர் உலகத்துக்குத்தான் நாங்க புருஷன் பெண்டாட்டி. மூணாம் வருஷம் போகிப் பண்டிகை. என் அலமாரியிலிருந்த பழைய துணியையெல்லாம் எடுத்துப் போட்டபோது அவ கையிலே இந்தக் கடிதாக கிடைச்சிருக்கு...''

அப்பா நிறுத்தி கொஞ்சம் நிதானித்துக் கொண்டார்.

''அது எனக்குத் தெரியாது... அன்னிக்கு ராத்திரி எப்பவும் போல கீழே பாயில படுத்தவ, மெள்ள எழுந்து வந்து கட்டில்ல என் பக்கத்துல உட்கார்ந்தா. 'பத்தொன்பது வருஷம் விரும்பினா என்ன, பத்தொன்பது வினாடி விரும்பினா என்ன... இரண்டும் ஒண்ணுதானேங்க. நீங்க லலிதாவைக் கைவிட்டிருக்கக் கூடாது' - இவ்வளவுதான் சொன்னா அவ. நான் காதல்ல மட்டும் தோற்கலைன்றது அப்பத்தான் எனக்கு உரைச்சுது. அவ மடியிலயே முகம் புதைச்சு அழுதேன். எந்த அன்புக்கும் தகுதியில்லாதவனாயிட்டேன்னு புலம்பினேன்.

''உங்கம்மா தைரியசாலி கிஷோர்... படிப்படியா என்னைத் திரும்பவும் மனுஷனாக்கினா, காதலனாக்கினா, கணவனாக்கினா, அப்புறம் அப்பாவும் ஆக்கினா...'' சொல்லி முடிக்கையில் அப்பாவின் கண்கள் நீரைப் பெருக்கிக் கொண்டிருந்தன.

சற்றைக்கெல்லாம் எதுவுமே நடவாதது போல், ''சரி நீ சொல்லு...'' என்று வள்ளியின் கடிதத்தைக் காட்டி அவர் ஆரம்பித்தார்.

''நாளைக்குப் பேசிக்கலாமேப்பா'' என்றான்.

முதலில் அவர் அமைதியாக வேண்டும்.

''பரவாயில்ல, சொல்லு... அவ பேர் என்ன?''

''வள்ளி. திருச்சியில காலேஜ் லெக்சரரா இருக்கா. அவங்க வீட்டுலதான் தகராறு பண்ணுவாங்க போலிருக்கு.''

''நான் போய்ப் பேசறேன். எப்படியானாலும் இன்னும் ஒரு வருஷத்துக்குள்ளே உங்க கல்யாணம்.''

''வேற விவரம் கேட்க மாட்டீங்களாப்பா?''

''என்னடா இருக்கு கேட்க? உனக்கெது நல்லதுன்னு நீயே முடிவு செய்யறாப்பல தானே உன்னை வளர்த்திருக்கேன்... இல்லை, வளர்த்திருக்கோம்...''

அம்மாவின் படத்தைக் கண நேரம் ஏறிட்ட அவர் கண்களில் மீண்டும் சோகம் தோன்றி மறைந்தது. ◯

# குறையொன்றுமில்லை 3

ஸஹஸ்ரநாமத்தின் முதல சுலோகத்தில் ஒன்பது திருநாமங்கள்; 32 அக்ஷரங்கள். இது அனுஷ்டுப் சந்தஸில் அமைந்திருக்கிற அழகை நாம் பார்க்க வேண்டும்.

அனுஷ்டுப் சந்தஸ் என்பது 32 அக்ஷரம் கொண்டது. நரசிம்ஹ மந்திரம் மொத்தமும் அனுஷ்டுப் சந்தஸில் அமைந்திருக்கிறது. ராமாயணம் மொத்தமும் அனுஷ்டுப் சந்தஸில் அமைந்திருக்கிறது.

ஒவ்வொரு சந்தஸுக்கும் ஒரு ஏற்றமுண்டு. அனுஷ்டுப் சந்தஸின் ஏற்றம் என்னவென்றால், அதனால் தேவதைகளுக்கெல்லாம் பரம திருப்தி ஏற்படுகிறதாம்.

அதனால்தான் பிரும்மாவே வந்து வால்மீகியிடம் சொல்கிறார் : "என்னுடைய உயர்ந்த ஆக்ஞையினாலே, என்னுடைய தர்ம பத்னியான சரஸ்வதி உம்முடைய வாக்கிலே இந்த சந்தஸ் வடிவிலே ஓடி வந்திருக்கிறாள்...."

– இது ராமாயணத்திலேயே வருகிறது. அப்படிப்பட்ட உயர்ந்த அனுஷ்டுப் சந்தஸில் அமைந்திருக்கிறது ஸஹஸ்ரநாம முதல் மந்திரம்.

அதிலே ஒன்பது பதங்கள் இருக்கின்றன என்று சொன்னேன். ஒன்பது என்னும் ரூபத்தில் இருக்கும்படியான நரசிம்ஹனை வணங்குகிறேன் என்று சொல்கிறது நரசிம்ஹ மந்திரம். ஆகவே ஸஹஸ்ரநாமத்தின் முதல் ஒன்பது பதங்களும் நரசிம்ஹ வைபவம்; நரசிம்ஹப் பிரபாவம்.

அடுத்து 32 அக்ஷரங்கள் என்று சொன்னேன். அவையும் நரசிம்ஹ வைபவம்.

விச்வம் விஷ்ணு வஷட்கார : – இந்த மூன்று திருநாமங்களிலே எட்டு அக்ஷரங்கள் இருக்கின்றன. இந்த எட்டு அக்ஷரமும் அஷ்டாக்ஷரி என்று சொல்லக்கூடிய உயர்ந்த மூல மந்திரம்.

மந்த்ராய மகதே நம : என்று மந்திரத்தையே தியானம் பண்ணுகிறார் சுவாமி தேசிகன்.

இது உயர்ந்த மந்திரம் என்பதை நாம் எப்படித் தெரிந்து கொள்ளலாம் என்றால், நம் பாரத தேசத்திலேயே உயர்ந்த ஸ்தானத்திலே உபதேசிக்கப்பட்ட மந்திரம் இது.

பத்ரிகாசிரம க்ஷேத்திரத்திலே, உத்தமமான ஸ்தானத்திலே நர–நாராயண அவதாரம் பண்ணி பரமாத்மா உபதேசித்த மந்திரம். ஆகையினால் இந்த மந்திரத்துக்கு ஈடுஇணையே இல்லை.

இந்த அஷ்டாக்ஷரி மந்திரத்தைப் பதம் பதமாக விவரித்தால் உபநிஷத்தையே அது எடுத்துச் சொல்கிறது. இதை ஆசார்யரிடத்திலே உபதேசம் பெற்று நித்யம் ஜபித்தால் விசேஷமான பலனைக் கொடுக்கும்.

இது வியாபக மந்திரம் என்று சொல்லப்படுகிறது. எங்கும் இருக்கிறான் பரமாத்மா; அவன்தான் சர்வதா ரக்ஷகன், எங்கும் ரக்ஷகன், எப்போதும் ரக்ஷகன் என்பதைக் காட்டக்கூடிய மந்திரம் இதுதான்.

உயர்ந்த மந்திர சாஸ்திரத்தில், பிரணவத்தை தாரம் என்று சொல்லுவார்கள். பிரணவத்துக்கே நிறைய பெயருண்டு. அதிலே தாரம் என்பது முக்கியமான பெயர். இந்த சம்சார பந்தத்திலிருந்து நம்மை விடுவித்து, முக்தனாக்கி நம்மை தரிக்கப் பண்ணக்கூடிய மந்திரம் தாரம் – அதாவது ஓம்காரம்.

தாரம் என்று சொன்னாலே அதற்கு சந்தோஷமாம் – பிரணவத்துக்கு சந்தோஷம்!

ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு விதமான பெயரால் கூப்பிட்டால்தான் சந்தோஷப்படுவார்கள். பகவானுக்கே நாராயணா என்று கூப்பிடுவதைக் காட்டிலும்

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

கோவிந்தா என்று கூப்பிட்டால்தான் சந்தோஷமாம். ஏனென்றால் ஆய்ச்சியரோடு சாமானியமாய் இந்த லோகத்திலே அவன் சஞ்சாரம் பண்ணியபோது ஏற்பட்ட பெயர் அது. எல்லோருடனும் கலந்து பழக வேண்டும் என்ற நிலையிலே வந்த நாமா இருக்கிறது பாருங்கள் - கோவிந்த நாமா - அதைச் சொல்கிறபோதுதான் அவனுக்குப் பரம ஆனந்தம். அதனால்தான் திருமலையிலே அந்தத் திருவேங்கடமுடையானை சேவிக்க ஏறுகிறவர்களெல்லாம் 'கோவிந்தா கோவிந்தா' என்கிறார்கள். 'நாராயணா' என்று சொல்வதில்லை. பகவானுக்கு ரொம்ப திருப்தி அந்தத் திருநாமத்திலே என்கிறதாலே சந்தோஷமாகத் திரும்பிப் பார்க்கிறானாம். 'கோவிந்தா என்று கூப்பிட்டுவிட்டானே; நம்மை அவனுக்குத் தெரிகிறதே' என்று திரும்பிப் பார்க்கிறானாம். அப்படியொரு நாட்டம் பகவானுக்கு- எளிமையிலே.



## அருள்வாக்கு



எல்லாவற்றுக்கும் ஒரு குறுக்கு வழி இருக்கிறதே, அந்த மாதிரி ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுவதற்கு short-cut இல்லையா?

ஒன்றே ஒன்று இருக்கிற மாதிரி பகவானே சொல்லியிருக்கிறார். 'ஒருத்தன் செத்துப் போகிற ஸமயத்தில் எதை நினைத்துக் கொண்டு உடலை விடுகிறானோ, அதையே மறு ஜன்மாவில் அடைகிறான். என்னையே ஸ்மரித்துக் கொண்டு எவன் சரீரத்தை விடுகிறானோ, அவன் என்னை அடைந்து விடுகிறான்' என்று சொல்லி "நாஸ்தி அத்ர ஸம்சய:" – "இதில் ஸந்தேஹமே இல்லை" என்று 'காரண்டி' கொடுத்திருக்கிறார்!

'ரொம்ப ஸுலபமான வழியாக இருக்கே; வாழ்க்கை முழுக்க எப்படிக் குட்டிச்சுவராக நடத்தினாலும் அந்திம ஸமயத்தில் மட்டும், பகவானை நினைத்துக் கொண்டால் போதுமாமே! அதனாலேயே இந்த ஜனன-மரணச் சக்ரத்திலிருந்து தப்பித்துக் கொண்டு விட முடியுமாமே!' என்று தோன்றுகிறது.

ஆனால் பகவான் இங்கே 'பொடி' வைத்துப் பேசுகிறார். 'கடைசிக் காலத்தில் என்னை நினைத்துக் கொண்டு என்பதற்கு 'அந்தகாலே மாம் ஸ்மரன்' என்று சொன்னால் போதும். ஆனால் பகவான் அப்படிச்

ஆகையினாலே, இங்கே கூட, உயர்ந்த பிரணவத்தை 'தாரம்' என்று சொன்னால் அது சந்தோஷப்படுகிறதாம். அந்த நாமமே சந்தோஷப்படுகிறது; அந்தப் பெயரே சந்தோஷப்படுகிறது; அந்த அக்ஷரமே சந்தோஷப்படுகிறது! ஒரு அக்ஷரம் கொண்ட பிரணவத்துக்கு த்ருவம், ஏகாக்ஷரம் பிரும்மம் என்றெல்லாம் பெயர்.

த்ருவம் – த்ருவ சப்தத்தினாலே என்ன சொல்லப்படுகிறது என்றால், அழியாதது என்பது சொல்லப்படுகிறது. என்றும் நிலைத்திருக்கக்கூடியது.

ஆதியிலே அந்தப் பரபிரும்மத்தினுடைய கண்டத்திலிருந்து இரண்டு சப்தங்கள் உலகில் முதல் முதலாக உண்டாயின : ஓம் காரம்; அத சப்தம். இவையிரண்டும் பிரும்மத்தின் கண்டத்திலிருந்து ஓடி வந்ததாம். இந்த இரண்டும் மங்கள சப்தங்கள். ஓம்காரத்துக்கு என்னென்ன சிறப்பெல்லாம் உண்டோ அத்தனையும் அத சப்தத்துக்கும் உண்டு.

பிரும்ம சூத்திரமே அத சப்தத்தில்தான் ஆரம்பிக்கிறது. அத என்றால் பிறகு. அதற்குப் பிறகு என்று அர்த்தம்.

கர்ம விசாரத்துக்குப் பிறகு மங்களமான பிரும்ம விசாரம் என்பதைத்தான் அத சப்தம் காட்டுகிறது.

ஆகையினாலே, ஓம்காரமும் அத சப்தமும் மங்களகரமான சப்தங்கள்.

அதே போல் நம : என்ற சப்தம் இருக்கிறதே, அதற்கும் ஏற்றம் உண்டு.

பிரணவம், நாராயண நாமம், நம : என்ற மூன்று சேர்ந்தவுடனே அந்த நாமம் மந்திரமாக மாறிவிடுகிறது. – அஷ்டாக்ஷர மந்திரம்.

விச்வம் விஷ்ணு வஷட்கார : என்பது இந்த அஷ்டாக்ஷர மந்திரத்தினுடைய பெருமையைக் காட்டுவதே ஆகும்.

அதற்கடுத்து பூத – பவ்யபவத்பிரபு : என்கிற திருநாமம். இதிலே எட்டு அக்ஷரங்கள் இருக்கின்றன. முதல் எட்டையும் இந்த எட்டையும் கூட்டினோமானால் பதினாறு. இந்தப் பதினாறு அக்ஷரங்களும் என்ன காட்டுகின்றன? 16 ரிக்குகளைக் காட்டுகின்றன – ரிக்குகள் என்றால் மந்திரங்கள். அதாவது பதினாறு மந்திரங்களைக் கொண்ட புருஷ சூக்தத்தைக் காட்டுகின்றன.

புருஷ சப்தத்தினாலே சொல்லப்படக் கூடியவன் விஷ்ணு. விஷ்ணுவினுடைய பெருமையைக் காட்டவந்த சூக்தம்.

புரு என்றால் பகு – நிறைய கொடுக்கிறவன். கொள்ள மானா இன்பவெள்ளம். எடுக்க எடுக்கக் குறைவில்லாதவன்.

ஆகையினாலே சஹஸ்ரநாமத்தின் முதல் பதினாறு அக்ஷரங்களில் புருஷ சூக்தத்தின் ஒவ்வொரு மந்திரமும் இருக்கிறது.

அடுத்தது பூதக்ருத் – பூதப்ருத் – பாவ: அதை எடுத்துக் கொண்டோமானால் இன்னும் ஒரு எட்டு அக்ஷரம் சேர்கிறது. காயத்ரி மந்திரத்தினுடைய பெருமையை இது மொத்தம் சொல்கிறது.

யார் சொல்கிறார்களோ அவர்களை ரக்ஷிக்கக்கூடிய மந்திரம் காயத்ரி. அதைச்

சொல்லவில்லை. 'அந்த காலே ச மாம் ஏவ ஸ்மரன்' என்று ஒரு 'ச'வும் 'ஏவ'வும் போட்டு ஸம்ஸார நிவ்ருத்தி இத்தனை ஸுலபமில் லையப்பா என்று ஆக்கி விட்டார். இந்த 'ச'வுக்கும் 'ஏவ'வுக்கும் என்ன அர்த்தம்? 'அந்த காலே 'ச' என்றால் 'சாகிற ஸமயத்திலும்' என்று அர்த்தம். 'மாம் ஏவ' என்றால் 'என்னை' என்று மட்டும் அர்த்தமில்லை; 'என்னை மட்டுமே' என்று அர்த்தம்.

அவரை மட்டுமே அந்தியத்திலும் 'ஸ்டெடி' யாக ஸ்மரிக்க வேண்டும். அப்போதுதான் மோக்ஷம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

சொல்லாமல் ஆயிரம் மந்திரங்களைச் சொல்லிப் பயனில்லை. நரசிம்ஹ மந்திரம் உயர்ந்ததுதான். ஆனால் அதைச் சொல்கிற ஒருத்தர் காயத்ரியே சொல்வதில்லை என்றால், மாலோலன் நரசிம்ஹன் திரும்பிப் பார்ப்பானா...? பார்க்க மாட்டான். ஆகை யினாலே காயத்ரியைப் பண்ணாவிட்டால் மற்ற கர்மாவைப் பண்ணுகிற யோக்யதை நமக்குக் கிடையாது.

அம்மாவைக் காட்டிலும் தெய்வ மில்லை; காயத்ரி மந்திரத்தைக் காட்டிலும் மந்திரமில்லை.

அப்படி காயத்ரி மந்திரத்தினுடைய பெருமை அடுத்த எட்டு அக்ஷரங்களைச் சேர்த்துக் கொண்டால் தெரியக்கூடியது.

அதற்கப்புறம் வரக்கூடிய பூதாத்மா பூத பாவன: என்ற எட்டு அக்ஷரங்களையும் சேர்த்துக் கொண்டால் 32 அக்ஷரங்கள் ஆகும். இது நரசிம்ஹ மந்திரம். மந்திர ராஜம் என்றே நரசிம்ஹ மந்திரத்துக்குப் பெயர். மந்திரங்களுக்குள்ளே ராஜா அந்த மந்திரம்! அதன் பெருமையைக் காட்டுகின் றன சஹஸ்ரநாமத்தின் முதல் 32 அக்ஷரங்களும்.

இப்படி முதல் சுலோகத்தை எடுத்துக் கொண்டால், ஒன்பது திருநாமங்கள் கொண்டது. அஷ்டாக்ஷரி, புருஷ சூக்தம், பிரத்யேகமாக காயத்ரி மந்திரம், நரசிம்ஹ மந்திரம். இத்தனையும் சேர்ந்து கம்பீரமாக இருக்கிறது. வெளியில் பார்த்தால் திருநாமங் கள். உள்ளே பார்த்தால், அத்தனை மந்திரங் களும் அடங்கியிருக்கின்றன! அதனால் தான் ஆசார்ய புருஷர்களெல்லாம் இதிலே விசேஷமாக ஈடுபட்டு விளக்கிக் காட்டு கிறார்கள்.

நாரதர் எதிலிருந்து உபதேசம் பண்ணு கிறார் என்று பார்த்தால் சஹஸ்ரநாமத்தி லிருந்துதான் பண்ணுகிறார். பிரும்மாண்ட புராணம் என்று எல்லா புராணங்களிலும் முதல் புராணம். அதிலே நாரத மஹரிஷி விசேஷமாக உபதேசம் பண்ணுகிறார்.

**வஷட்** என்கிற சப்தத்தினாலே சொல் லப்படக்கூடிய வஜ்ராயுதம் போன்ற பக வானை தியானம் பண்ணுங்கள் என்கிறார். எங்கிருந்து வந்தது இந்த உபதேசம் என்று பார்த்தால் சஹஸ்ரநாமத்திலேயிருந்துதான்.

இதே நாம் பார்த்தோமானால், உதக சாந்தி மந்திரத்திலே வரும் :

பூத காலம் பவ்யம் பவிஷ்யது என்று... மூன்று காலங்களின் ஸ்வரூபியாக அவன் இருக்கிறான் என்று அர்த்தம்.

அச்வமேத மஹா மந்திரத்திலேயும் வருகிறது:

பூதம் பவ்யம் பவிஷ்யத் வஷட்ஸ்வாஹ

– ஆகவே, வேத பாராயணம் பண்ணி னால் என்ன பலன் கிடைக்கிறதோ, அதே பலன் சஹஸ்ரநாம பாராயணம் மூலமாக நமக்குக் கிடைக்கும்.

(தொடரும்)



**"என்னங்க... நீங்க நாளைக்கு லீவு போட்டுக்கலாம், இன்னைக்கு ஆபீசுக்குக் கிளம்புங்க."**

**"ஏன் அப்படிச் சொல்றே?"**

**"இன்னைக்கு எனக்கு உள்ளங்கை அரிக்குதுங்க! நிறைய சம்திங் கிடைக் கும்!"**

**– சீர்காழி. வி. ரேவதி**

# பிரார்த்தனை

பூபதிக்கு மனம் நிறையப் பிரார்த்தனைகள். வழியில் தென்பட்ட கோவில், மசூதி, தேவாலயம் எல்லாம் பார்த்து, புத்தி போட்டுக் கொண்டான். பிரார்த்தனையின் பிரதான நோக்கம், ராகவன் கையில் மாட்டிக் கொள்ளக் கூடாது. எப்படியோ தனக்கென்று இதுபோன்ற பிரச்னைகள் வந்து விடுகின்றன. தன்னை எல்லாரும் தவறாகவே புரிந்து கொள்கிறார்கள்.

ராகவன் அவ்வளவு மோசமில்லை. ஆனால் அவனிடம் போயிருக்கும் வதந்தி அப்படிப்பட்டது. கோபம் தலைக்கேறி, 'விட்டேனே பார்' என்று வீர சபதம் மேற்கொண்டிருப்பதாகப் பழனி சொன்னான்.

பழனியை அவ்வளவு தூரம் நம்ப முடியாவிட்டாலும், நம்பாமலும் இருக்க முடியவில்லை. அதற்குத்தான் இத்தனை கடவுளர்களின் கருணையும் சிபாரிசும் தேவைப்படுகிறது. பிரார்த்தனைகள் பலிக்குமென்பது ஜெபராஜ் சாரின் போதனை. இன்றளவும் பூபதி அதை நம்பினான். பலமுறை பலித்திருக்கிறது. இன்று எப்படியோ?

எல்லாம் இந்த ஆனந்தியால் வந்தது. நேற்று ரொம்ப காரியமாய் வீட்டுக்கு வாவென்று இழுத்துப் போய்விட்டாள். கூப்பிட்ட பின்னால் எப்படிப் போகாமல் இருக்க முடியும்?

பூபதி போவதைப் பார்த்தவன் பழனி. அவனே கோள் சொல்லியிருக்கக்கூடும். 'ஆனந்திக்கு பூபதி பிராக்கட் போடறான்' பூபதிக்கு பக்கென்றிருந்தது. அப்பா காதில் விழுந்தால் தோலை உரித்து விடும் சகல சாத்தியங்களும் உண்டு.

அதைவிட, வெகுண்டிருப்பவன் ராகவன்.

''அனாவசியமா என் லைன்ல கிராஸ் பண்றான். சொல்லி வை. மவனே, வெட்டிடுவேன்''

பழனி, கொஞ்சம் அபிநயங்களோடு ராகவனின் மிரட்டலை ஒலிபரப்பி விட்டுச் சென்றான்.

இனி தாமதிப்பதில் பயனில்லை. பயப்படுவதிலும் அர்த்தமில்லை. ராகவனிடமே பேசி விட வேண்டியதுதான். ஆனந்திக்கும் எனக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. உன் லைனை நான் என்றுமே மறிக்க மாட்டேன். இது உத்தரவாதம்.

இதிலும் நிறைய ஆனால்கள் உண்டு. அவன் அதை நம்ப வேண்டும். நம்பின பின் சும்மாயிருப்பானா? ஒத்துழைப்பு கோரினாலும் கோரலாம். முடிந்தவரை ஒதுங்கியிருந்து பார்ப்பது. ஆனால் இந்த ஆனந்தி கடங்காரி சும்மாயிருக்க மாட்டாளே?

''என்ன தனியா உக்காந்திருக்கீக? கதைக்க நண்பர்களில்லையோ?'' என்று சுலபமாய்ப் பக்கத்து இருக்கையை ஆக்ரமித்துக் கொள்வாள். இலங்கைத் தமிழ் அசத்தும். லயம் சுவைக்கும். நெற்றி மேட்டில் அடங்க மறுத்து வீறுகொள்ளும் வளைவளையான கேசம். உற்சாகம். துள்ளல்.

தெரியாத்தனமாய் இன்டர்ஸ்கூல் போட்டியில் கவிதை வாசித்து விட, ஏற்பட்ட நட்பு. பூபதிக்குக் குஷிதான். பின்னர் இரண்டு முறை அவள் வீட்டுக்குப் போனதும், அவள் அப்பா நிதானமாகப் பழங்கதைகள் பேச, மிரண்டு போய், வீடு போனதும் சரித்திரம்.

இது நடுவே, ராகவன்.

''ஆனந்தி, கனடா போறாளாமேடா. உனக்குத் தெரியும்?''

இரண்டாவது பீரியட் ஆரம்பத்தில் ராகவன், பூபதியிடம் வந்து நின்றான்.

''கனடாவா? எனக்குத் தெரியாதே?'' என்றான் பூபதி.

''பொய் சொல்லாதே. வீணா என் வாழ்க்



''சரி, விடு. அவ கனடா போறது உண்மையான்னு செக் பண்ணிச் சொல்லு. என்னா? கூடவே, அப்பப்போ என்னைப் பத்தி சொல்லி வை.''

கனடாவா. அது எங்கே இருக்கிறது? பெயர் கேள்விப் பட்டது போல்தான் இருக்கிறது. நேற்று போன போது கூட ஒன்றும் சொல்ல வில்லையே? இரண்டு அண்ணாக்கள் உண்டு என்பது மட்டும் தெரியும். வெளி நாடுகளில் இருப்

ஆர். வெங்கடேஷ்

பதாகச் சொல்வார், அவள் அப்பா. அங்கே தான் போகிறார்களோ?

வந்து, ஒன்றரை வருடம் தான் ஆகிறது. +1ல் வந்து சேர்ந்தாள். அதுவும் ஆகஸ்டிலோ, செப்டம்பரிலோ. இப்போது அடுத்த ஆகஸ்ட், +2. அப்போ படிப்பு என்னாகும்? பூபதிக்கு ரொம்பக் கவலையாக இருந்தது.

அதைவிட, ஆனந்தியின் இயல்பான நட்பு? சட்டென ஆனந்தி இல்லாத ஒரு வகுப்பு கற்பனையில் தோன்றியது. நினைக்கவே முடியவில்லை.

கையோட வெளையாடாதே. நான் ஏற்கெனவே உன்னை வார்ன் பண்ணியிருக்கேன்.''

"சத்தியமா ராகவா! எனக்கு ஒண்ணுமே தெரியாது!''

"நேத்து என்னத்துக்கு அவ வீட்டுக்குப் போன?''

"அவதான்டா கூப்பிட்டா.''

"கூப்பிட்டா போயிடறதா?''

''சாரிடா!''

**ரா**கவன் தன் நோட்டெல்லாம் அவளையே வரைந்து வைத்திருக்கிறான்.

தத்ரூபமாய். ஒவ்வொரு கோணமும் அவன் பார்வையில் திட்டப்பட்டிருக்கும். அவன் ஓவியங்களிலேயே, மிகப் பிடித்தது ஆனந்தியும், ஜன்னலும். ஆனந்தியின் பக்கவாட்டு யோசனை முகம். கூடவே ஒரு பகுதி ஜன்னல். ஜன்னல் கம்பிகளில் எட்டிப் பார்க்கும் மரக்கிளைகள். பளிச்சென சோகம் தெரியும்.

இன்னும் பல படங்களில், பூபதி சோகத்தைப் பார்த்திருக்கிறான். ராகவனுக்கு வரையத் தெரியவில்லை என்று சொல்ல முடியாது. ஆனந்தி அப்படித்தான் பல சமயங்களில் இருப்பாள்.

அவள் உற்சாகமாகப் பழகுவது கூட, தன்னையே உற்சாகப்படுத்திக் கொள்ளத்தானோ என்று கூட பூபதிக்குத் தோன்றும். கேட்டால், மழுப்பி விடுவாள். எப்போதாவது தோன்றினால், யாழ்ப்பாண வீடு பற்றியும், வசதிகள் பற்றியும் சின்ன துக்கம் இழையோட விவரிப்பாள். எல்லாவற்றின் முடிவிலும் இனி ஒன்றுமில்லையென்பது போல் ஒரு பெருமூச்சே முற்றுப் புள்ளியாயிருக்கும்.

இதெல்லாம்தான் ஏதோ ஒருவகையில் பூபதியை ஈர்த்தது.

இயல்பான கௌரவமும் மிடுக்கும் கலந்தவர் அவள் அம்மா. டீச்சராக இருந்தவர். அந்த இரண்டு அறைகளுக்குள்ளேயே டியூஷன் சொல்லிக் கொடுத்தார். ஏதோ டுடோரியல் காலேஜில், ஆனந்தியின் அப்பா விஞ்ஞானம் போதித்தார்.

வறுமையில்லையெனினும், வழக்கமான வாழ்க்கையில்லையென்பது மட்டும் தெளிவாகத் தெரிந்தது.

"நீ ஆனந்தியோட பேசினதேயில்லையாடா?" என்றான் பூபதி.

இல்லையென்பது போல் தலையாட்டினான் ராகவன். பூபதிக்கு ஆச்சரியமாக இருந்தது.

"உண்மையாவா?"

"பேசினதேயில்லைடா. ரொம்ப ட்ரை பண்ணியிருக்கேன். என்னைப் பார்த்தாலே, அவள் ஒரு மாதிரி ஒதுங்கிப் போயிடறாடா."

இது புதுச் செய்தி. எல்லாருடனும் பழகும் ஆனந்தி, ராகவனை மட்டும் விலக்குவதேன்?

"நான் எவ்வளவு கிரீட்டிங்ஸ் அனுப்பிச்சிருக்கேன் தெரியுமா? ஒண்ணுக்குக் கூட பதிலே இல்லடா. என்னென்னே புரியலை. உண்டு இல்லைன்னு வாயத்தெறந்தாவது சொல்லலாமில்ல?"

அவன் முகமெங்கும் துக்கம். ராகவனை பூபதி இப்படிப் பார்த்ததில்லை. ஒரு மாதிரி வீரன் போல் நடை. பேச்சு. அவன் இவ்வளவு துவளுவான் என்பது ஆச்சரியம்.

"அவ கனடா போறது கன்பர்ம் ஆயிடுச்சிடா. மோகனா சொன்னா! அதுக்குள்ள நான் எப்படியாவது அவகிட்ட பேசணும்டா."

"என்னடா சொல்லுவ?"

"என்ன சொல்றது? மனச தெறந்து காட்ட வேண்டியதுதான்."

"என்ன ரொம்ப சீரியஸா இருக்கியாடா?"

"கண்டிப்பா. அப்சொல்யூட் சீரியஸ்னஸோடதான் பேசறேன். இனி நான் வேற யாரையும் நினைக்க மாட்டேன். எனக்கு ஆனந்திதான்."

"அவ வெளிநாடு போறாடா... எப்படிடா..."

"அதெல்லாம் அப்புறம் பாத்துக்கலாம். முதல்ல, என் மனசுல இருக்கறதைச் சொல்லணும். இதுதான் கடைசி சான்ஸ். அவ ஏத்துக்கறா, ஏத்துக்கலை... ஏத்துக்குவா, கண்டிப்பா ஏத்துக்குவா. நீ மொதல்ல, அவகிட்ட பேச மட்டும் ஏற்பாடு பண்ணேன் போதும்."

ராகவன் சொல்லிவிட்டானே தவிர, ஏற்பாடு செய்வது என்பது எவ்வளவு பெரிய வேலை என்பது அப்புறம்தான் புரிந்தது.

என்ன சொல்லி ஆனந்தியைக் கூப்பிடுவது? ராகவன் பேச வேண்டுமென்றா? வரமாட்டேன் என்று விட்டால்? மேலும் தன்னைப் பற்றி என்ன நினைத்துக் கொள்வாள்?

இது நடுவே, ஆனந்தி கிளம்பப் போவதை ஒருநாள் சொன்னாள். குடும்பமே கனடா போகப்போகிறது. கூடவே, ராகவனும் அவசரப்படுத்தினான். அவனை நேராகப் பார்க்கவே முடியவில்லை. நாளுக்கு நாள் அவனது தவிப்பு பெருகியது.

***"அந்த ஓட்டல்காரர் விளம்பரப் பிரியர்..."***

***"சரி, அதுக்காக இட்லிக்கு சட்னி இலவசம், பூரிக்கு கிழங்கு இலவசம், புரோட்டாவுக்குக் குருமா இலவசம்னு ஓட்டல் வெளியே போர்டு வைக்கணுமா?"***

***– மலர் சூர்யா***



வழக்கம்போல் வாய்ப்பு திடீரென வந்தது. என்னவோ இண்டர்ஸ்கூல் போட்டியென்று, பூபதியும் ஆனந்தியும் தமிழுக்குப் போக, ராகவன் ஆங்கிலத்தில் பேச வந்தான்.

ரஷ்யக் கலாசார மையம். மதிய வெயில். இனி கிளம்ப வேண்டியதுதான். ஆனந்தி பேசி விட்டாள். பூபதி கட்டுரை எழுதிவிட்டான். ராகவன் உற்சாகமாய்க் காத்திருந்தான். காலையிலிருந்து ஒரு விஷயத்தை பூபதி கவனித்தான். ஆனந்தி, ராகவனைப் பார்ப்பதையோ, பேசுவதையோ தவிர்த்தாள். ஒவ்வொரு முறையும் ராகவன் துவள்வது துல்லியமாகத் தெரிந்தது.

"ஒரு நிமிஷம், உன்கிட்ட பேசணும்"– ராகவன்தான். பூபதி நின்றான். ஆனந்தி மெதுவாய்த் தலை உயர்த்தினாள். வாகனம் அருகின கஸ்தூரி ரங்கா சாலை. தூரத்தில் ஒன்றிரண்டு சைக்கிள்.

ராகவன், பூபதியைப் பார்த்தான். அது விலகிப்போ என்பது போலிருந்தது.

''நான் அப்படிப் போய் நிக்கறேன். பேசிட்டு வாங்க'' என்றான் பூபதி.

''நீங்க இருங்க பூபதி''– அவசரமாய் ஆனந்தி சொன்னாள்.

ராகவனுக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. தெருவையே மேலும் கீழும் இரண்டு முறை பார்த்தான். பூபதிக்கு சங்கடமாக இருந்தது.

"நான் கிரீட்டிங்ஸெல்லாம் அனுப்பிச்சேனே. கெடைச்சுதா?"

"ம்."

"ஒண்ணும் பதிலே போடலே..."

"என்ன போடறது?"

ராகவன் ஸ்தம்பித்தான். மேலே என்ன பேசுவது?

"புடிச்சிருக்கு, புடிக்கலன்னு சொல்லலாமில்ல?"

"சொல்லி என்ன பிரயோசனம்?"

"அப்ப என்ன புடிக்கலையா?"

ராகவன் அழுது விடுவான் போலிருந்தது. ஆனந்தி அவனையே பார்த்திருந்தாள். வழக்கமான அவன் பார்வையின் சோகம், பூபதியைத் தாக்கியது.

''தப்பா எடுத்துக்காதிங்க ராகவன். எனக்கு உங்களைப் புடிச்சிருக்கா, இல்லையாங்கறது இல்ல இப்ப விஷயம். நீங்க இங்க இருக்கப் போறவர். நான் எங்க இருக்கப் போறேன், எப்படி இருக்கப் போறேன், முதல்ல இருக்கவே போறனான்னு தெரியலை. நிச்சயமில்லை. இதுல காதல் எல்லாம் ரொம்ப ஆடம்பரமான விஷயம் ராகவன். நாங்க கனடா போகப்போறோமே தவிர, அங்க போய் என்ன பண்ணப் போறோம், எப்படி வாழப்போறோம்னெல்லாம் தெரியாது. எங்க லைஃபே ரொம்ப அன்சர்டைனா இருக்கு. இதுல எப்படி நான் உங்களைக் காதலிக்க முடியும்?''

ராகவனுக்கு என்ன புரிந்ததோ? பூபதிக்கும் அதிகம் புரியவில்லை. ஆனால், ஆனந்தி தன்னை வெறுக்கவில்லை என்று மட்டும் ராகவன் புரிந்து கொண்டான். அடுத்த இரண்டாம் நாள் ஆனந்தி கனடா போனாள்.

உலகம் சுழலுவது நிற்கவில்லை. அதற்குள் பல மாற்றங்கள். தேசியத் தலைவர் படுகொலை செய்யப்பட்டார். தமிழர்கள் என்ற அரவணைப்பு போய், எங்கும் அகதிகள் என்ற பயம் தொற்றிக் கொண்டதும் அப்போதுதான். இது நடுவே, பூபதிக்கு நெற்றி மேட்டுக்கு மேல் இரண்டு இன்சுக்கு பொட்டல்வெளியும், சின்ன தொந்தியும் ஏற்பட, கம்ப்யூட்டர் கன்சல்டன்ட்டாகி இரண்டு பிள்ளைகளுக்கு அப்பாவுமானான்.

மனைவியின் உறவினர், வகையில் ஒரு கல்யாணத்திற்குப் போனபோதுதான் ராகவனை மீண்டும் பார்த்தான் பூபதி. ராகவனின் தம்பிதான் மாப்பிள்ளை. ராகவன் முன் வரிசையில் சாதுவாய் அமர்ந்திருந்தான். இன்னும் கல்யாணம் பண்ணிக் கொள்ளவில்லையென்றான்.

பூபதிக்கு ஆச்சரியமாயிருந்தது.

"உலகம் சின்னதுடா. என்னிக்காருந்தாலும் ஆனந்தியைப் பார்ப்பேன். கண்டிப்பா அவளைத்தான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்'' என்றான்.

பூபதிக்கு மனம் நிறையப் பிரார்த்தனைகள். பிரார்த்தனைகள் பலிக்குமென்பது ஜெபராஜ் சாரின் போதனை. இன்றளவும் பூபதி அதை நம்பினான். இப்போதைய பிரார்த்தனை: ராகவனுக்கு ஆனந்தி கிடைக்க வேண்டும். ●



# சணலில் சில சாதனைகள்!

**ச**ணல் என்றவுடன் என்ன தோன்றுகிறது? கோணிப்பை - மிஞ்சிப் போனால் தோள் பை. இவ்வளவுதானே?

சென்னை சங்கரா ஹாலில் நடைபெற்ற சணல் கண்காட்சிக்குள் நுழைந்த நமக்குத் தொடர் வியப்புகள்.

சணலில் உருவான புடைவைகள்!

"இது காட்டன், பட்டு, சணல் ஆகிய மூன்றும் இணைந்த புடைவை" என்று ஒரு அசத்தல் தயாரிப்பைக் காட்டினார் அனகாபுத்தூரிலிருந்து வந்து ஸ்டால் வைத்திருந்த சேகர் என்ற இளைஞர்.

சின்னச் சின்ன கீ-செய்ன்கள், பெரிய பெரிய சூட்கேஸ்கள், நாலைந்து அறைகள் உள்ள தோல் பைகள் என்று பலவித அயிட்டங்கள்!

"சணலிலே செய்த இந்த யானை பொம்மைகள் படுவேகமாக விற்றுத் தீர்ந்து விட்டன. இந்த இரண்டு பீஸ்தான் பாக்கி" என்று உற்சாகமாகச் சொன்னார், கல்கத்தாவிலிருந்து வந்துள்ள சந்தோஷ் சந்த்ரலோத்.

கண்காட்சியில் வைக்கப்பட்டிருந்த சில பொருள்கள் "இவை நிஜமாகவே சணலில் உருவானவைதானா?" என்ற சந்தேகத்தை எழுப்பின. விளக்கம் கேட்டபோது, தோல், ரெக்ஸின் போன்றவற்றோடும் அற்புதமாக இணைந்து அந்த கம்பீரம் கிடைத்துள்ளது தெரிய வந்தது.

மிதியடிகள் போன்ற உபயோகமான பொருட்களுக்கும் குறைவில்லை என்றாலும் அதிகம் கவர்ந்தவை, சுவர் அலங்காரப் பொருட்கள். வாரணாசியிலிருந்து வந்து இந்தப் பொருள்களை விற்பனைக்கு வைத்த 'டீசன்ஸ்' என்ற நிறுவனத்துக்கு அமோக விற்பனை! வீடுகள், ஆறுகள் போன்றவை ஒருவித முப்பரிமாணத் தோற்றத்தை அளித்தன. டிரம்ஸ் வாசிக்கும் டொனால்ட் டக், அழகு நடை பயிலும் யானைக் கூட்டம் என்று சில புதிய வடிவங்களையும் பார்க்க முடிந்தது.

"ஒரு அயிட்டத்தை உருவாக்க ஒரு நாளிலிருந்து ஒரு வாரம் வரை ஆகும். தயாரிப்பதில் 90 சதவீதம் ஏற்றுமதி ஆகிவிடும்" என்றார் அங்கிருந்த ஷெட்டி என்ற இளைஞர்.

சணலால் செய்யப்பட்ட ஆடைகளை ஊட்டி, காஷ்மீர் போன்ற பகுதிகளில் அணியத் தொடங்கியிருக்கிறார்களாம். குளிரைத் தாங்கும் திறன் இவற்றிற்கு இருப்பதால்.

ஒருவித பளபளப்பு, சுற்றுப்புறச் சூழலுக்குப் பாதுகாப்பு... ஆனால் கொஞ்சம் பயன்படுத்தியவுடன் தனித்தனி நாராக சணல் காட்சியளிக்குமோ என்ற உறுத்தலும் ஏற்பட்டது.

"பதப்படுத்திய சணலில் அப்படிப்பட்ட குறைபாடு இருக்காது. நீங்கள் வேண்டுமானால் ஏதாவது அறிவியல் மையத்துக்குக் கடிதம் எழுதி விளக்கம் பெறலாம்" என்றபடி ஒரு தாளையும், உறையையும் நீட்டினார்கள் - அவையும் சணலால் உருவாக்கப்பட்டவை!

— ஜி.எஸ்.எஸ்

படங்கள் : ஸ்ரீஹரி


Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager; Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax : 2345621
Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 950/- (Air Mail)

1714 பக்கம்

ரூ.160 மட்டுமே

22ம் பதிப்பு

**Integrated Enterprises (India) Ltd.**

அவர்களின் உதவித்தொகையுடன்

**வர்த்தமானன் வழங்கும்**

**English-English-Tamil Dictionary.**

**ரூ.200 மதிப்புள்ள இந்நூல் ரூ.160 மட்டுமே.**

**மேலும் இச்சலுகையுடன் இலவசமாக ரூ.60 மதிப்புள்ள**

**Letter writing for All Occasions தரப்படும்.**




1714 பக்கம் கொண்ட மிகப் பெரிய அளவில் அமைந்தது. ஓர் இலட்சத்திற்கும் மேலான விளக்கச் சொற்களுடன் கூடியது. ஒவ்வொரு பிரதான சொல்லுக்கும் மிகத் துல்லியமாக-தெளிவாகப் புரியும் வண்ணம் தமிழில் உச்சரிப்புக் கொடுத்துள்ளோம். உச்சரிப்பில் இதுவரை யாரும் செய்யாத புதிய அணுகு முறையை இதில் காணலாம்.! ஒவ்வொரு சொல்லுக்கும் ஆங்கிலத்திலும் தமிழிலும் பொருள் உண்டு. Synonyms & Antonyms - ஒத்த கருத்துடைய & எதிர்மறைச் சொற்கள் Proverbs - பழமொழிகள் Prepositions-இடைச்சொற்கள், Pairs of words - குழப்பம் தராத வகையில் சில சொற்களின் விளக்கங்கள், Abbreviations-சுருக்கக்குறியீடுகள் Physics, Chemistry, Botany, Mathematics, Zoology ஆகியவற்றில் வழங்கும் சொற்களை அந்தந்தத் தலைப்புகளில் காணலாம். அன்றாடம் பயன்தரக்கூடிய சொற்களை தனிப் பட்டியலிட்டுள்ளோம். வீட்டுப் பொருள்கள், மரம், செடி, கொடிகள், காய்கறிகள், பூக்கள், வாசனைப் பொருள்கள், உடலின் உறுப்புகள், உடற்குறைகள், நோய்கள், உறவு முறைகள், பூச்சிகள், விலங்குகள், பறவைகள், நீர்வாழ்வன, நவமணிகள் ஆகிய அனைத்தும் உண்டு. நாள்தோறும் புதிய புதிய சொற்களுடன் வளரும் பொலிவு மிக்கது ஆங்கில மொழி! எனவே புதிய சொற்கள் கடைசியில் இடம் பெற்றுள்ளன.

**இலவசம்**

LETTER WRITING For All Occasions

## Letter Writing For All Occasions (பக்கம் 452)

1. Invitations 2. Congratulations 3. Condolence 4. Enquiry 5. Complaints 6. Apology 7.Real Estate 8. Day-to-day affairs 9. Educational Instituions போன்ற 22 தலைப்புகளில் அமைந்த 180 கடிதங்கள்! **தமிழ் மொழிப்பெயர்ப்புடன்.** வாய்ப்பைத் தருவது கடிதம்; வாணிபம் பெருக்குவது கடிதம்; பிறர் உதவியை நாடுவது கடிதம்; பிறர் கண்ணீர் துடைப்பது கடிதம்; விருந்துக்கு அழைப்பது கடிதம்; வருவேன என்பது கடிதம்; வாரேன் என்பது கடிதம்; புத்தகம் அனுப்புக என்பது கடிதம்; இதோ அனுப்பி விட்டோம் என்பது கடிதம்; இதுவரை யாரும் காட்டாக் கலையினை, இந்நூல் மூலம் உணர்க.

முக்கிய புத்தகக் கடைகளில் இச்சலுகையில் பெறுக் கொள்ளலாம். அல்லது வர்த்தமானன் பதிப்பகம், ஏ.ஆர்.ஆர். காம்ப்ளெக்ஸ், 141, உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை - 17 என்னும் முகவரிக்கு எழுதுக. V.P.P.யில் அனுப்புகிறோம். V.P.P.செலவு (20/-) தனி

INTEGRATED ENTERPRISES (INDIA) LIMITED

E-SHARE

DELTAGRAM

**தமிழகத்தின் முக்கிய புத்தகக் கடைகளில் கிடைக்கிறது**

